# கல்கி

KALKI 9.1.2000
ரூ. 4.50



- விமானக் கடத்தல்:
  - பரபரப்பான பின்னணி விவரங்கள்!
- 'ஹைஜாக்'ஆன பா.ஜ.க. மாநாடு!
- போஃபர்ஸ் விவகாரம் புதைந்து விட்டதா?
  - சி.பி.ஐ. டைரக்டர் ஸ்பெஷல் பேட்டி

# உன்னால் முடிந்ததே உன்னிகிருஷ்ணா!

கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com



அடுத்த இதழ்

# பொங்கல் ஸ்பெஷல்!

இரண்டு புத்தகங்கள்!

மணம்—குணம்—சுவை நிரம்பிய

# உணவு ஸ்பெஷல்!

## நான் நாத்திகனில்லை!

பெரியார்தாசன்

எழுதும்

பரபரப்பான அனுபவத் தொடர்

ஆரம்பம்!



மும்பையில் ஒரே ஆன்மீக அலை! பாந்த்ராவில், உலகின் மிகப் பெரிய சாயி பாபா சிலை (ஒரே மாத்தில் செய்யப்பட்ட 27 அடி சிலை) நிறுவப்பட்டு மகாருத்ர அபிஷேகமெல்லாம் தடபுடலாக நடைபெற்றது. பார்ஸிகள், நவ்ஸாரியிலிருந்து 'அக்னி'யை எடுத்து வந்து, மலபார் ஹில்லிலுள்ள 'கோத்ரெஜ் பாக்'கில் புதிய அக்யாரி (அக்னி கோயில்)யை நிர்மாணித்தார்கள். சாஸ்தா ப்ரீதி, ஐயப்ப பூஜை என்று ஆங்காங்கே அமர்க்களப்படுகிறது. ஒரு ஃபோன் அடித்தால், கிறிஸ்துமஸ் தாத்தா ஸாண்டாகிளாஸ், வீட்டுக்கே வந்து பரிசுப் பொருள்களை (பெற்றோர் முன்னமே வாங்கி வைத்திருப்பவைதான்) குழந்தைகளுக்கு விநியோகித்தார். நோன்பு முடித்த முஸ்லிம்களும் ஆங்காங்கே விருந்தளித்துக் கொண்டிருந்தார்கள். பக்திப் பரவசத்தில் எல்லோரும் அமிழ்ந்திருக்க, ஐயகோ, ஈதென்ன? தாணா, வர்தக் நகரிலுள்ள புதிய கனிஷ்நாத் கோயிலில் தத்த ஜெயந்தி விழாவுக்காக பெரிய அண்டாவில் பிரசாதம் கிளறிக் கொண்டிருந்தார்கள். நாலு வயது 'அக்ஷய்'யுடன் வந்த அவன் அம்மா சிந்து, அவனைத் தனியே விட்டு விட்டு, 'சாய்' குடிக்கச் செல்ல, குழந்தை அண்டாவில் விழுந்து விட்டது! தீக்காயங்களுடன் உயிரிழந்த குழந்தையை எண்ணி என்ன, கண்ணீர் சிந்தி என்ன? அருள்மிகு மும்பை இருள்மிகு மும்பையாகிவிட்டதே!

## தலைக்கு வந்தது

மும்பை ஃபோர்ட் ஏரியாவிலுள்ள ஜேஜே பாய்ஸ் ஸ்கூலில் ஒன்பதாவது படித்துக் கொண்டிருந்த பையன் ஒருவன், புது விதமாக 'ஹேர் கட்' செய்து கொண்டு வகுப்புக்கு வந்திருக்கிறான். கூடப் படிக்கும் 14 வயது ஜயதேவ் கலாபி அவனைக் கிண்டலடிக்க, உடனே இவன் கலாபியின் வயிற்றில் ஒரு குத்து விட்டிருக்கிறான். அவன் மல்லாந்து தரையில் விழ, தலை மரத்தாலான தரையில் மோதி, சிதறியிருக்கிறது. ஜயதேவ், இரண்டு பெண்களுக்குப் பின், பெற்றோர் பத்து வருடங்கள் தவமிருந்து பெற்ற பிள்ளை! திட்டமிட்டு கொலை செய்யவில்லை என்ற காரணத்தால், குற்றவாளியை 'ரிமாண்ட் ஹோமில்' வைத்திருக்கிறார்கள். ஒரு பிடி முடிக்காக இப்படி ஒரு மரண அடியைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களோ?




• 'முடி' விபரீதம்

## ஜூஹி பெயரில் ஒரு பாட்டு!

## 'சிக்'(ங்)க மாட்'டான்'

ஒரு வார காலமாக ஜட்ஜ் 'சிங்'கை வலைவீசித் தேடிக் கொண்டிருக்கிறார்கள். கராச்சியிலிருக்கும் மும்பையின் பிரபல 'டான்' ஆன சோட்டா ஷகீலிடம், தனக்குச் சேர வேண்டிய 40 லட்சம் ரூபாயை, ஸயான் ஹோட்டல்காரர் ஒருவரிடமிருந்து வசூலித்துத் தரும்படி இவர் பேசிய பேச்சுக்கள் அடங்கிய காஸெட், சிக்கியிருக்கிறது!

"நான் – பெயிலபிள் வாரண்ட்"டை வைத்துக் கொண்டு, காவல் துறை தவியாய் தவிக்கிறது. ஜட்ஜ் ஒளிந்து கொண்டு தண்ணி காட்டுகிறார். இடையே தாவூத் வேறு தூது அனுப்பியிருக்கிறான் – மும்பை குண்டு வெடிப்பு விவகாரங்களிலிருந்து தனக்கு முக்தி

அளித்து விட்டால், சரண்டர் ஆகி விடுவ தாக! அதெல்லாம் முடியாது என்று விட்டு, அவனுக்கும் குறிவைத்திருக்கிறது அரசு. ஹூம்... ஜட்ஜையே பிடிக்க முடியவில்லை! டானா மாட்டுவான்?

கைவசமுள்ள ஒரே க்ளூ - குடும்பத் தலைவர் பெயர் பாட்சா பயில்வான்! ஒரு சமயம் தமிழ் நாட்டில் செட்டிலான வட இந்தியர்களாய் இருந்தால்? நினைவிருக்கட்டும்; பரிசில் ஒரு பாதி!

## குடும்பப் பரிசு

முதலில் நிபந்தனை; அப்புறம் நியூஸ் - கீழுள்ள ஃபோட்டோவிலுள்ள குடும்பத்தின ருக்கு 1000 பவுண்டுகள் பரிசு கிடைத்தால், அதில் ஒரு பாதி நமக்கு அளித்துவிட வேண் டும்.

சும்மாவா பின்னே? ஜான் மார்ஷல் என்ற பிரிட்டிஷ்காரர் இந்தக் குடும்ப ஃபோட் டோவை ஆக்ராவுக்கு சுற்றுலா போயிருந்த போது எடுத்திருக்கிறார். 'Family Photographer of the year' போட்டியில் வென்று 500 பவுண் டுகள் பரிசும் பெற்று விட்டார். போட்டி விதிகளின்படி, 'க்ளிக்'கப்பட்ட குடும்பத் துக்கும் 1000 பவுண்டு பரிசு உண்டாம். மார் ஷல் கொடுத்த அட்ரசை வைத்துக் கொண்டு அங்கிருக்கும் இந்திய எம் பெஸியால் இவர்களைத் தேடிக் கண்டு பிடிக்க முடியவில்லை.

## இந்திய மன(ண)ம்!

ஜூஹி சாவ்லாவை கிட்டத்தட்ட ஒரு வருடமாகக் காணாமல் தவிப்போருக்கு ஒரு நற்செய்தி; சிகாகோவில், இந்தியர்கள் நிரம்ப வசிக்கும் பகுதியிலுள்ள ஒரு கடையில், இவ ருடைய ஃபோட்டோவைப் பார்த்து விட்டு ஒரு "ராக் பாண்ட்" பரவசமாகி விட்டது. தங்களுடைய அடுத்த ஆல்பமான "திஸ்"ஸில் ஒரு பாட்டுக்கு "ஜூஹி சாவ்லா" என்று பெயர் வைத்து விட்டது! வேடிக்கை என்ன வென்றால் குழுவில் ஒருவர் கூட இந்தியர் இல்லை! உடலால் இந்தியராக இல்லாவிட் டாலும், உள்ளத்தால் இந்தியராக உள்ளனரே! பை த வே ஜூஹி, ஷாருக்கானுடன்



•காஸ்ட்லி போட்டோ!



• ஜூஹி சாவ்லா

இணைந்து, தயாரித்து, வெளியிடப் போகும் படத்தின் பெயர் "ஃபிர் பீ தில் ஹை ஹிந்துஸ் தானி..." அதாவது... "ஆனாலும் மனதளவில் இந்தியர்தானே...?"

பிகு : WLDP தெரியுமா? World's Longest dance partyதான்! தில்லியில் MTVகாரர்கள் நடத்திக் காட்டினார்களா மூன்று நாளைக்கு? உடனே V சானல்காரர்கள் கோவாவில் நடத்தப் போகிறார்கள் 12 நாட்களுக்கு! அடுத் தது NSDPயாயிருக்குமோ? அதாவது Non Stop Dance Party! இதெல்லாம் NSNS (Non Stop Non-sense) என்பவர்கள் அடுத்த மிலெனியத் திற்குப் போகத் தகுதியில்லாதவர்கள்!

— ஜெயஸ்ரீராஜ்

**மும்பை மசாலா :**

• கடத்தப்பட்ட விமானம்



# விமானக் கடத்தல்: பின்னணி பயங்கரம்!

• அம்ருத்சரில் காத்திருந்த கமாண்டோக்கள்



இந்திய விமானத்தைக் கடத்திய தீவிரவாதிகளின் பின்னணியில், சர்வதேச இஸ்லாமிய தீவிரவாதக் குழுக்கள் இருக்கின்றன என்பது ஊரறிந்த ரகசியம்.

'அகண்ட இஸ்லாம்' என்கிற கனவை நனவாக்குவதே தங்கள் லட்சியம் என்று சொல்லிக்கொண்டு இயங்குகிற ஒஸாமா பின் லேடன் மற்றும் ஆப்கன் தலிபான் குழுக்கள், இந்தியா, ரஷ்யா, அமெரிக்கா ஆகியவைவயே தங்கள் விரோதிகள் என்று பகிரங்கமாக அறிவித்திருப்பதற்கும் இந்த விமானக் கடத்தலுக்கும் நெருங்கிய தொடர்பிருப்பதை யாரும் உணர்ந்து கொள்ள முடியும்.

சர்வதேச பயங்கரவாதியான பின் லேடனின் வலைப் பின்னலில் ஐ.எஸ்.ஐ. தலிபான் தீவிரவாதக் குழுக்கள் மற்றும் போதைப் பொருள் மாஃபியா கும்பலும் இணைந்து, சர்வதேச அளவில் பயங்கரவாத சங்கிலித் தொடர் ஒன்றை ஏற்படுத்தியிருக்கின்றன. இதன் செயல்பாடுகளில் ஒன்றுதான் நமது



• தீவிரவாதிகள் விடுவித்த பெண்கள்

• விமானத்திலிருந்து வெளியே வந்த தீவிரவாதி



விமானம் கடத்தப்பட்ட விஷயம்.

ஆப்கானிஸ்தானத்திலுள்ள தலிபான் தீவிரவாதிகள், தன்னிச்சையாக அறிவித்துக் கொண்டதுதான் தலிபான் அரசு. இதை, சௌதி அரேபியா, ஐக்கிய அரபு எமிரேட்ஸ், பாகிஸ்தான் ஆகிய நாடுகள் தவிர இந்தியா உள்பட வேறு எந்த நாடும் அங்கீகரிக்கவில்லை. இந்த நிலையில், கடத்தப்பட்ட விமானத்திலுள்ள பயணிகள், தீவிரவாதிகளால் தாக்கப்பட்டால், தங்கள் அதிரடிப் படையினர் உடனடியாக விமானத்துக்குள் புகுந்து, தீவிரவாதிகளைத் தாக்குவார்கள் என்று அறிவித்தது தலிபான் அரசு. இதற்குக் காரணம், தங்களின் அறிவிப்பால், தங்கள் அரசை மறைமுகமாகவாவது இந்தியா அங்கீகரிக்கும் என்கிற நப்பாசையே தவிர, வேறொன்றுமில்லை.



• நெஞ்சை உருக்கும்...

மேலும், வரும் மாதங்களில் அமெரிக்க அதிபர் இந்தியா வரவிருக்கிறார். அப்போது அமெரிக்கா, இந்தியா, ரஷ்யா ஆகிய மூன்று நாடுகளும் சர்வதேச பயங்கரவாதத்துக்கு எதிராக ஒன்று சேர்ந்து செயல்படுகிற வாய்ப்பு இருப்பதாக பயங்கரவாதக் குழுக்கள் எதிர்பார்க்கின்றன. இப்படியொரு கடத்தல் செய்வதன் மூலம், அந்த வாய்ப்பைத் தாற்காலிகமாகவாவது ஒத்திப் போடச் செய்யலாம் என்கிற தப்பான எதிர்பார்ப்பிலும் தீவிரவாதிகள் செயல்பட்டிருக்கலாம் என்றும் சொல்லப்படுகிறது.

இந்தக் கடத்தலில் ஈடுபட்ட தீவிரவாதிகளுக்கும் பாகிஸ்தான் அரசுக்கும் தொடர்பிருக்கிறது என்பதிலும் சந்தேகமில்லை. 'இஸ்லாம் முக்தி முன்னணி' என்ற அமைப்பு, கடத்தலுக்குத் தாங்கள்தான் காரணம் என்று ஓர் அறிக்கை வெளியிட்டது அல்லவா...? அந்த முன்னணி, இந்தியாவிலிருந்து காஷ்மீரைப் பிரிப்பதற்காக இயங்கிக் கொண்டிருக்கும் தீவிரவாத இயக்கங்களின் நிழல் வேலை



•... சோகம்





• தீவிரவாதிகள் விடுவிக்கக் கோரும் மவ்லானா மசூத் அசார், முஷ்டாக் அகமது சர்கார்

''ஒரு கேரக்டரில் நடிச்சு 'க்ளிக்' ஆயிட்டா அதே மாதிரி கேரக்டர்களாகத்தான் கடைசி வரைக்கும் நடிக்கணும் தமிழில். அதே மாதிரி ஒரு கதை சக்ஸஸ் ஆயிடுச்சின்னா, அது போரடிக்கிற வரைக்கும் விடமாட்டேங்கறாங்க. ஆனா மலையாளத்தில் அப்படியில்லை. புதுப் புதுக்கதைகளும், புதுப் புதுக் கேரக்டர்களுமா, முயற்சி பண்ணிப் பார்க்கறாங்க'' என்கிறார் கௌசல்யா. இந்த ஈரக்காற்று இப்போது மலையாளக் கரை ஓரமாய் வீச ஆரம்பித்திருக்கிறது. அதனால்தான் மேற்சொன்ன பாராட்டும், புகழுரையும்!



புதிதாக கால்ஷீட் கேட்டு வருபவர்களை 2001-வரைக்கும் காத்திருக்கச் சொல்கிறார் ஜோதிகா. கோலிவுட்டைப் பொறுத்தவரை இந்தப் புது வருஷம் ஜோதிகாவுடையதுதான். நடிக்க வந்து, இரண்டே படங்களில் சம்பளத்தைப் பதினைந்து லட்சம் வரைக்கும் உயர்த்திய நடிகை அநேகமாக இவராகத்தான் இருக்கும். கால்ஷீட், சம்பள விஷயங்களை மற்றவர்கள் பார்த்துக் கொண்டாலும், கதை கேட்கிற விஷயத்தில் யாரையும் நம்பாமல் தானே முடிவெடுக்கிறார் ஜோதிகா. ''ஸ்ரீதேவிக்குப் பின் என்னை அதிகம் கவர்ந்தவர் ஜோதிகா தான்'' – இப்படிச் சொன்னவர் யார் தெரியுமா? குஷ்பு!



ஆரம்பக் காலங்களில் தன்னை டூ-வீலரில் உட்கார வைத்துக் கொண்டு கம்பெனி கம்பெனியாக ஏறி சிபாரிசு செய்தவர்களைத் தேடிப் பிடித்து கௌரவித்து வருகிறார் அஜீத். தனியார் தொலைக்காட்சி ஒன்றில் பணியாற்றிய சுரேஷ் சந்திரா என்பவரைத் தற்போது அழைத்து வந்து தன்னிடம் மானேஜராக வைத்துக் கொண்டுள்ளார். இன்னும் சிலரை அழைத்துப் பொருளுதவி செய்ததோடு, ''உங்களுக்கு என்ன வேணுமோ கேளுங்க... செய்யறேன்'' என்றிருக்கிறார் திறந்த உள்ளத்தோடு. ஏணியை உதைப்பவர்கள் என்று யார் சொன்னது சினிமாக்காரர்களைப் பார்த்து?



— அமுதன்

களோடு தொடர்பு கொண்ட அமைப்பு. இதற்கு பாகிஸ்தானின் ஆதரவு இருப்பதால், இந்தக் கடத்தலின் பின்னணியிலும் பாகிஸ்தான் இருக்கத்தான் வேண்டும் என்பதே ராஜ தந்திரிகளின் கணிப்பு.

இந்தச் சூழ்நிலையில் ''அமெரிக்க அதிபர் இந்தியா வரும்போது சில 'அதி முக்கியமான' ஒப்பந்தங்கள் அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்குமிடையில் கையெழுத்தாகலாம்!'' என்று நம்மிடம் சொன்னார் பிரதமரின் முதன்மைச் செயலாளரான ப்ரஜேஷ் மிஷ்ரா. அந்த ஒப்பந்தங்களில் ஒன்று, சர்வதேச தீவிரவாதத்துக்கு எதிராக இரு நாடுகளும் இணைந்து செயல்படுவது என்பதில் சந்தேகமேயில்லை. இதன் காரணமாக, இந்தக் கடத்தல் மிகப் பெரிய சோகத்தை ஏற்படுத்தினாலும், அதனால் சர்வதேசத் தீவிரவாதத்துக்கு எதிராக, இந்தியாவும் அமெரிக்காவும் இணைந்து செயல்படுகிற ஒரு நன்மையையும் விளைவித்திருக்கிறது என்பதில் ஓர் ஆறுதல்.

இந்த ஆறுதலுக்கு மத்தியில் ஓர் உறுத்தலும் இல்லாமலில்லை. இப்படியொரு கடத்தல் நிகழ்ந்தும் உள்துறை அமைச்சர் அத்வானி வாயையே திறக்காதது ஏன்? ''எல்லாவற்றையும் நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். வேறு யாரும் இந்த விஷயத்தில் அபிப்பிராயமோ, கருத்தோ கூறத் தேவையில்லை!'' என்று பிரதமர் வாஜ்பாயும் வெளியுறவுத் துறை அமைச்சர் ஜஸ்வந்த் சிங்கும் இரட்டை நாயனங்களாக அறிக்கை விட்டதுதான் அத்வானியைப் புண்படுத்தி விட்டது.

இதற்கிடையில் குழம்பிய குட்டையில் மீன் பிடிக்கிற விஷயத்தில் எதிர்க்கட்சிகளும் சோர்ந்து போய்விடவில்லை. பிணைக் கைதிகளின் உறவினர்களைத் தூண்டிவிட்டு, ஜஸ்வந்த் சிங்கின் பத்திரிகையாளர் சந்திப்பில் கலாட்டா செய்ய வைத்தும் பிரதமர் இல்லத்தின் முன் தர்ணா செய்ய வைத்தும் எதிர்க்கட்சியினரும் அரசியல் குளிர் காய்ந்தது மகா கேவலம்.

— வெங்கட்

படங்கள் – நன்றி : தினமலர்

# திருவரசு புத்தக நிலையம்



## வழங்கும்

## புதிய புத்தகங்கள்

| நூலின் பெயர் | | ஆசிரியர் | விலை |
|---|---|---|---|
| திருப்புகழ் (பாடல்கள் முழுவதும்) | | | 150.00 |
| கண்ணதாசன் கண்ட தெய்வதரிசனம் | | ஆர். சீனிவாசமூர்த்தி | 30.00 |
| திருமூலரின் திருமந்திர விருந்து | | திரு. சம்பந்தம் | 125.00 |
| புறநானூறு—புதிய தளிர்கள் | | கு. ராஜவேலு | 190.00 |
| கல்கி நினைவுகள் | | பகீரதன் | 160.00 |
| சிந்தனைச் சிகரங்கள் | (கட்டுரைத் தொகுப்பு) | சை.வே. சிட்டிபாபு | 40.00 |
| உலக தத்துவ ஞானியர் | | டாக்டர் வை. தட்சிணாமூர்த்தி | 30.00 |
| கவிஞர் ஷேக்ஸ்பியர் | | ,, | 30.00 |
| இனிய தெய்வீக வாழ்க்கைக்கு சிந்தனைத் துளிகள் | | டாக்டர் கே.கே இராமலிங்கம் | 30.00 |
| பகவத்கீதை (விளக்கவுரை) | | மகாகவி சுப்பிரமணிய பாரதியார் | 30.00 |
| திருஞானசம்பந்தர் வாழ்வும் வாக்கும் | படங்களுடன் | திருவரசு | 22.00 |
| மாணிக்கவாசகர் வாழ்வும் வாக்கும் | ,, | ,, | 25.00 |
| திருநாவுக்கரசர் வாழ்வும் வாக்கும் | ,, | ,, | 20.00 |
| சுந்தரர் வாழ்வும் வாக்கும் | ,, | ,, | 25.00 |
| உடல்நலம் காக்க உயர்ந்த வழிகள் | | அமுதா கணேசன் | 50.00 |
| மங்கையர் சிறக்க மணியான யோசனைகள் | | ,, | 50.00 |
| பெண்களுக்கு ஒரு வழிகாட்டி | | கே.என். ராமசந்திரன் | 30.00 |
| சோழராணி – பாகம் 1 | நாவல் | ராஜகுரு | 50.00 |
| சோழராணி – பாகம் 2 | ,, | ,, | 55.00 |
| மறுபடியும் பொழுது விடியும் | ,, | ஜோதிர்லதாகிரிஜா | 65.00 |
| தனிமையில் இனிமை கண்டேன் | ,, | ,, | 30.00 |
| ஈர்ப்பு | ,, | தாமரை மணாளன் | 42.00 |
| காற்றாய் வருவேன் | ,, | இந்திரா சௌந்தர்ராஜன் | 42.00 |
| செந்தாமரை வாடாது | ,, | பி.வி.ஆர். | 35.00 |
| மனம் ஓர் ஆலயம் | (கட்டுரை) | பொன் பரமகுரு | 32.00 |
| பூப்பூவாய்ப் பூக்கிறது புதுக்கவிதை | | டாக்டர் பூவண்ணன் | 42.00 |
| சிந்தையை அள்ளும் சிலம்பு | | டாக்டர் பூவண்ணன் | 40.00 |
| திருக்குறள் சிந்தனை—பொருட்பால் | பகுதி 2 | டாக்டர் சுப. அண்ணாமலை | 90.00 |
| சூரியச் சுற்றுலா (கலீலியோ முதல் வாயேஜர் வரை) (ரூபாய் பத்தாயிரம் பரிசு பெற்ற நூல்) | | நெல்லை சு. முத்து | 40.00 |
| பெண்களுக்கு ஆலோசனைக் களஞ்சியம் | | கங்கா ராமமூர்த்தி | 60.00 |

V.P.P.யில் மூலம் புத்தகங்களை பெற கடிதம் எழுதவும். V.P.P. தபால் செலவு தனி.
திருவரசு புத்தக நிலையம் விலைப்பட்டியல் பெற கடிதம் எழுதுங்கள்.

## திருவரசு புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு, பாண்டி பஜார் (தபால் நிலையம் அருகில்)
தியாகராய நகர், சென்னை - 600 017.

சுதா ரகுநாதன் 'எந்நாளுநேகே' பாட ஆரம்பித்த போது ஃப்ளைட் ஐஸி 814 இல் அகப்பட்டுக் கொண்ட பிரயாணிகள் ஞாபகம் வந்து ரொம்ப ஹிம்சித்தது. (28.12.99)

"எத்தனை காலம்தான் நீ காப்பாற்றாமல் பேசாமல் இருக்கப் போகிறாய் ராமா! உன்னைக் கேட்பாரே இல்லையா?" என்று தியாகராஜர் தன் இஷ்ட தெய்வத்தை நோக்கி சுபபந்துவராளி ராகத்தில் தொடுக்கும் கதறல்



களைகள்! திவிரவாதிகளைக் கஷ்டப்பட்டு ஒதுக்கிவிட்டு தியாகராஜரிடம் வந்தால்...

அவருடைய கதறலின் உருக்கத்தைக் கீர்த்தனையில் காணவே காணோம்.

சோர்ந்து தேய ஆரம்பித்திருந்த குரலுடன் போராடிக் கொண்டிருந்த சுதா, அனுபல்லவியில் நிரவலை எடுத்துக் கொண்ட போது அதன் சௌக்ய குறைவு கச்சேரியின் அமைப்புக்கு ஸ்பீட் பிரேக்கராகி விட்டது. லால்குடி விஜயலக்ஷ்மியின் வயலின் எதிரொலியால் நெம்பித் தள்ளப்பட்டு முன்னேறி, கற்பனை ஸ்வரங்கள் பாட ஆரம்பித்து, சுதா அவசரமாக இரண்டாம் காலத்துக்கு மாற, 'இந்தக் கீர்த்தனைக்கு இரண்டாம் காலம் ஸ்வரம் பாடாவிட்டால் என்ன?' என்ற கேள்வியுடன் 'இந்தக் கீர்த்தனையைக் கச்சேரியின் மூன்றாவது உருப்படியாகப் போடாவிட்டால் என்ன?' என்கிற இணைக் கேள்வியும் சேர்ந்து கொண்டது.

மூன்று காலங்களில் தோடி வர்ணமும், அதைத் தொடர்ந்து ப்ருகாக்களால் ஒப்பனை செய்து, கற்பனை ஸ்வரங்களால் காட்சிப் படுத்திய 'கஞ்சதளாயதாக்ஷி'யும் (கமலா மனோகரி) பாடியவர் 'எந்நாளு'வை அடுத்து 'மாமவது ஸ்ரீ சரஸ்வதி' என்று ஹிந்தோளத்தில் வேகம் பிடித்தார் (சரஸ்வதி என்று ஃபயர் எஞ்சினை அழைப்பது போல் நிறுத்தலாமா!)

பைரவி ஆலாபனை விச்ராந்தியான அழகுடன் ஆரம்பித்து தார ஸ்தாயியைத் தொட்டதும் அவிழ்த்து விட்ட கன்றுக்குட்டி போல் ஓடிப் போய்விட்டது! ஒரு பண்பட்ட கலைஞர் ஆலாபனை முடிக்கும்போது, அதைத் தொடரப் போகும் க்ருதியின் ஸ்வரூபம் அரங்கில் வடிவம் கொண்டு விடும்; அல்லது அந்த ஆலாபனையின் அவாதி ஸ்வரூபம் வந்து குடிகொள்ளும். அன்றைய பைரவிக்குப் பின்-மியூசிக் அகடமி அரங்கில் மேடையில் தேடியபோது சுதா ரகுநாதன் மட்டுமே கிடைத்தார்!

சுதாவின் சுருதிக்கு இனிமை குன்றாமல் வயலின் ஆதரவு தருவது பெரிய சவால். விஜயலக்ஷ்மி தமது பொறுப்பை வெற்றிகரமாக நிறைவேற்றி பாடகர் நழுவ விட்ட பைரவி ஸ்வரூபத்தை அலட்டலின்றித் தேடிப் பிடித்து வந்து நிறுத்தி விட்டார்.

'சிந்தயமாம் கந்த மூல கந்தம்' என்ற பஞ்சலிங்க க்ஷேத்திர கீர்த்தனையை பைரவியில் தேர்ந்தெடுத்து, கஷ்டமான எடுப்பில் (உத்துங்க கமனீய) ஸ்வரம் பாடி, கிட்டத்தட்ட கீர்த்தனை நீளத்துக்கு ஒரு தீர்மானத்தையும் வைத்தபோது தீக்ஷிதர் கீர்த்தனைக்குரிய கம்பீரம் காணாமல் போய் விட்டது.

மோகன ராக ஆலாபனை பிரமிப்பூட்டும் வகையில் வளர்ந்து உருக்கொண்டு முடிவுற்ற போதோ பாடப்படாத மோகனம் நிறைய மிச்சமிருப்பதாகவே தோன்றியது. (இம்முறையும் விஜயலக்ஷ்மிக்குக் கன்றுக்குட்டியை இழுத்துக் கட்டும் வேலை! கைதட்டலை அள்ளிக் கொண்டு விட்டார்)

கற்பனை ஸ்வரங்களின் ஜிலுஜிலுப்புடன் 'நன்னுபாலிம்ப'வை முடித்து தனியாவர்த்

தனத்துக்கு வாய்ப்புத் தர, செவிப்பறைகளைச் சோதிக்கும் ஒலிப் பிரளயமாக திருவாரூர் வைத்யநாதன் ஆரம்பித்தார்.

ஆவர்த்தனம், லய நயங்களைக் காட்டிலும் லய வலிமையை வெளிப்படுத்துவதில்தான் குறியாய் இருந்தது.

காப்பிக்கு மூன்று தடவை சர்க்கரை போட்டது போல் கானடாவில் ராகம் தானம் பல்லவி! துக்கடாக்களில் 'குறையொன்று மில்லை' பாடியபோது கொடுத்த சாஹித்யபாவத்தை மட்டும் கச்சேரி நெடுக விரவ விட்டிருந்தால்...? ஏங்காமலிருக்க முடியவில்லை.

குரல் இனிமையைப் பிரதான மூலதனமாக்கி களத்தில் இறங்குவோருக்கு ப்ருகாக்களின் நலிவும் தொண்டையின் ஒத்துழையாமையும் பரம விரோதிகள். இவற்றால் ஹைஜாக்காகி விடுவதற்கு முன் சுதாரித்துக் கொள்வது நல்லது.

* * *

உண்ணிகிருஷ்ணனின் சங்கராபரண ஆலாபனையை வர்ணிப்பது கஷ்டம். ஸ்படிக சுத்தமான, ஜீவனுள்ள கார்வைகளின் அழகைச் சொன்னால், தேடித் தந்த அதன் அரிய நெளிவு சுளிவுகள் விட்டுப் போய் விடும். தேர்ந்தெடுத்த கன சஞ்சாரங்களைச் சொன்னால் அதே வலிமையுடன் வெளிப்பட்ட துரித சஞ்சாரங்கள் விட்டுப் போய் விடும்.

தனித்தனியாகச் சொல்ல வேண்டாமே... மொத்தத்தில் மிக மிக சிரத்தையாக, உள்ளார்ந்த ஈடுபாட்டுடன் தொடுக்கப்பட்ட கதம்ப மாலை!

மேல்ஸ்தாயி காந்தாரத்தை எட்டிய பிறகு சற்றே மிதமிஞ்சினாலும் கட்டுப்பாட்டுடன் காம்பீர்யத்துக்குத் திரும்பி விட்டார் உண்ணி.

உண்ணிக்கு முகத்தையும் ரசிகர்களுக்கு ஏறத்தாழ முதுகையும் காட்டி உட்கார்ந்திருந்த வயலின் வித்வான் ஆர்.கே. ஸ்ரீராம்குமார் சப்புக்கொட்டாத குறையாக அந்த சங்கராபரணத்தை வாங்கி வாசிக்க, தொடர்ந்து வந்த 'எந்துகு பெத்தல' கீர்த்தனையில் ராக பாவத்துடன் சாஹித்ய பாவமும் லய வாத்யங்களின் (மிருதங்கம் : மன்னார்குடி ஈச்வரன், கடம் : வி. சுரேஷ்) போஷிப்பும் சேர... ஸ்ரீ ராமனைத் தேரிலேற்றி பவனி விட்டது போன்ற அழகு.

ஆலாபனையில் வெளிவராத புதிய கற்பனைகளில் லயப் பிடிப்புடன் நிரவல்; ஸ்வரம் பாடிய போதும் வேறுபட்ட சங்கராபரணத்தின் அழகுகள், அந்த ராகத்தின் பிரவாகத்துக்கு மட்டுமின்றி அதில் உண்ணி கிருஷ்ணன் 'குடைந்து நீராடி'யதற்கும் சாட்சி!

சங்கராபரணம் பெற்ற இந்தப் பொலிவு கச்சேரி முழுதும் வியாபித்து சிறப்புச் செய்தது மிகப் பெரிய விஷயம். நாட்டை ராக வர்ணத்துக்குப் பின் 'கருணமூலே' (சக்கரவாகம்), 'வாடேரா தெய்வமு' (பந்துவராளி) 'நீசித்தமு' (தன்யாஸி) என்று தியாகராஜர் ஸ்பெஷலாகவே அமைத்து களைகட்டச் செய்து விட்டார் பாடகர். தன்யாஸி ஆலாபனை முதிர்ச்சியுடன் ஆழமான பிடிப்பும் தழைவுமாக உருக்கொண்டு கம்பீரத்தை நிலைநாட்ட, அடுத்து வந்த 'ரங்கநாயகம் பாவயே' நாயகியின் நளினமான நயத்தைத் துல்லியமாக வடித்தது. இந்த தீக்ஷிதர் கிருதியின் ராஜகோபுர அமைப்பைக் கட்டிக் காத்துத் தர, சாஹித்யத்தையே பொழிந்த வயலினின் ஆதரவு பேருதவி செய்தது.

மீண்டும் தியாகராஜருக்கே திரும்பினார் பாடகர். விறுவிறுப்பாக 'பதவினி' (ஸாளக பைரவி) அதன்பின் 'எந்துகு பெத்தல' என்று கச்சேரியை வளர்த்தார். ஈச்வரனும் சுரேஷும் தனியாவர்த்தனத்தை கீர்த்தனையின் விரிவாக்கம் போல் அழகு சிதறாமல் வாசித்து முடித்தபோது மணி 6:22!

இருபத்து மூன்று நிமிடங்களே பாக்கியிருக்க, (மியூசிக் அகாடமியில் தாட்சண்யம் பாராமல் திரையை இறக்கி விடுவார்களே!) உண்ணிகிருஷ்ணன் கீரவாணியில் ராகம்-தானம்-பல்லவி எடுக்க... 'சரிதான்! இதுவரை வியர்வை சிந்த உழைத்துக் கட்டிய தேரில் ரேஸ் குதிரையைப் பூட்டி தலைதெறிக்க ஓட விடப் போகிறாரே' என்று கவலையாகி விட்டது.

அரபுக் குதிரைதான் அந்தப் ஆர்-டி-பி! ஆனால் லகானை உறுதியாய்ப் பிடித்து கச்சிதமாகத் தேரோட்டத்தை முடித்துக் காட்டினார் உண்ணிகிருஷ்ணன்.

ஆத்மார்த்தமும், திறமையும், ஆழ்ந்த ஞானமும் அந்தக் கச்சேரி முழுதும் வியாபித்தன. உன்னால் முடியும் உண்ணிகிருஷ்ணா என்று போன வருடம் இதே ஜனவரி இரண்டாவது வாரத்தில் தாளாத ஆதங்கத்துடன் எழுதினேன். 'உன்னால் முடிந்ததே உண்ணி கிருஷ்ணா!' என்று இப்போது ஆனந்தம் மேலிட எழுதுகிறேன்...

இசையின் ஆதாரப் பண்புகளைத் தேடும் இளமையின் வெற்றி இது... திறமையின் வெற்றி, உழைப்பின் வெற்றி! பெருமை முழுதும் உண்ணிகிருஷ்ணனுக்கே!

அட்டை வண்ணப்படம் : **யோகா**

உள் படங்கள் : **ரவிசங்கரன்**





ஆதரவற்ற பெண் குழந்தைகளின் புகலிடம்

# வேதாரண்யம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் வேண்டுகோள்

பேரன்புடையீர்,

புதிய யுகம், புதிய ஆயிரத்தாண்டு, புத்தாண்டு, பொங்கல் வாழ்த்துக்கள்!

கடைகோடி கிராமப்புறத்தில் காந்தியச் செம்மல் வேதாரண்யம் உப்பு சத்யாகிரஹ தியாகி சர்தார் வேதரத்னம் அவர்களும் அவர்தம் ஒரே மைந்தர் பத்மஸ்ரீ வே. அப்பாகுட்டி அவர்களும் இந்திய சுதந்திரத்திற்கு முன்பே (1946) தொடங்கிய மகளிர் தொண்டு நிறுவனமான கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் என்ற எளிய சமுதாயத்தில் வாழும் சுமார் 3,000 பெண் குழந்தைகள் சார்பில் இந்த வேண்டுகோளை வைக்கிறோம்.

பெருந்தலைவர்களான, பூஜ்ய விநோபாபாவே தொடங்கி வைத்த கோசாலை, ராஜாஜி தொடங்கி வைத்த அன்னபூர்ணாலயம், முதல் பார்லிமெண்ட்சபா நாயகர் ஜி.வி. மாவ்லங்கர் தொடங்கி வைத்த கலைமகள் நிலையம், சி. சுப்ரமண்யம் அவர்கள் தொடங்கி வைத்த நசிகேத நிவாஸ், காமராஜ், ஆர். வெங்கட்ராமன் ஆகியோர் தொடங்கி வைத்த குடிநீர் திட்டம் ஆகியவற்றை பெற்று அவர்கள் நல் ஆசியுடன் காந்திய வழியில் வாழ பயிற்சி எடுக்கிறோம்.

அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் மற்றும் கோவை அவிநாசிலிங்கம் மனையியல் பல்கலைக்கழக வேந்தர் டாக்டர் திருமதி. ராஜம்மாள் தேவதாஸ் போன்ற சான்றோர் பலர் கொண்ட அறங்காவலர் குழுவால் நமது நிறுவனம் நிர்வகிக்கப் பெறுகிறது.

கிராமப்புற ஏழை எளிய ஏதிலிப் பெண் குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம் வசதி, கல்வி, தொழிற்கல்வி, (ஆஃப்செட் அச்சுப்பள்ளி, தொலைக்காட்சி கட்ட-பழுது நீக்க, கம்யூட்டர் கட்ட-பழுது நீக்க, மின்னணு சாதனங்கள் செய்ய சிவில் ட்ராப்ட்ஸ்மன், ரேடியோ டி.வி. ஆடை தயாரித்தல், பசு பராமரித்தல், சித்தவைத்யம், ஊதுவத்தி, செவிலியர், அலுவலக நிர்வாகம் போன்ற பயிற்சிகள்) ஆகியன தந்து 53 ஆண்டுகளாக ஆதரிக்கும் குருகுலம் மகளிர் தொண்டு நிறுவனத்திற்கு ஆதரவு தாருங்கள்.

ஆதரவற்ற பெண்களின் வாழ்வில் மகிழ்ச்சி, மலர்ச்சி, வாழ்க்கையில் பிடிப்பு ஆகியன ஏற்படுத்தித் தர உங்கள் அன்பளிப்புகளை, நன்கொடைகளை பொருளாகவோ, தொகையாகவோ அனுப்பி உதவுங்கள். ஆதரியுங்கள். மகிழுங்கள்.

**புதிய யுகம், புதிய ஆயிரத்தாண்டு, புத்தாண்டு, பொங்கல் நல்வாழ்த்துக்கள்!**



நிறுவனம் அமரர். சர்தார். **வேதரத்னம்** தபால்தலை

| | | |
|---|---|---|
| ராஜாஜி திறந்து வைத்த அணையா அடுப்பு நமது அன்னபூர்ணாலயத்தின் ஒருநாள் உணவுச் செலவு (4 வேளைகள்) (600 பேர்) | ரூ. | 12,000/= |
| ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு (உணவு, உடை, கல்வி) செலவு | ரூ. | 6,000/= |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்புச் செலவு | ரூ. | 3,60,000/= |
| ஒரு மாணவிக்கு ஒரு ஆண்டிற்கு ஆகும் பராமரிப்பு செலவை வைப்பு நிதியாக வைத்து வட்டி மூலம் தொடர்ந்து ஏற்று ஆதரிப்பதற்கு | ரூ. | 60,000/= |
| சுமார் 50 பசுக்களை ஒருநாள் பராமரிக்க செலவு | ரூ. | 1,500/= |

*எவ்வளவு சிறிய தொகையானாலும் ஏற்றுக் கொள்கிறோம்.*

கல்வி நிலைய, உணவுப் பொருள், ஆடை தயாரிப்பு நிறுவனங்கள் பொருளாக உதவுங்கள்.

நன்கொடைகளுக்கு **80 G** வருமான வரிவிலக்கு பெறலாம்.

முகவரி :

**கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்**
**மகளிர் தொண்டு நிறுவனம், த.பெ.எண். 2**
**வேதாரண்யம் – 614 810, நாகப்பட்டினம் மாவட்டம்.**
**போன் : (04369) 50227, 50027, 50011**
**தந்தி: *GURUKULAM.***

இந்தியன் வங்கி
கனரா வங்கி
வேதாரண்யம் – 614 810.

இந்தியன் ஓவர்சீஸ் வங்கி
தோப்புத்துறை – 614 809.

பாரத ஸ்டேட் வங்கி
திருத்துறைப்பூண்டி – 614 713.

ஏ.பி.டி. பார்சல் சர்வீஸ்/
செண்பகம் லாரி சர்வீஸ்
வேதாரண்யம் – 614 810.

*விளம்பர உபயம் :*

**Sri. N. SUNDARAM,**
**SCOPE SOFTWARES, Nanganallur, Chennai - 600 061.**
**Tel : 2347 588.**

## குருகுலம் பிரிண்டர்ஸ்

(கிராமப்புற மகளிர் தொண்டு நிறுவனம்) வேதாரண்யம் – 614 810.
**PH : (04369) 50027**

**அரசு சலுகை :**

உள்ளாட்சி, கதர், அரசு நிறுவனங்கள், திருக்கோயில்கள் விலைப்புள்ளி கோராமல் வேலை கொடுக்கலாம். குருகுலம் தயாரிக்கும் அச்சு மற்றும் மின்னணு சாதனங்கள் போன்றவற்றிற்கு **விற்பனை வரி கிடையாது.**

Govt. of India FCRA No. 075960069

# ஹரிஹரனை மணக்காவிட்டால் காடு மலைகளில் திரிந்து கொண்டிருப்பேன்!

**பிரபல பாடகர் ஹரிஹரன் சமீபத்தில் தமது இசை நிகழ்ச்சிக்காக மனைவியுடன் சென்னை வந்திருந்தார். ஹரிஹரன் வந்தால், அவரைத்தான் சந்திக்க வேண்டுமா என்ன? ஒரு மாறுதலுக்கு திருமதி ஹரிஹரனைச் சந்தித்தோம்.**

“எங்கள் முதல் பையன் அக்ஷய் (13). அது நான் தேர்ந்தெடுத்துச் சூட்டிய பெயர். அடுத்தவன் கரண் (7). அது என் கணவரது சாய்ஸ். காரணம் அவருக்கு புராண கேரக்டரான கர்ணன் மிகவும் பிடிக்கும்'' என்கிறார் லலிதா ஹரிஹரன்.

லலிதாவின் தாத்தா, நெல்லைச் சீமைக்காரர். மதுரை அரசு மருத்துவ மனையில் கண் மருத்துவராகப் பணிபுரிந்தவர். லலிதாவின் அப்பா, வேலை நிமித்தம் கல்கத்தா போனவர். எனவே லலிதா பிறந்து, வளர்ந்தது எல்லாம் கல்கத்தாவில்தான். பட்டப் படிப்பை முடித்து விட்டு, ஆசிரியையாக ஸ்கூலில் வேலை பார்த்தவர் லலிதா. அவர் கல்லூரியில் படித்த ஸ்பெஷல் சப்ஜெக்ட் 'கார்ட்டோகிரபி'

''வரைபடங்கள் (மேப்) உருவாக்குதல் பற்றிய படிப்பு அது. அதிலேயே மேற்படிப்பினைத் தொடர்ந்திருந்தால், இன்று உலகின் எந்த மூலையிலாவது, மலை ஏறுவது, காடுகளில் சுற்றித் திரிவது என்று புதிய புதிய இடங்களுக்குச் சென்று கொண்டு இருந்திருப்பேன். திருமணம் அதற்குத் தடை போட்டு வாழ்க்கை திசை திரும்பி விட்டது!''

''உங்களது திருமணம் காதல் திருமணமா?''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. என் அத்தைக்கு ஹரிஹரனின் அப்பா தெரிந்தவர். அவர்கள் வீட்டில் ஹரிஹரனுக்குப் பெண் பார்த்தார்கள். எங்கள் வீட்டில் எனக்கு மாப்பிள்ளை பார்த்தார்கள். ஆக, இரு தரப்பு குடும்பத்துப் பெரியவர்களும் சேர்ந்து, பேசி, முடிவு செய்த திருமணம்தான் இது.



திருமணமாகி மும்பைக்கு வந்து விட்டேன்.''

''கல்கத்தா வாழ்க்கைக்கும், மும்பை வாழ்க்கைக்கும் ஏதாவது வித்தியாசம் இருந்ததா?''

''எங்கே வசிக்கிறோம் என்பதைவிட, எப்படி வசிக்கிறோம் என்பதுதான் வாழ்க்கையில் பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தும். அந்த விதத்தில் பார்த்தால், ஆசிரியை வேலைக்கும், ஹரிஹரனின் மனைவி என்ற பொறுப்புக்கும்தான் ஏகப்பட்ட வித்தியாசம். திருமணத்துக்குப்பின் மார்க்கெட்டிங் மேனேஜ்மென்ட் கோர்ஸ் படித்து முடித்தேன். இப்போது என் கணவரின் குரலை மார்க்கெடிங் பண்ணிக் கொண்டிருக்கிறேன். (சிரிப்பு) நான் இப்போது பெருமளவில் என் கணவரது மேடை நிகழ்ச்சிகளுக்குப் பொறுப்பேற்று நடத்துகிறேன். அந்த நிகழ்ச்சிகளில், லைட்டிங், மேடை அமைப்பு உட்படப் பல விஷயங்களையும் நேரடியாக நானே கவனிக்கிறேன்!''

''அவ்வளவுதானா?''

''ஊகூம். என் கணவரது நிகழ்ச்சியின் போது, ரசிகர்களுடன் நானும் அமர்ந்து கேட்கிறேன். அப்போது, அவர் மேடையில் நிற்கிற, உட்காருகிற, நடக்கிற விதம் தொடங்கி மேடையின் திரைச்சீலை மற்றும் செட்டிங்குடன் அவரது உடை ஒத்துப் போகிறதா, பின்னணியில் உள்ள எழுத்துக்களுடன் லைட்டிங் பொருந்துகிறதா என்றெல்லாம் நுணுக்கமாக கவனிக்கிறேன். அதிலே தெரிகிற குறைபாடுகள், அடுத்தடுத்த நிகழ்ச்சிகளில் இல்லாதபடி பார்த்துக் கொள்ளுகிறேன். நம் தப்புகள், மற்றவர்களது தப்புகள் இவைதானே நமக்கு வாழ்க்கையில் கூட நிறைய விஷயங்களைக் கற்றுத் தருகின்றன!''

''நீங்களும், ஹரிஹரனுடன் கூடவே வெளியூர்களுக்குச் செல்வீர்களா?''

''நிகழ்ச்சிக்கு நிர்வாகப் பொறுப்பு ஏற்றுக் கொண்டால் போவேன். ஆனாலும் இரண்டு குழந்தைகளையும் விட்டுவிட்டு, அடிக்கடி போக முடியுமா? என் மாமியார்தான் நான் இல்லாதபோது குழந்தைகளைப் பார்த்துக் கொள்வார்.''

''கலோனியல் கசின்களான ஹரிஹரனும், லெஸ்லீயும் மேடையில் ஒன்றாகத் தோன்றுகிறார்கள். அவரது மனைவிக்கும் உங்களுக்கும் இடையிலான நட்பு எப்படி?''

''நேரம் கிடைக்கிறபோது சந்தித்துக் கொள்வோம் என்றாலும் ஆண்டுதோறும் இரு குடும்பங்களும் சேர்ந்து தீபாவளியை எங்கள் வீட்டிலும், கிருஸ்துமஸை அவர்கள் வீட்டிலும் கொண்டாடுவோம். விடுமுறை என்றால் எங்கள் பிள்ளைகள் அவர்கள் வீட்டுக்குப் போய் விடுவார்கள்; இல்லை அவர்கள் எங்கள் வீட்டுக்கு வந்து விடுவார்கள்!''

''ஹரி பாடிய தமிழ்ப் பாடல்களில் உங்களுக்கு மிகவும் பிடித்த பாட்டு?''

''உயிரே... உயிரே..., நிலா காய்கிறது!''

''உங்களுக்குப் பாடத் தெரியுமா?''

''சுத்தம்!''

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

வண்ணப்படங்கள் : **ரவிசங்கரன்**



படம் : சௌந்தர்ராஜன்

# "தேவை - சில நிஜ சக்திமான்கள்!

**இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் கடத்தப்பட்ட களேபரத்தில், சென்னையில் நடந்த பாரதீய ஜனதா கட்சியின் தேசிய கவுன்சில் மற்றும் தேசிய செயற்குழு கூட்டத்தின் ஸ்டார் வேல்யூவும் 'ஹைஜாக்' செய்யப்பட்டு விட்டது! கூட்ட வளாகத்தில் சுற்றி வந்து, திரட்டிய சில சுவையான விஷயங்களின் தொகுப்பு :**

● அதி.மு.க., தி.மு.க. போன்ற கட்சிகளுடன் கூட்டணி என்பதன் மூலம் தன்னை 'திராவிட'ப்படுத்திக் கொண்ட பா.ஜ.க. சென்னையில் மாநாடு என்பதால் தன்னை தமிழ்ப் படுத்திக் காட்டிக் கொண்டது. கூட்டம் நடந்த செட்டிநாடு வித்யாஸ்ரமம் பள்ளிக்கூட வளாகத்துக்கு திருவள்ளுவர் நகர் என்று புது நாமகரணம்!

● வி.கே. ஜான், ராமசாமி ஆகியோர் பெயரில் நுழை வாயில்கள். யார் இவர்கள்? தமிழகத்தில் ஜனசங்கத்துக்கு விதை ஊன்றியவர்களாம்.

● மாநாட்டு அரங்கு இருந்த கட்டடம் முழுக்க திருக்குறளை தமிழ், ஆங்கிலம், இந்தியில் எழுதி ஒட்டியிருந்தது வித்தியாசமாக இருந்தது.

● "இந்த ஏரியா ராசியில்லாத இடமாச்சே! இங்கே நடந்த வளர்ப்பு மகன் திருமணம், ஜெவின் வீழ்ச்சிக்கு வித்திட்டது. இப்போது பி.ஜே.பி. மாநாடு ஆரம்பத்திலேயே ஹைஜாக் பிரச்னை" என்று கிசுகிசுத்தார் ஒரு சக பத்திரிகையாளர்.

● மாநாட்டுக்கு முன் ஏகப்பட்ட குழப்பங்கள். வாஜ்பாய், அத்வானி வருவார்களா? மாட்டார்களா? அடையாள அட்டை வழங்குவதில், சூப்பர் செக்யூரிட்டி கெடுபிடி. யாரிடம் எதைக் கேட்டாலும், வேறு யாராவது பெயரைச் சொல்லி, கை காட்டியது என்று படு சொதப்பல்கள். இத்தனை பெரிய அளவில் ஏற்பாடு செய்த முன் அனுபவம் இல்லாததால், முன் கூட்டியே திட்டமிட்டும், செயல்படுத்துகிற போது ஏற்பட்ட தடங்கல்கள்.

● பெரிய ஷாமியானா பந்தலில் சாப்பாட்டுக்கூடம். மாநில பா.ஜ.க. பொருளாளர் காந்திலால்தான் நளபாகப் பொறுப்பு. வேளா வேளைக்கு சுமார் இரண்டாயிரம் பேருக்கு சமையல். டீ, காப்பிக்குப் பஞ்சமே இல்லை. மாலையில் கடக்கட போண்டா, பஜ்ஜி என்று டிபன். அரசியல் வாசனையை விட ஆரிய பவன் வாசனை டாப்!

● வினோத்கன்னா, நித்திஷ் பரத்வாஜ், முகேஷ்கன்னா தென்பட்டார்கள். நம் ஊர் பி.ஜே.பி. சினிமா முகங்கள் ஒன்றும் கண்ணில் படவில்லை. விதிவிலக்கு : வெண்ணிற ஆடை நிர்மலா.

● செவ்வாய் இரவு, ஒரிசா புயல், கார்கில் போர் இரண்டைப் பற்றியும் ஒன்பது மணிக்கு மேல் இரண்டு டாகுமெண்டரி படங்கள் காட்டப்பட்டன. பார்க்கத்தான் அத்தனை கூட்டமில்லை.

● சுஷ்மா ஸ்வராஜிடம் பிரத்யேக பேட்டி என்ற போது நேரமில்லையே என்றார். கூடவே நடந்தபடி, "பெல்லாரி இடைத் தேர்தலில் போட்டியிடுவீர்களா?" என்று கேட்டபோது, "அதற்கு அவசியமில்லையே! சோனியாவை எதிர்த்துப் போட்டியிடவே, கட்சி என்னை நிறுத்தியது" என்றார்.

● பலரும் கூட நின்று போட்டோ எடுத்துக் கொண்ட பிரபலம்: மகாபாரத கிருஷ்ணர் நிதிஷ் பரத்வாஜ். "என்ன கிருஷ்ணரே! சில மாதங்களுக்கு முன் கீதா ரகசியம் டி.வி. தொடர் சம்பந்தமாக பிரஸ் மீட்டில் சந்தித்த போது, சீரியலில் பிசி; தேர்தலில் போட்டியிட மாட்டேன் என்றீர்கள்! ஆனால் தேரிலிருந்து, தேர்தலில் குதித்து விட்டீர்களே!" என்று கேட்ட போது, "கட்சி எடுத்த முடிவு. அதனால் கீதா ரகசியம் தொடரையே டி.வி.யில் நிறுத்தி விட்டனர். அதன் பின்னரும் சில சிக்கல்கள். மறுபடி, தூர்தர்ஷனிலேயே, முதலில் இருந்து ஆரம்பிக்கப் போகிறேன்" என்றார்.

● சாப்பிட்டுக் கொண்டிருந்தார் சக்திமான் முகேஷ்கன்னா. "சக்திமான்ஜி! காந்தஹாரில் கடத்தப்பட்ட விமானத்தில் நூற்றைம்பது பயணிகள் தவித்துக் கொண்டிருக்க, நீங்கள் இங்கே சாவகாசமாக சாப்பிட்டுக் கொண்டிருக்கிறீர்களே! இது தகுமா? முறையா? நியாயம்தானா? என்ற போது, "நான் சென்னை ஏர்போர்ட்டில் இறங்கியதும், என்னைச் சூழ்ந்து கொண்ட வாண்டுகள் இந்தக் கேள்வியைத்தான் கேட்டார்கள்" என்று சிரித்தார். "இந்தியாவுக்கு இன்று நிழல் சக்திமான்களை விட, நிஜ சக்திமான்கள்தான் கட்டாயமாகத் தேவை" என்றார்.

● பா.ஜ.க.வின் பலம் தமிழக சட்டசபையில் நூறு சதவீதம் அதிகரித்திருப்பதாக அறிவித்தார் வெங்கையா நாயுடு. ஆம்! எம்.எல்.ஏ. வேங்கடசாமி, பா.ஜ.கவில் சேர்ந்தார். சட்டசபையில் பா.ஜ.க.வின் எண்ணிக்கை ஒன்றிலிருந்து, இரண்டானது!

● முன்னாள் ஜனாதிபதி சங்கர்தயாள் சர்மா மரணம், விமானக் கடத்தல் இரண்டும் சேர்ந்து பி.ஜே.பி. தேசிய கவுன்சில் முக்கியத்துவத்தை குறைத்து விட்டன என்று முன்னாள் டெல்லி முதல்வர் மதன்லால் குரானா நம்மிடம் சொன்னார்.

இந்த வாதத்தை தமிழக பா.ஜ.க. செயலாளர் இல. கணேசன் ஏற்றுக் கொள்ளவில்லை. கட்சியின் மிக உயர்ந்த அமைப்பு தேசிய செயற்குழு. அதன் கூட்டத்தில் கலந்து கொள்ளாமல் பிரதமர் டில்லியில் இருந்தது, கட்சியை விட தேசம் முக்கியம் என்பதற்கு அத்தாட்சி. இரு பெரும் தலைவர்களும் முழுமையாகக் கலந்து கொள்ள முடியாமல் போனாலும், செயற்குழு திட்டமிட்டபடி நடப்பது, தனிநபர்களை விட கட்சி முக்கியம் என்பதற்கு அத்தாட்சி" என்றார்.

● மகளிரணி சார்பில், மாநாட்டுக்கு வந்திருந்த அத்தனை பெண்களுக்கும், (கட்சி விஐபிக்கள்தான்!) பட்டுப் புடைவையும்(!) பூவும் வழங்கினார்கள்.

● ஆர்.எஸ்.எஸ். கொள்கையிலிருந்து ரொம்ப விலகிப் போய் விட்டது பா.ஜ.க. அரசு என்று பரவலாக ஒரு குற்றச்சாட்டு அவர்களிடையே உள்ளது. அதற்கு விளக்கம் அளிக்கும் வகையில், "கூட்டணி ஆட்சி என்று வரும் போது, அதில் இடம்பெறும் அனைவரும், சில சொந்த கொள்கைகளை தியாகம் செய்ய வேண்டியது கட்டாயம். அதுதான் கூட்டணி தர்மம்; தேசநலன் கருதி அது தவிர்க்க முடியாதது" என்று அழுத்தம் திருத்தமாகக் கட்சியின் அனைத்து மட்டத்துக்கும் எடுத்துச் சொன்னது இந்த தேசிய செயற்குழுக் கூட்டம்.

• முகேஷ் கன்னா



• மாநாட்டுக்கு வந்திருந்த பெண்களுக்கு பட்டுப் புடைவையும், பூவும்...



— எஸ். சந்திரமௌலி



# பொங்கலோ பொங்கல்

## கோ-ஆப்டெக்ஸ்

# 20%-60%

## விழாக்கால சிறப்புத் தள்ளுபடி.

பொங்கல் திருநாளை இனிதே கொண்டாடி
கோ-ஆப்டெக்ஸ் ஷோரூமிற்கு
வருகை தாருங்கள்.




DIPR/DIS/2000/SASI

பட்டுச்சேலை சேமிப்புத் திட்டத்தில்
சேர்ந்து பயனடையுங்கள்.

DETAILS ARE ALSO AVAILABLE ON THE INTERNET
www.tn.gov.in
www.chennaionline.com

கோ-ஆப்டெக்ஸ்
தமிழ்நாடு கைத்தறி










2000 ஜனவரி 9
பிரமாதி மார்கழி 25
மலர் : 58
இதழ் : 24

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஹைஜாக் ஆன இந்திய கௌரவம்!

கடத்தப்பட்டிருப்பது காட்மாண்டுவிலிருந்து டெல்லிக்கு வந்துகொண்டிருந்த இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம்! எல்லைப் பகுதி - அதிலும் பாகிஸ்தானுக்கு வெகு அருகில் உள்ள நாடு என்பதால் பாதுகாப்பு ஏற்பாடுகள் பலமாக இருந்திருக்க வேண்டும்.

காட்மாண்டு விமான நிலையமே பாதுகாப்பு வசதிக்குப் பெயர் போனதல்ல என்பது ஜகத் பிரசித்தம். இதைக் கருதி மேலும் பாதுகாப்புணர்வுடன் நமது இந்தியன் ஏர்லைன்ஸ் அதிகாரிகள் செயல்பட்டிருக்க வேண்டும்.

ஆண்டின் இறுதியையொட்டி புதிய வருடத்தின் துவக்கத்தில், அந்த மகிழ்ச்சியைக் குலைக்கவென்றே உலகெங்கிலும் முஸ்லிம் தீவிரவாதிகள் திட்டமிட்டுச் செயல்படுவார்கள் என்று ஐ.நா. சபை எச்சரித்திருந்தது. அந்த எச்சரிக்கையை மனத்தில் கொண்டாவது எதிர்பார்ப்புடன் இயங்கியிருக்க வேண்டும்.

இவற்றுள் எதுவுமே நடைபெறவில்லை! ஐந்து பாகிஸ்தானிய முஸ்லிம் தீவிரவாதிகள் சர்வ சாதாரணமாக காட்மாண்டு விமான நிலையத்தில் இந்தியன் ஏர்லைன்ஸ் ஃபிளைட் 814ல் ஏறியிருக்கிறார்கள்.

விமானத்தை லாஹூருக்குக் கடத்த முயன்று, அனுமதி மறுக்கப்பட்டு அம்ருத்சரில்







தரையிறங்கச் செய்திருக்கிறார்கள். நம் நாட்டு விமானம் நமது நாட்டுக்குள்ளேயே 'கடத்தி வரப்பட்ட' அபத்தம் நிகழ்ந்தது நமக்கு அனுகூலமே. ஆனால், அந்த அனுகூலமான சூழ்நிலையை நமது ஆட்சியாளர்களும் அதிகாரிகளும் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாமல் போனதுதான் துரதிர்ஷ்டம். அரசாங்கமும் விமானப் போக்குவரத்துத் துறையும் இதுபோன்ற தருணங்களில் இயங்குவதற்கென்றே ஏற்படுத்தப்பட்ட பிரத்யேகமான கமாண்டோ படையும் கையாலாகாத அசட்டுத்தனத்துடன் வெறுமே பார்த்துக் கொண்டிருந்தன!

அம்ருத்சரில் இறங்கியபோதே ஏதும் செய்வதறியாது நின்றவர்கள், விமானம் அங்கிருந்து மீண்டும் லாஹூர், அபுதாபி, கந்தஹார் (ஆஃப்கனிஸ்தான்) என்று அன்னிய தேசத்து நகரங்களுக்கு இடம் பெயர்ந்து சென்றபோது என்ன செய்திருக்க முடியும்? எதுவும் செய்யாமல், ஃபிளைட் 814 பயணிகளையும் விமானப் பணிக் குழுவையும் பணயக் கைதிகளாக முஜாஹிதீன் தீவிரவாதிகளின் கைகளில் தானம் கொடுத்துவிட்டுத் தவிக்கிறது அரசு.

முஸ்லிம் தீவிரவாத அமைப்புகள் அனைத்துக்குமே ஒஸாமா பின் லேடனின் ஆசியும் ஆதரவும் உண்டு என்பது உலகறிந்த உண்மை. தலிபன் அமைப்பின் நிழல் இவ்வமைப்புகளின் மீது கவிந்து கிடப்பதும் தெரியும். அந்தத் துணிவில்தான் ஆஃப்கன் நகரான கந்தஹாரில் விமானத்தை இறக்கச் செய்துள்ளனர், அதைக் கைப்பற்றியுள்ள தீவிரவாதிகள்.

இந்திய அரசு, தலிபன் தனக்கு ஓரளவு ஆதரவை உத்தரவாதம் செய்துள்ளதாகத் தெரிவிக்கிறது. இப்போது சிக்கியுள்ள நெருக்கடியில் தேறுதலுக்கான வார்த்தைகள்தாம் இவை என்றாலும் தலிபனை நம்புதற்கில்லை. அவர்களுடைய உதவியுடன் நம் விமானத்தினுள் புகுந்து தாக்கி, பிணைக் கைதிகளை மீட்டு வர முடியவே முடியாது! விமானத்துள் இருக்கும் அப்பாவி மனித உயிர்களுக்குத் தீவிரவாதிகளால் அபாயம் ஏற்படா வண்ணம் காப்பதற்கு இந்தத் 'தலிபன் ஆதரவு' சிறிதளவு உதவும் என்பது மட்டுமே ஆறுதல்.

ஒரு வாரத்துக்கும் மேலாக விமானத்தில் கடுங்குளிரில் சிறை வைக்கப்பட்டுள்ள




பயணிகளையும் விமானப் பணிக் குழுவையும் எண்ணிப் பார்க்க, வேதனை இதயத்தைப் பிசைகிறது. இவர்களின் குடும்பங்களை நினைக்கையில் நெஞ்சு கனக்கிறது.

முஃப்தி முகமது சையீத் (முன்னாள் அமைச்சர்) மகள் கடத்தப்பட்டபோது, அரசு கடத்தல்காரர்களின் நிபந்தனைக்கு உட்பட்டதே, அதேபோல் இப்போதும் உட்பட்டு அப்பாவி உயிர்களைக் காக்க வேண்டும் என்று கோரிக்கை எழுந்திருக்கிறது. இது நியாயமல்ல. அமைச்சர் மகளின் உயிரைவிட இன்று விமானத்தில் பிணைக் கைதிகளாயிருக்கும் உயிர்கள் எந்த விதத்திலும் குறைந்தவை அல்ல. ஆனால் ஒருமுறை நடந்த தவறை முன்னுதாரணமாக்கி மீண்டும் தவறு இழைக்கலாகாது.

கடத்தல்காரர்களின் நிபந்தனைகள் அபத்தமானவை, அநியாயமானவை என்பது ஒருபுறமிருக்க, தீவிரவாத நிபந்தனைகளுக்கு அடி பணிவது என்பது தேச விரோதம் மட்டுமல்ல, மானுடப் பண்புகளுக்கே துரோகமிழைப்பதாகும்.

தந்திரங்களற்ற தீவிரவாதம் என்பது கிடையாது. தந்திரமும் துணிவுமின்றி அதை எதிர்த்து ஒடுக்குவதும் சாத்தியமில்லை. தந்திரத்தையும் துணிவையும் பிரயோகிக்கும் வாய்ப்பை அம்ருத்ஸரில் கோட்டை விட்டாயிற்று. அப்போது துணிந்து செயல்பட்டிருந்தால் பயங்கரவாதிகளின் கை ஓங்கியிருக்க, நாம் தவிப்புடன் பேச்சுவார்த்தை நடத்தும் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்க மாட்டோம்.

இனி, காத்திருந்து களைத்துப்போய் தீவிரவாதிகள் வழிக்கு வந்தால்தான் உண்டு. அதுவரை அரசும் பேச்சுவார்த்தை நாடகத்தைத் தொடர்வது தவிர வேறு வழியில்லை.

பயணிகள் மீட்கப்பட்டபின் சம்பவத்தின் போஸ்ட்மார்ட்டம் பல உண்மைகளை வெளிப்படுத்தக் கூடும். கடமைகளில் தவறியவர்கள் பேரில் பிரதமர் உறுதியாக நடவடிக்கை எடுப்பதுடன் தமது கட்சியினரே மேற்கொள்கிற முஸ்லிம் விரோத போக்குக்கு ராஜதந்திரம் கருதியேனும் அழுத்தமாக முடிவு கட்ட வேண்டும். ○

# பூலோக வைகுண்டத்தில் பூதாகரப் பிரச்னைகள்!



• ஸ்ரீரங்கம்: நெரிசல்! நெரிசல்!

**கா**விரிக் காற்று சுகமாகத் தாலாட்ட, கால் நீட்டிப் படுத்திருந்த அரங்கன், இன்று ஒரு கையால் மூக்கைப் பொத்திக் கொள்ள வேண்டிய நிலைமை. காவிரியின் நீள அகலங்களுக்குச் சவால் விடுகின்றன ஸ்ரீரங்கத்துச் சாக்கடைகள்.

ஃபிளாட்கள் பெருகி, மக்கள் தொகை தீவு திணறும் அளவு எக்கச்சக்கமாகி, வியாபாரக் கேந்திரங்களும் மலிந்து, போக்குவரத்து நெரிசல் மிகுந்து விட்டதில் புராதனமான இந்நகரம் இன்று தன் அடையாளங்களை முற்றிலும் இழந்து விட்டிருக்கிறது.



• சாலையோர ஆக்கிரமிப்புகள்

"**ம**றுபடியும் இந்நகரை பூலோக சொர்க்கமாக மாற்ற முழு மூச்சாக இறங்கியிருக்கிறோம்" என்று சொல்பவர்கள் மாநகராட்சி அதிகாரிகளோ, கோயில் நிர்வாகமோ அல்ல. இங்குள்ள 'ஸ்ரீரங்கா சரண் சேவா சமிதி' என்கிற பெண்கள் அமைப்பு.

''ஸ்ரீரங்கத்தின் இன்றைய அவல நிலைக்கு மக்கள்



• முத்துசாமி





• இடிந்த மதில்சுவரில் சீரமைப்புப் பணி...



• மாயவன்

விட்ட பல குடியிருப்புப் பகுதிகளுக்கு எந்த அடிப்படை வசதிகளையும் மாநகராட்சி செய்து தர இயலாது. சாலைகள், சாக்கடைகள், குடிநீர் வசதி என எந்தத் தேவையும் நிறைவேற்றப்பட முடியாததால்தான் நகர் நாறுகிறது. ஏராளமான குடியிருப்புகளில் தம் கழிவு நீர் டாங்குகளைச் சாலையிலேயே திறந்து விட்டு விடுகிறார்கள். தொண்ணூறு சதவீதம் மண் சாலைகளே உள்ள நகரில் சாக்கடை பாய்ந்தால் என்னாகும்? பாதாளச் சாக்கடை திட்டம் பற்றி வருஷக்கணக்காகப் பேசிக் கொண்டிருப்பதோடு சரி. நகரின் அமைப்பு அதற்கு இடம் தராது என்றுதான் சொல்கிறார்கள். ஆனால் கொஞ்ச நாள் முன்பு எல் அண்ட் டி நிறுவனம் இந் நகருக்கு பாதாள சாக்கடை அமைக்க ஒரு திட்டம் தீட்டித் தந்துள்ளது. ஆனால் இன்றளவும் அதை யாரும் பரிசீலித்ததாகத் தெரியவில்லை" என்று கூறும் இப் பெண்கள், நகரின் மிக முக்கியமான வேறொரு பிரச்னை குறித்து மிகுந்த அச்சம் தெரிவிக்கிறார்கள். அது, மதில்கள் உதிரும் பயங்கரம்!

ஸ்ரீரங்கத்தின் கம்பீரமே ஆலயத்தைச் கற்றியுள்ள ஏழு பிரம்மாண்டமான மதில் சுவர்கள்தான். ஆயிரம்



• மதில்மேல் மரங்கள்



• ஸ்ரீனிவாச நகரில் தேங்கியிருக்கும் சாக்கடை நீர்

தொகைப் பெருக்கமும் நில ஆக்கிரமிப்புகளும்தான் பிரதான காரணம் என்பது பார்த்தாலே புரியும். சட்டபூர்வமான அனுமதி பெறாமல் உருவாகி



• ஆற்றோர ஆக்கிரமிப்புகள்



• அம்மாமண்டப அவலம்.

வருடங்கள் பழமை வாய்ந்த இந்த ஏழு மதில்சுவர்களும் ஒரு சரித்திர சாதனை.

ஆனால் இன்று நிலைமை என்ன?

அத்தனை சுவர்களும் சரியான பராமரிப்பு இன்மையால் மரம்செடிகள் முளைத்துக் காடாகி, பெரும் விரிசல்களுக்கு உட்பட்டிருக்கின்றன. சில பகுதிகள் இடிந்தே விட்டன. தவிர, நினைத்து நினைத்து கற்கள் பொலபொலவென உதிர்ந்து சாலையை நிரப்பும் அவலத்தையும் காண முடிந்தது.

இதில் விசேஷமென்னவென்றால், நான்கு அடையவளைந்தான் வீதிகள், சித்திரை வீதிகள், உத்தர வீதிகள் இந்த மதில்களை ஒட்டி உட்புறம் உள்ளன. இவ் வீதிகளின் வீடுகள் அனைத்துக்கும் பின்புற 'காம்பவுண்ட் வால்'களாக இந்தப் பெரும் மதில்சுவர்கள்தான்.

வயதாகி, கிழடான மதில்கள் பொலபொலவென உதிரும்போது, துணி துவைத்துக் கொண்டோ, வேறு வேலைகள் பார்த்துக் கொண்டோ இருக்கும் ஸ்ரீரங்கத்துப் பெண்களுக்கு இந்த மதில் சுவர் கற்களே அரங்கனின் அட்சதையாகி விடும் அபாயம்! மேலும் மரம், செடிகள் மண்டிய மதில்களில் 'ஜீவஜந்து மித்திரர்'கள் மிகுந்து தனியாவர்த்தனம் செய்வதும் இவர்களின் இலவச இணைப்புக் கவலைகள்.

"கோயமுத்தூர் விவசாயப் பல்கலைக் கழக வல்லுநர்கள் ஒருமுறை இந்த மதில் மரங்களை வந்து ஆராய்ந்தார்கள். இவற்றின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்த ஒரு 'ஆஸிட்'டை சிபாரிசு செய்திருக்கிறார்கள். ஆனால் அதுவும் பலனில்லை. ராட்சஸ வளர்ச்சி" என்கிறார்கள்.

நகரின் மையப் பகுதியில் மிக விஸ்தாரமான இடத்தைக் கோயில் ஆக்கிரமித்திருக்க, எந்தப் பணியை தேவஸ்தானம் செய்வது, எது மாநகராட்சிக்குட்பட்டது என்பதே புரியாமல் குழம்புகிறார்கள் மக்கள்.

மதில்சுவரைச் சரிசெய்வதும், அதில் முளைத்திருக்கும் மரங்களைக் களைவதும் தேவஸ்தானத்தின் பணி என்றால், சுவர் இடிந்து உதிரும் கற்கள் ஆக்கிரமிக்கும் சாலைகளையும் சாக்கடைகளையும் சரி செய்ய வேண்டியது மாநகராட்சியின் பணி.

நூற்றுக்கணக்கில் டூரிஸ்ட் பஸ்களும் வேன்களும் வந்து கோயிலின் முன் குவிகின்றன. யாத்ரீகர்கள் குளித்து, உடை மாற்றி வர, முடி காணிக்கை செலுத்த உள்ள அம்மாமண்டபம் (மிக அலங்கோலமாக) தேவஸ்தானத்தின் வசம் உள்ளதென்றால், வருகிற வாகனங்களை நிறுத்த இடம் ஒதுக்காமல் சாலையில் பன்றிகளுக்கிடையே நிறுத்தி, போக்குவரத்தை ஸ்தம்பிக்கச் செய்கிறது மாநகராட்சி. அம்மா மண்டபத்தின் உள்ளே உள்ள கடைகள் தேவஸ்தானக் குத்தகைக்காரர்களுடையது. வெளியே உள்ள நவீன கழிப்பிடங்களும் பிற கடைகளும் மாநகராட்சிக்குட்பட்டது.

கோயிலைச் சுற்றியுள்ள (தேவஸ்தானத்துக்குட்பட்ட) வீதிகளில் வசிப்பவர்கள் வெளியே விடும் கழிவு நீர் செல்வது மாநகராட்சி சாலைகளில்.

இப்படி இருதரப்பும் ஒன்றோடொன்று பிணைந்து 'பணியாற்று'வதில் ஸ்ரீரங்கம் என்னும் புண்ணிய நகரம் நடக்கக் கால் வைக்க முடியாத பேராபாய நிலைக்குப் போய் விட்டது!

"இதெல்லாம் இருக்கட்டும் சார்! நகருக்கென்று இருக்கும் ஒரே ஒரு நூலகத்தை வந்து பாருங்கள்" என்று அழைத்துப் போய்க் காட்டினார் இளங்கோவன் என்கிற உள்ளூர்க்காரர்.

மாநகராட்சிப் பூங்காவில் (கோயிலை ஒட்டி, பொது மருத்துவ மனைக்கு எதிரே அமைந்துள்ளது) ஒரு ஓரத்தில் பஞ்சத்தில் அடிபட்டாற்போலக் காணப்பட்டது அந்த நூலகம். முதல் பார்வையிலேயே கண்ணில் பட்டது, கூரையில்

தெரிந்த அந்தப் பெரிய துவாரம்தான். மழைக் காலங்களில் நூலக நேயர்களுக்கு இலவச ஷவர் குளியல்! நூல்க ளுக்குந்தான்.

"இதற்கென்ன சார் பெரிய செலவாகி விடப் போகிறது? ஒரு கூரை மாற்ற வருஷக் கணக்காக யோசிக் கிறார்கள். எதைக் கேட்டாலும் நிதி இல்லை என்கிற ஒரே பதில்தான்!'' என்று புலம்பினார் அந்த நூல் நேயர்.

மாநகராட்சிப் பூங் காதானா என நம்ப முடியாத அளவுக்கு நேர்த்தியான பராமரிப் பில் பூத்துச் சிரிக்கும் இப் பூங்காதான் ஸ்ரீரங் கத்துக்கு வரும் சுற்று லாப் பயணிகள் அமர்ந்து உணவருந்த உள்ள ஒரே இடம்.

"ஆனால் பாருங் கள் சார். இங்கிருப்பது ஒரே ஒரு குழாய்தான். கை கழுவுவதற்கும் அருந்துவதற்கும் இது மட்டுந்தான். நாலைந்து குழாய்கள் போட்டால் தேவலை'' என்றார் பூங்காவாசியான விஜயகுமார்.

நெரிசல். இந்த ஒரு சொல்லில் நகரின் அத்தனை பிரச்னை களையும் அடக்கி விட லாம் போலிருக்கிறது.

ஸ்ரீரங்கத்துக்கு வெளியேயும் (திருவா னைக்கா, மேலூர் சாலை போன்ற பகுதி கள்) இந்த நெரிசல் பரவவே விளைநிலங் கள் பல குடியிருப்புப் பகுதிகளாகி விட்டன. தாழ்வான பூமியில் நான்கு தெருக்களை இணைத்து ஒரு நகர் என்று அறிவித்து விடுகிறார்கள். DTP (Directorate of Town Planning) அனுமதி உண்டா, இல்லையா, மாநக ராட்சி வசதிகள் செய்து தருமா, தராதா - எது பற்றியும் யோசிப்பதில்லை மக்கள்.

இப்படிப்பட்ட நிலைமையால் சமீபத்திய மழையில் பல 'நகர்'கள் குளங்களாகி விட, மக்கள் தீவுக்குள் தீவு கட்டி வாழ்ந்து கொண்டி ருக்கிறார்கள்.

புராதனப் பெருமை மிக்க ஸ்ரீரங்கத்தைக் கவனிப்பதை விட தேவஸ்தானத்துக்கு வேறென்ன முக்கிய வேலை? கோயிலின் நிர் வாக அதிகாரி ஆர். முத்துசாமியைச் சந்தித் தோம்.

"இத்தனை மோசமான நிலைமையில் மதில் சுவர்கள் இருக்கின்றனவே? செப்பனி டத் தோன்றவில்லையா?''

"மதில்களை ஒட்டி இருபுறமும் வீடுகள் உள்ளன. ஏறி வேலை செய்ய எங்கே இடமிருக்கிறது? மதில்சுவருக்கு இருபுறமும் பத்தடி இடைவெளி இருக்க வேண்டுமென் பது சட்டம். எந்த வீட்டையாவது அப்படி இடைவெளி விட்டுக் கட்டியிருக்கிறார்களா பாருங்கள். இருப்பினும் ஒருசில இடங்களில் மதில் சுவர் செப்பனிடும் பணி ஆரம்பமாகி விட்டது. பதினேழு லட்சம் மதிப்பீட்டில் நடைபெறும் இப் பணி விரைவில் நிறை வடையும்.''

"தினம் ஏராளமாக டூரிஸ்ட் வாகனங்கள் வருகின்றன. வண்டிகளை நிறுத்தவென ஓரிடம் ஒதுக்காமல் ஏன் இப்படி சாலை முழுக்க அடைக்கச் செய்கிறீர்கள்?''

"கோயிலுக்குப் பின்புறம் நிறைய இடம் இருக்கிறது. அங்கு பஸ்கள், வேன்களை நிறுத் தச் சொல்லிப் பலமுறை கேட்டாகிவிட்டது. ஆனால் பிடிவாதமாகக் கோயில் வாசலில் தான் நிறுத்துகிறார்கள். நாங்கள் மாநகராட்சி அதிகாரிகளுடன் கலந்து பேசி இதற்குத் தீவிர நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்திருக் கிறோம். விரைவில் போக்குவரத்து நெரிசல் பிரச்னை தீர்ந்து விடும். இது தவிர கோயில் சார்பாகப் பதினைந்து லட்சத்தில் தங்குமிடங் கள், நவீன கழிப்பறைகள் கட்டவும் வேலை நடந்து வருகிறது. இது உற்சவ நேரமல்லவா? (வைகுண்ட ஏகாதசி சமயம்) அதனால் தான் பிரச்னையின் தீவிரம் மிக உக்கிரமாகத் தெரி கிறது. விரைவில் அனைத்தும் சரிசெய் யப்படும்.''

"அம்மா மண்ட பத்து அலங்கோல நிலைமைக்கு என்ன விளக்கம் கூறப் போகிறீர்கள்?''

"அந்த மண்டபம் மட்டும்தான் கோயி லைச் சார்ந்தது. சுற்றி யுள்ள கடைகள் யாவும் மாநகராட்சிக் குட்பட்டவை. மண்ட பத்தினுள் இயங்கும் சில கடைகளை மட் டும் நாங்கள் குத்த கைக்கு விட்டிருக் கிறோம். அது ஒரு வியாபாரக் கேந்திர மாகி விட்டது. ஆனால் சுற்றுச் சூழல் கெடாத வண்ணம் பாதுகாக்க முயற்சி எடுத்து வருகிறோம். இப்போது வெள்ளை யடிக்கும் பணி நடை பெற்று வருகிறது.''

"அதை எப்படி வியாபாரக் கேந்திர மாக்க விட்டீர்கள்? பக்தர்கள் தங்கி, குளிக்க, படுத்துறங்க ஏற்பட்டதல்லவா அது? இப்போது உங்கள் குத்தகைக் காரர்கள் அங்கு மக்கள் தங்குவதற்குத் தலைக்கு மூன்று ரூபாய் வசூலிப்பதாகச் சொல்கிறார்களே மக்கள்?''

"அப்படியா? இவ்



• ஸ்ரீரங்கா சமிதி பெண்கள்



• கிளை நூலகத்தின் பரிதாப நிலை



• இளங்கோவன்: நூலகமாக இது?

விஷயம் இதுவரை எனக்குத் தெரியாது. உடனே கவனித்து நடவடிக்கை எடுக்கிறேன்.''

**ஸ்ரீ**ரங்கம் தொகுதி எம்.எல்.ஏ. மாயவனைச் சந்தித்தோம்.

நகரின் இன்றைய மோசமான நிலைமைக்கு, முந்தைய அதிகாரிகளே காரணம் என்றார் மாயவன்.

''எக்கச்சக்கமாகத் திருடினார்கள். கோயில் சார்ந்த ஊர் என்றாலே திருடுவதற்கு எப்போதும் ஆட்கள் இருப்பார்கள். நான் மாவட்டச் செயலாளராக இருந்தபோது இங்கே திருட்டு வேலையில் ஈடுபட்ட சில அதிகாரிகளை அடித்தே இருக்கிறேன். கோயில் திருப்பணிகளுக்கும் சரி; நகர் வளர்ச்சிக்கும் சரி - பல திட்டங்கள் தீட்டப்பட்டன. நிதி ஒதுக்கப்பட்டது. ஆனால் எதுவுமே நிறைவேறவில்லை.

''மதில்சுவர் பிரச்னை பற்றி சட்டசபையிலேயே பேசினேன். முதலமைச்சர் இதற்கு நான்கு கோடியும் திருவானைக்கா கோயிலுக்கு ஒரு கோடியுமாக மொத்தம் ஐந்து கோடி நிதி ஒதுக்குவதாக அறிவித்தார். அது கூட வந்து சேராத அளவுக்குப் பல குறுக்கீடுகள்.''

''அப்படியென்ன குறுக்கீடு?''

''ஒற்றுமையின்மைதான் இங்கே பிரதானமான கோளாறு. நான் முன்நின்று ஒரு காரியத்தைச் செய்தால் அதற்கு என் கட்சிக்காரர்கள் சிலரே முட்டுக்கட்டையாக நிற்பார்கள். அதிகாரிகளைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா?

''இங்கே பாருங்கள்... என் வீட்டு எதிரே ஓடும் கால்வாய்க்கு முன்பு திருமஞ்சனக் காவேரி என்று பெயர். இதிலிருந்து நீர் எடுத்துச் சென்றுதான் சுவாமிக்கு அபிஷேகமே செய்வார்கள். இன்று இது வெறும் சாக்கடை. மாநகராட்சி கேட்பாரில்லாமலாகி விட்டது. நகருக்கு சாக்கடைத் திட்டம் வந்துவிடும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். எப்போது என்றுதான் தெரியவில்லை.''

''உங்கள் மீதே மக்கள் பலத்த அதிருப்தியில் இருக்கிறார்களே, வெள்ளத்தைப் பார்க்கப் போனபோது, பெண் புத்தி பின்புத்தி என்று பெண்களைத் திட்டினீர்களாமே?''

''தயவுசெய்து என்னைப் புரிந்து கொள்ளுங்கள். முதல்வர் வருகிறார். அமைச்சர்கள் வருகிறார்கள். தொகுதி முழுக்க நான் சுற்றி வரவேண்டிய கட்டாயத்தில் இருக்கிறேன். என் சொந்தத் தோட்டத்தை வெள்ளம் நாசமாக்கிய செய்தி வந்து - இன்னும் போய்ப் பார்க்க முடியாமலிருக்கிறேன். இந்த நிலையில் பெண்கள் ஒவ்வொருவரும் தத்தம் வீட்டை வந்து பார் என்று கட்டாயப்படுத்தி, வழிமறித்து நின்றால் நான் என்ன செய்வது? அலைச்சலும் பதற்றமுமான தினத்தில் சொந்த உறவினர்களை அன்பாகக் கடிந்து கொள்வதில்லையா? அப்படித்தான் அது நிகழ்ந்து விட்டதே தவிர, எனக்கு யார் மீதும் வெறுப்போ, விரோதமோ, போய்ப் பார்க்கக் கூடாதென்ற எண்ணமோ துளியும் கிடையாது!''

அவரவர் நியாயங்களின் பின்னணியை ஆராய்ந்து கொண்டிருக்கவா சமயம்? ஸ்ரீரங்கவாசிகளின் தீராத பிரச்னைக்கு இவர்கள் யாருமே உதவப் போவதாகத் தெரியவில்லை. மாநகராட்சி ஆணையரையும் மேயரையும் சந்தித்தோம்.

அந்த விவரம்- பக்கம் 56ல்.

**— கிருஷ்ணன்**

படங்கள் : **வெங்கடேஷ்**

**அணுசக்தி விஞ்ஞானி அப்துல் கலாமின் வாழ்க்கை வரலாறு 'விங்ஸ் ஆப் ஃபயர்'. அது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, 'அக்னிச் சிறகு'களாகக் கண்ணதாசன் பதிப்பகத்தால் விரைவில் வெளியிடப்படவுள்ளது. சினிமாவுக்குத்தான் ரிலீசுக்கு முன் டிரெய்லர் காட்ட வேண்டுமா! இதோ, புத்தகம் வெளியாகுமுன்பே, முன்னோட்டமாகச் சில சுவையான பகுதிகளின் சுருக்கம்:**

# 'பறக்கும் கனவுகள்!'

தமிழ்நாட்டின் இராமேஸ்வரம் தீவில் ஒரு நடுத்தர தமிழ்க் குடும்பத்தில் நான் பிறந்தேன். என் அப்பா ஜைனுல்லாபுதீன் பெரிய பணக்காரர் அல்ல; மெத்தப் படித்த வரும் இடையாது. இருந்தாலும் ஆழ்ந்த ஞானம் கொண்டவர். அவர் தரும சிந்தனை நிறைந்தவர். என் அம்மா, ஆஷியம்மா அப்பாவின் மனத்திற்கேற்ற துணை. தினந்தோறும் அம்மா எவ்வளவு பேருக்குச் சாப்பாடு போடுவாள் என்பது துல்லியமாக என் நினைவுக்கு வரவில்லை. ஆனால், எங்கள் குடும்பத்தின் மொத்த உறுப்பினர்களைவிட அதிகமான வெளியாட்கள் எங்களுடன் சாப்பிடுவார்கள் என்பதை என் னால் உறுதியாகச் சொல்ல முடியும்.

இராமேஸ்வரத்தின் பிரசித்தி பெற்ற சிவன் கோயிலுக்கு எங்கள் வீட்டிலிருந்து பத்து நிமிடத்தில் நடந்து போய் விடலாம். நாங்கள் வசித்த பகுதியில் முஸ்லிம்கள் அதிகம். ஒரு சில இந்துக் குடும்பங்களும் இருந்தன. முஸ்லிம்களுடன் சமுக உறவு கொண்டு வாழ்ந்து வந்தார்கள். எங்கள் பகுதியில் மிகவும் பழமையான ஒரு மசூதி இருந்தது. மாலை நேரத் தொழுகைக்கு அப்பா என்னைக் கூட்டிச் செல்வார். அங்கு அரேபிய மொழியில் சொல்லப்படும் பிரார்த்தனை மந்திரத்தின் பொருள் எனக்கு விளங்காது. ஆனால், அதையெல்லாம் கடவுள் கேட்கிறார் என்பதில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. என் அப்பா தொழுகை முடித்து வரும் வரை வெவ்வேறு மதத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாம் மசூதிக்கு வெளியே அவருக்காகக் காத்திருப்பார்கள். சின்னப் பாத்திரங்களில் கொண்டு வந்த தண்ணீரை அவரிடம் கொடுப்பார்கள். அதில் விரல் நுனியை நனைத்து பிரார்த்தனை செய்வார். அந்தத் தண்ணீரை அவர்கள் தத்தம் வீட்டுக்குக் கொண்டு சென்று நோயாளிகளுக்குக் கொடுப்பார்கள். குணமடைந்த பிறகு எங்கள் வீட்டுக்கு வந்து நன்றி தெரிவித்துப் போவதும் எனக்கு நினைவிருக்கிறது. தயையும், கருணையும் கொண்ட அல்லாவுக்கு நன்றி சொல்லும்படி புன்முறுவலுடன் அவர்களிடம் அப்பா சொல்லுவார்.




* * *

நான் எட்டாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்தபோது இரண்டாம் உலகப் போர் மூண்டது. அது 1929ஆம்

வருடம்... அப்போது மார்க்கெட்டில் புளியங் கொட்டைக்கு ஏகப்பட்ட கிராக்கி. எதனால் இப்படி என்பதையெல்லாம் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. புளியங் கொட்டைகளைச் சேகரித்து மசூதி தெருவில் இருந்த ஒரு மளிகைக் கடையில் விற்பேன். இந்த வியாபாரத்தில் தினமும் ஓர் அணா கிடைக்கும்.

அப்போது ஒரு படகு கட்டும் வேலையில் அப்பா ஈடுபட்டிருந்தார். இராமேஸ்வரத்திலிருந்து தனுஷ்கோடிக்கு (சேதுக் கரை என்பது இன்னொரு பெயர்) பக்தர்களை அழைத்துச் சென்று திரும்பக் கூட்டி வருவதற்காக இந்தப் படகை உருவாக்கினார்.

ஒருநாள்... மணிக்கு 100 மைல் வேகத்தில் அடித்த புயல் காற்றில் எங்கள் படகும் சேதுக் கரையின் நிலப் பரப்பும் கடலில் அடித்துச் செல்லப்பட்டது.



பாம்பன் பாலம் தகர்ந்தது. பயணிகளோடு வந்து கொண்டிருந்த ரயில் கடலில் கவிழ்ந்தது. அதுவரை கடலின் அழகை மட்டுமே ரசித்து வந்த எனக்கு அன்றுதான் அதன் கட்டுக்கடங்காத சக்தியின் ரகசியம் புலப்பட்டது.

* * *

**எ**னது விஞ்ஞான ஆசிரியர் சிவசுப்பிரமணிய ஐயர், வித்தியாசமானவர். ஆசாரமான பிராமணராக இருந்தும், புரட்சிகரமான சிந்தனை கொண்டவர். அவரது மனைவியோ பழைய நடைமுறைகளை மாற்றிக் கொள்ள விரும்பாதவர். பலதரப்பட்ட பின்னணி கொண்ட மக்களும் இரண்டறக் கலந்து இணக்கமாக வாழ வேண்டும் என்பதற்காக சமூகத் தடைகளைத் தகர்ப்பதில் தீவிரமாக ஈடுபட்டார் சிவசுப்பிரமணிய ஐயர். என்னுடன் நீண்ட நேரம் செலவழிப்பார். "பெரிய நகரங்களில் உள்ள மெத்தப் படித்தவர்களுக்குச் சமமாக நீ உயர வேண்டும் கலாம்...." என்று பிரியமுடன் அவர் சொல்வார்.

ஒருநாள் அவர் வீட்டில் சாப்பிடுவதற்கு என்னை அழைத்திருந்தார். அனுஷ்டானமான, சுத்தபத்தம் நிறைந்த சமையலறையில் ஒரு முஸ்லிம் பையனை சாப்பிட வைப்பது என்பது அவரது மனைவியை அதிர்ச்சியடையச் செய்தது. எனக்கு உணவு பரிமாற அந்த அம்மையார் மறுத்து விட்டார். சிவசுப்பிரமணிய ஐயர், எதுவுமே நடக்காதது போல சாதாரணமாக இருந்தார். மனைவியிடம் கோபப்படவும் இல்லை. தமது கையால் அவரே எனக்கு உணவு பரிமாறினார். என் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அவரும் சாப்பிட்டார். அவரது மனைவி, சமையலறைக் கதவுக்குப் பின்னால் நின்று கொண்டு, எங்களைக் கவனித்துக் கொண்டு இருந்தார்.

நான் அங்கிருந்து புறப்பட்டபோது, அடுத்த வாரக் கடைசியில் மறுபடியும் தம்மோடு சாப்பிட வருமாறு சுப்பிரமணிய ஐயர் என்னை அழைத்தார். நான் தயங்கினேன். இதைக் கவனித்த அவர் இதற்கெல்லாம் மனம் தளரக்கூடாது என்றார். "இந்த அமைப்பு முறையை மாற்ற வேண்டும் என்று தீர்மானித்துவிட்ட பிறகு இப்படிப்பட்ட பிரச்னைகளை எல்லாம் எதிர்கொண்டாக வேண்டும்'' என்று சொன்னார். அடுத்த வாரம் அவர் வீட்டிற்குச் சென்றபோது அவர் மனைவியே என்னை சமையல் அறைக்குக் கூட்டிச் சென்றார். தமது கையாலேயே அந்த அம்மையார் எனக்கு உணவு பரிமாறினார்.

* * *

**நா**ன் பொடியனாக இருந்த காலத்திலிருந்தே, வானத்து மாயாஜாலங்கள்,

வானவீதியில் வட்டமடிக்கும் பறவைக் கூட்டங்களைப் பார்த்துப் பார்த்துப் பரவச மடைவேன். உச்சியில் பறக்கும் கொக்கு களையும், சிகல் பறவைகளையும் அடிக்கடி கவனித்துப் பார்ப்பேன். நாமும் அதைப் போலப் பறக்க வேண்டுமே என்று ஏக்கமாக இருக்கும். சாதாரண நாட்டுப்புறத்துப் பைய னாக இருந்தாலும், நானும் ஒருநாள் வானத்து உச்சியை எட்டுவேன் என்று எனக்குள்ளே திட்டவட்டமாக சொல்லிக் கொள்வேன். ஆகாயத்தில் பறந்த ராமேஸ் வரத்தின் முதற்குழந்தை நானாகத்தான் இருப்பேன்.

* * *

செயிண்ட் ஜோசப் கல்லூரியில் ரெவரெண்ட் ஃபாதர் டி.என். செக்குரிரா போன்ற ஆசிரியர்கள் அமைந்தது என் அதிர்ஷ்டம். எனக்கு ஆங்கிலம் கற்பித்த அவர்தான் விடுதியின் வார்டன். மூன்று மாடிக் கட்டடமான எங்கள் விடுதியில் சுமார் நூறு மாணவர்கள் தங்கியிருந்தோம். பைபிளும் கையுமாக வரும் ரெவரண்ட் ஃபாதர் தினந்தோறும் இரவில் ஒவ்வொரு மாணவனையும் வந்து பார்ப்பார். அவரின் ஆற்றலும், பொறுமையும் பேராச்சரியங்கள். மாணவர்களின் அற்ப சொற்பமான தேவை களைக் கூடப் பார்த்துப் பார்த்துப் பூர்த்தி செய்யும், மிகுந்த அக்கறை காட்டும் மனிதர் அவர். தீபாவளியன்று எண்ணெய் தேய்த் துக் குளிப்பதற்காக, விடுதிப் பொறுப்பாள ரான சகோதரரும் மெஸ் பொறுப்புகளைக் கவனித்துக் கொள்ளும் மாணவர்களும் அறை, அறையாகச் சென்று நல்லெண் ணெய் கொடுப்பார்கள். இதற்கு முழுமுதற் காரணம் ரெவரண்ட் ஃபாதர்.

செயிண்ட் ஜோசப் கல்லூரி வளாகத் தின் நான்கு வருட வாழ்க்கையில் நானும், வேறு இரண்டு நண்பர்களும் ஒரே அறையில் தங்கியிருந்தோம். ஒரு நண்பர், ஸ்ரீரங்கத்தைச் சேர்ந்த ஆசாரமான ஐயங்கார். இன்னொரு நண்பர் கேரளாவில் இருந்து வந்திருந்த சிரியன் கிறிஸ்தவர். நாங்கள் மூவரும் சேர்ந்திருந்த அந்த நாட்கள், அற்புதமான காலம். எனது விடுதி வாழ்க்கையின் மூன்றா வது வருடத்தில் என்னை சைவ உணவுக் கூடத்தின் செயலாளராக நியமித்திருந்தார் கள். ரெவரண்ட் ஃபாதர் கல்லத்தில் என்பவரை ஒரு ஞாயிறு தினத்தில் உணவு அருந்த அழைத்திருந்தோம். எங்கள் மூன்று பேரின் மாறுபட்ட பின்னணியின் அடிப் படையில் வெவ்வேறு அயிட்டங்கள் அடங்கிய உணவு வகைகளைத் தயாரித்திருந் தோம். ரெவரன்ட் ஃபாதரோ எங்கள் முயற்சிகளை வஞ்சனையில்லாமல் ஏகமா கப் புகழ்ந்து தள்ளினார். அவருடன் நாங்கள் இருந்த ஒவ்வொரு கணத்தையும் அப்படி அனுபவித்து மகிழ்ந்தோம். வெளிப்படை யாக, மனம் திறந்து பேசிக் கொள்ளும் எங் களது உரையாடல்களில் அவர் குழந்தை யைப் போன்று ஆர்வத்தோடு கலந்து கொள்வார். எங்கள் எல்லோருக்கும் அது ஒரு மறக்க முடியாத அனுபவம். 'கொடுப் பதில் இருக்கும் சந்தோஷத்தை அனுபவிப் பதற்கு' மக்களைப் பக்குவப்படுத்திய காஞ்சி பரமாச்சார்ய சுவாமிகளின் உண்மையான பக்தர்கள் செயிண்ட் ஜோசப் கல்லூரியில் எனக்கு ஆசிரியர்களாக அமைந்திருந்தார் கள்.

* * *

தொழில்நுட்பக் கல்வியில் தென்ன கத்தின் மணிமகுடமாகக் கருதப்பட்ட எம்.ஐ.டி. (Madras Institute of Technology) யில் விண்ணப்பித்தேன். தெரிவு செய்யப்பட்ட வர்கள் பட்டியலில் எனது பெயரும் வந்து விட்டது! ஆனால் இதில் சேர்வது நிறைய செலவு பிடிக்கும் விவகாரமாயிற்றே... என்ன செய்வது? சுமார் ஆயிரம் ரூபாய் அப்போது தேவைப்பட்டது. அவ்வளவு பெரிய தொகையை என் அப்பாவால் ஏற்பாடு செய்ய முடியாது. அந்த இக்கட்டான சந்தர்ப்பத்தில் எனக்குப் பக்கபலமாக இருந் தது என் சகோதரி ஜோஹரா. அவருடைய தங்க வளையல்களையும், சங்கிலியையும் அடமானம் வைத்து எனக்குப் பணம் கொடுத்தார். எனது திறமையில் எவ்வளவு நம்பிக்கை வைத்திருந்தால் என்னைப் படிப்பாளி ஆக்குவதில் இவ்வளவு உறுதி

**''அந்தக் கடைக்காரர் பெரிய நக்கல் பேர்வழியா இருப்பார்னு தோணுது?''**

**''எப்படி?''**

**''வணக்கம் சார்னு சாதாரணமாகத்தான் சொன்னேன்; 'சாரி சார்... இந்த வருஷம் காலண்டர் போடலை'னு சொல்றாரே!''**

**— சீர்காழி வி. ரேவதி**



யாக இருந்திருப்பார்? அவரது அன்பிலும், அக்கறையிலும் நான் நெகிழ்ந்து விட்டேன். எனது சுய சம்பாத்தியத்தில் அந்த நகை களை மீட்டுக் கொடுப்பேன் என்று சங்கல் பம் செய்து கொண்டேன். அந்தக் கட்டத் தில், பணம் சம்பாதிக்க எனக்குத் தெரிந் திருந்த ஒரே வழி தீவிரமாகப் படித்து உதவித் தொகை பெறுவது மட்டுமே.

எம்.ஐ.டி.யில் நான் கண்ட ஒரு காட்சி... என்னைப் பரவசத்தில் திக்குமுக்காட வைத்தது! ஓரம் கட்டப்பட்டுவிட்ட இரண்டு விமானங்கள் அவை! விமானத்தில் வெவ்வேறு விதமாக இயக்கங்கள் பற்றி செயல்முறை விளக்கம் அளிப்பதற்காக அந்த இரண்டையும் அங்கு நிறுத்தி வைத் திருந்தார்கள். அந்த விமானங்கள் மீது எனக்கு ஏதோ ஒரு இனம்புரியாத மோகம்! எல்லா மாணவர்களும் விடுதிக்குப் போன பிறகு, நான் மட்டும் நீண்ட நேரம் தனியாக அவற்றின் அருகிலேயே அமர்ந்திருப்பேன். பறவையைப் போல சுதந்திரமாகப் பறக்க வேண்டும் என்ற மனிதனின் விடாப்பிடி யான உறுதியை நினைத்து அதிசயப்படு வேன். இந்த நினைவுகளில் என் மனம் சிறகு விரித்து பூரிப்படையும். முதல் வருடப் படிப்பு முடிந்தது. அடுத்த வருடம் ஒரு குறிப் பிட்ட பிரிவை நான் தெரிவு செய்ய வேண் டிய கட்டம் வந்தது. அது, விமானப் பொறி யியல் என்பதைக் கொஞ்சம் கூடத் தயங் காமல் முடிவு செய்தேன். எனது மனத் திரையில் என்னுடைய இலக்கு தெள்ளத் தெளிவாகத் தெரிந்தது; நான் விமானம் ஓட்டப் போகிறேன். விட்டுக் கொடுக்காத உறுதியான மனப்பான்மை என்பதில் நான் பின்தங்கியிருந்தாலும் வானத்தை எட்ட முடியும் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை.

என்னுடைய பாடத் திட்டம் முடிந்ததும், தாழ்வாகப் பறந்து தாக்கும் ஒரு போர் விமானத்தை வடிவமைக்கும் திட்டப் பணியை நானும், மற்ற நான்கு சக மாணவர் களும் கூட்டாக முடிக்க வேண்டும் என்று பொறுப்புக் கொடுத்தார்கள். ஏரோ டைனமிக் டிஸைன் வரையும் பொறுப்பை நான் எடுத்துக் கொண்டேன். எனது குழுவி னர் ஒவ்வொருவரும் மற்ற பொறுப்புகளைப் பங்கிட்டுக் கொண்டார்கள். அப்போது எம்.ஐ.டி.யின் இயக்குநராக இருந்த பேராசிரி யர் ஸ்ரீனிவாசன்தான் எனக்கு வடிவமைப்பு ஆசிரியர். ஒருநாள், அவர் என் திட்டத்தின் முன்னேற்றம் பற்றி மதிப்பீடு செய்ய வந்தார். திட்டம் நம்பிக்கை தரவில்லை; ஏமாற்றம்



''அந்தப் படத்தோட டைரக்டர் அரசுக்கு கடிதம் எழுதியிருக்கார்!''

''எதுக்கு?''

''படத்தோட சண்டைக் காட்சிகளை பாராளுமன்றத்திலும் மாநகராட்சி மன்றங்களி லும் படம் பிடிக்க அனுமதி வேணுமாம்!''

– புளியறை கணேசன்

அளிக்கிறது என்று அவரது முடிவைச் சொன்னார். தாமதத்திற்கான ஒரு டஜன் காரணங்களை எடுத்துச் சொன்னேன். அவரோ சமாதானம் அடையவேயில்லை. கடைசியில் திட்டத்தை முடிப்பதற்கு ஒரு மாத கால அவகாசம் தரும்படி கெஞ்சி னேன். கொஞ்ச நேரம் என்னை உன்னிப் பாகப் பார்த்த பேராசிரியர் சொன்னார் :

"பார், இளைஞனே... இது வெள்ளிக் கிழமை பிற்பகல் நேரம்... மூன்று நாள் அவ காசம் தருகிறேன். திங்கட்கிழமை காலைக் குள் என்னிடம் கான்ஃபிகுரேஷன் வரை படம் (விமானத்தின் அனைத்து அம்சங் களையும் விவரித்துக் காட்டும் வரைபடம்) வராவிட்டால் உங்களுடைய உதவித் தொகை நிறுத்தப்படும்." நான் வாயடைத்துப் போனேன். எனது உயிரோட்டமே அந்த உதவித் தொகைதான். அதை வாபஸ் வாங்கி விட்டார்கள் என்றால் நான் நிராதரவாகி விடுவேன். குறிப்பிட்ட கெடுவுக்குள் திட் டத்தை முடிப்பதைத் தவிர வேறு எந்த வழியும் எனக்குத் தெரியவில்லை. அன்று இரவு முழுவதும் வரை பலகை முன் உட் கார்ந்திருந்தேன். இரவு உணவைத் துறந் தேன். அடுத்த நாள் காலை. ஒரு மணி நேர இடைவெளியில் என்னை சுறுசுறுப்பாக்கிக் கொண்டு கொஞ்சம் சாப்பிட்டு விட்டு மறு படியும் வேலையில் இறங்கினேன். ஞாயிறன்று காலை நேரம்... என் வேலை கிட்டத்தட்ட முடியும் நிலை.... வேறு யாரோ அறைக்கு வந்தது போல ஓர் உணர்வு.. பேராசிரியர் ஸ்ரீனிவாசன் தொலைவில் இருந்து என்னைக் கவனித்துக் கொண்டிருந் தார்.

ஜிம்கானா க்ளப்பில் இருந்து நேரடியாக வந்திருந்ததால் டென்னிஸ் உடையில் இருந் தார். என் வேலையின் முன்னேற்றத்தைப் பார்ப்பதற்காக அறைக்குள் நுழைந்தார். என்

வேலையை ஆராய்ந்த பிறகு பாசத்துடன் என்னைக் கட்டித் தழுவிக் கொண்டு முதுகில் தட்டிக்கொடுத்துப் பாராட்டினார். "உங்களை ஒரு நெருக்கடியான மன உளைச்சலுக்கு ஆளாக்கி விட்டேன் என்பது எனக்குத் தெரியும். சாத்தியமில்லாத கெடுவுக்குள் வேலையை முடிக்க வேண்டும் என்று சொல்லியிருந்தேன். இவ்வளவு கச்சிதமாக முடிப்பீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை" என்று புகழ்ந்தார்.

* * *

**ஹி**ந்துஸ்தான் ஏரோநாட்டிக்ஸ் லிமிடெட் (HAL) நிறுவனத்தில் பயிற்சி பெறுவதற்காக எம்.ஐ.டி.யில் இருந்து பெங்களூர் சென்றேன்.

ஹிந்துஸ்தான் ஏரோநாட்டிக்ஸ் நிறுவனத்திலிருந்து விமானப் பொறியியல் பட்டதாரியாக நான் வெளியே வந்தபோது எனக்காக இரண்டுவித வேலை வாய்ப்புகள் காத்திருந்தன. இந்த இரண்டுமே வானவிதியில் சிறகடிப்பது என்ற எனது நீண்ட காலக் கனவை நனவாக்கக்கூடியவை. ஒரு வாய்ப்பு, விமானப் படையில். அடுத்தது, பாதுகாப்பு அமைச்சகத்தின் தொழில்நுட்ப வளர்ச்சி மற்றும் உற்பத்தி (விமானம்) இயக்குநரகத்தில். இரண்டு வேலைகளுக்கும் விண்ணப்பித்தேன். ஏறக்குறைய ஒரே சமயத்தில் இரண்டு இடங்களிலிருந்தும் நேர்முகத் தேர்வுக்கு வரும்படி அழைத்திருந்தார்கள். விமானப் படைத் தேர்வாணையம் என்னை டேராடூனுக்கு வரச் சொல்லி இருந்தது. பாதுகாப்பு அமைச்சகத்தின் இயக்குநரகம் DTPLP (Air) தில்லிக்கு வரும்படி அழைத்திருந்தது. கோரமண்டல் கடற்கரையைச் சேர்ந்த இந்தப் பையன் வடதிசை நோக்கி ரயிலில் புறப்பட்டான். நான் போக வேண்டிய இடம் 2,000 கி.மீ. தொலைவுக்கு அப்பால் இருந்தது. என்னுடைய தாய்த்திரு நாட்டின் விசாலமான பூமியை நான் எதிர்கொள்ளும் முதல் அனுபவம் அது.

டில்லியில், DTP நேர்முகத் தேர்வில் கேள்விகளுக்கு சிறப்பான முறையில் பதில் சொன்னேன். பிறகு விமானப் படை தேர்வுவாரியத்தின் நேரடித் தேர்வில் கலந்து கொள்வதற்காக டேராடூன் புறப்பட்டேன். அதில் புத்திக் கூர்மையை விட ஆளுமைத் திறனுக்குத்தான் அதிக முக்கியத்துவம் கொடுத்தார்கள். ஒருவேளை அவர்கள் உடல் வலிமையும் மன உறுதியையும் எதிர்பார்த்திருந்திருக்கலாம். உற்சாகம் - படபடப்பு, உறுதி - கவலை, நம்பிக்கை - பதற்றம் என்ற கலவையான மனநிலையில் நேர்முகத் தேர்வில் கலந்து கொண்டேன். விமானப் படையின் எட்டு அதிகாரிகளைத் தேர்வு செய்வதற்கான அந்த நேர்முகத் தேர்வில் 25 பேர் பங்கேற்றோம். என்னால் ஒன்பதாவது இடத்தைத்தான் பிடிக்க முடிந்தது. நான் மிகவும் நொந்து போனேன். விமானப் படையில் சேரும் வாய்ப்பு இதோ கண்ணெதிரே கைநழுவிப் போய் விட்டதோ என்பதை உணர்ந்து கொள்ள எனக்குக் கொஞ்ச நேரம் பிடித்தது. தேர்வு வாரியத்திலிருந்து வெளியேறினேன். மலைமுகட்டின் விளிம்பில் நின்று கொண்டு கீழே பார்த்தேன். ஓர் ஏரி தெரிந்தது. இனிவரும் நாட்கள் சோதனையாக இருக்கும் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. விடைகாணவேண்டிய கேள்விகள் பிறந்தன; இனி என்ன செய்வது? செயல்திட்டம் வகுக்க வேண்டும். குழப்பமான சிந்தனையுடன் ரிஷிகேசம் புறப்பட்டேன்.

கங்கையில் நீராடினேன். அதன் தூய்மையில் மனம் மகிழ்ந்தேன். அங்கிருந்து கொஞ்சம் உயரத்தில் இருந்த சிவானந்தர் ஆஸ்ரமம் நோக்கி நடந்தேன். உள்ளே நுழைந்ததும் அதிர்வலைகளின் வலுவான தாக்கத்தை உணர்ந்தேன். அங்கே ஏராளமான சாதுக்கள் மெய்மறந்த நிலையில் அமர்ந்திருந்தார்கள். நம் மனத்திற்குள் மறைந்து கிடக்கும் விஷயங்களை சாதுக்களால் தெரிந்து கொள்ள முடியும் என்று படித்திருக்கிறேன். எனக்கிருந்த விரக்தியான மனநிலையில், என்னை வாட்டிக் கொண்டிருக்கும் சந்தேகங்களுக்கு அவர்களிடம் விடை தேடினேன்.

வெள்ளை வெளேர் வேட்டியும், மரப் பாதுகைகளையும் அணிந்து, புத்தரைப் போலக் காட்சியளித்த சுவாமி சிவானந்தரை அங்கு சந்தித்தேன். பளபளக்கும் தேகம். ஊடுருவிப் பார்க்கும் விழிகள், கருணை

* * *

***"வங்கிக்கு வந்த வாடிக்கையாளரைப் போட்டு ஏன் இப்படி உதைக்கிறாங்க?"***

***"வாராக் கடனா இரண்டு லட்சம் லோன் கேட்டாராம்!"***

***– புளியரை கணேசன்***



பொங்கும் முகம், கள்ளம் கபடமற்ற குழந்தையின் புன்னகை... அவரைப் பார்த்ததும் அப்படியே சிலையாகி விட்டேன். சுவாமியிடம் என்னை அறிமுகம் செய்து கொண்டேன். என்னுடைய முஸ்லிம் பெயர் அவரிடம் எந்த சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. நான் வாயைத் திறப்பதற்கு முன்பே, என் துயரத்தின் மூலகாரணம் பற்றி வினவினார். என் வேதனை அவருக்கு எப்படித் தெரிந்தது என்று சொல்லவில்லை, நானும் அதைக் கேட்கவில்லை.

பறக்க வேண்டும் என்ற நீண்ட நாளைய ஆசை நிராசையாகி விட்டதையும், இந்திய விமானப் படையில் சேர முடியாமல் போனதையும் அவரிடம் கூறினேன். அவர் புன்னகைத்தார். அந்தப் புன்னகை என் துயரங்களை எல்லாம் அடித்துச் சென்றது. மெல்லிய குரலில், ஆனால் அழுத்தமாக அவர் சொன்னார் :

"உன்னுடைய தலைவிதியை ஏற்றுக் கொண்டு வாழ்க்கையின் போக்கிலேயே நடைபோடு... விமானப் படை விமானியாக வேண்டும் என்று உனக்கு விதிக்கப்படவில்லை. உனக்கு என்ன விதிக்கப்பட்டு இருக்கிறதோ அது இப்போது வெளிப்படாமல் இருக்கலாம். ஆனால், அது ஏற்கெனவே தீர்மானிக்கப்பட்டு விட்டது. இந்தத் தோல்வியை மறந்து விடு. உனக்கு விதிக்கப்பட்டுள்ள இடத்திற்குப் போக இது வழிகாட்டும்" என்று சுவாமிஜி கூறினார்.

தில்லி திரும்பிய நான் DTP அலுவலகத்தில் என் நேர்முகத் தேர்வு பற்றி விசாரித்தேன். பணியில் சேரும் உத்தரவுக் கடிதம் கொடுத்தார்கள். அடுத்த நாள் முதுநிலை விஞ்ஞான உதவியாளராக (Senior Scientific Assistant) வேலையில் சேர்ந்தேன். மாத அடிப்படைச் சம்பளம் ரூ. 250. இது தான் என் தலையெழுத்து என்றால் அப்படி நடக்கட்டும் என்று நினைத்துக் கொண்டேன். ஒருவழியாக மன அமைதி அடைந்தேன். அதற்குப் பிறகு விமானப் படையில் சேர முடியாமல் போய் விட்டதே என்று வருத்தமோ அல்லது வேதனையோ எனக்கு வரவில்லை. இதெல்லாம் 1958 ஆம் வருட அனுபவங்கள்.

* * *

ஏவுகணைத் திட்டத்தின் வெற்றியை 1990-ம் ஆண்டு, குடியரசு தினத்தன்று தேசம் கொண்டாடியது. எனக்கும், டாக்டர் அருணாச்சலத்திற்கும் பத்மவிபூஷண் விருது கிடைத்தது. எனது மற்ற இரண்டு சகாக்களான ஜே.சி. பட்டாச்சார்யாவுக்கும், ஆர்.என். அகர்வாலுக்கும் கூட பத்மஸ்ரீ விருது கிடைத்தது. ஒரே அமைப்பைச் சேர்ந்த பல விஞ்ஞானிகளுக்கு இப்படி விருதுகள் கிடைத்தது, சுதந்திர இந்திய வரலாற்றில் அதுதான் முதல் தடவை. பத்து வருடங்களுக்கு முன்பு எனக்கு பத்மபூஷண் விருது வழங்கப்பட்ட நினைவுகள் மீண்டும் எழுந்தன. முன்பு வாழ்ந்து வந்தது போலவே இப்போதும் பத்தடி அகலமும் பன்னிரண்டு அடி நீளமும் கொண்ட ஓர் அறையில்தான் வசித்து வந்தேன்.

அறை முழுவதையும் புத்தகங்களும், தாள்களும்தான் அலங்கரித்தன. வாடகைக்கு எடுக்கப்பட்டிருந்த ஒன்றிரண்டு மேசை, நாற்காலிகளும் இருந்தன. அப்போது திருவனந்தபுரத்தில் எனது அறை இருந்தது. இந்த சமயத்திலோ அது ஹைதராபாத்தில் இருந்தது. எனது காலைச் சிற்றுண்டியான இட்லியும், மோரும் கொண்டு வந்த மெஸ் ஊழியர் நான் விருது பெற்றதற்காக என்னைப் பார்த்துப் புன்னகைத்தார். அது அவரின் மௌனமான பாராட்டு! எனது தேசத்து சக மனிதன் எனக்குத் தந்த இந்த அங்கீகாரம் என்னை நெகிழ வைத்தது. ஏராளமான விஞ்ஞானிகளும், பொறியாளர்களும் தங்களுக்கு வாய்க்கும் முதல் சந்தர்ப்பத்திலேயே வெளிநாட்டில் பணம் சம்பாதிப்பதற்காக இந்த தேசத்தை விட்டு வெளியேறுகின்றார்கள். பொருளாதார ரீதியில் இவர்கள் பெருத்த ஆதாயம் அடைவார்கள் என்பதில் சந்தேகமே இல்லை. ஆனால், சொந்த தேசத்து மனிதர்கள் காட்டும் இப்படிப்பட்ட அன்புக்கும், மரியாதைக்கும் இதெல்லாம் ஈடாகுமா?

தொகுப்பு : **மௌலி**



"உங்க வீட்டுக்காரர் இப்படி நடுங்கிட்டிருக்காரே! ஏதாவது மலேரியாவா?"

"சேச்சே! ஏதோ திகில் கதை யோசிக்கக் கிட்டிருக்காராம்! எழுத்தாளராச்சே!"

— மெலட்டூர் விசுவநாதன்

## திருச்சி 'ரமணா'

# சென்னை ஊரை மணக்கும் நெய்பிஸ்கட்!



• 'ரமணா'



• ராஜேஸ்வரி

**எ**திலும் முதல் தரம். எப்பொழுதும் அதுவே எங்கள் நோக்கம் என்கிறார் ராஜேஸ்வரி விஸ்வனாதன்.

திருச்சி, மெயின் கார்ட்கேட், அருணாச்சலம் மன்றம் அருகே இருக்கும் ரமணா பேக்கரிக்கு தமிழகத்தின் முக்கிய நகரங்களில் மட்டுமல்லாது வெளிநாடுகளிலும் நிரந்தர சுவைஞர்கள் உண்டு என்று சொல்கிறார்கள் இதன் விற்பனை ஊழியர்கள்.

1941ல் எழுபத்தி ஐந்து ரூபாய் மூலதனத்தில் ரமணாவைத் துவக்கியிருக்கிறார் ஜெயராமன். சம்பள ஆள் இன்றி சகோதரர்கள் துணையுடன் பேக்கரி அயிட்டங்களைத் தயாரித்து அவர்களே ஒவ்வொரு பகுதிக்கும் கொண்டு சென்று வியாபாரம் செய்திருக்கின்றனர். அப்பொழுது சிறிய இடத்தில் நந்தி கோயில் தெருவில் இருந்திருக்கிறது ரமணா. நினைவில் நிற்கும் ருசியும், கடின உழைப்பும் கைகோத்துக் கொண்டது. அபார வளர்ச்சி பெற்று வாடிக்கையாளர்களின் மனதில் நிரந்தரமான இடத்தைப் பிடித்துவிட்டது.

**கா**ர வகைகளில் உருளைக் கிழங்கு சிப்ஸ்க்கு சிறப்பான இடம் உண்டு என்கிறார் இதன் மேலாளர். தேன் உருண்டை என்பது வார்த்தைக்கு மட்டுமல்ல. சுவைத்துப் பார்த்தால் அதுவும் தேன்தான். முத்துசேரி தேன் குழல் முற்றிலும் வெண்ணையை உபயோகித்துச் செய்யப்பட்டது. மனோகரம் உருண்டை மிகவும் தித்திப்பானது. இவையிரண்டும் ரமணாவில் மட்டுமே தயாரிக்கப்படுகின்றன. வேறு எங்கும் கிளைகள் இல்லை என்பது போல திருச்சியில் இந்த இரண்டு வகைகளும் வேறு எங்கும் தயார் செய்வதில்லை என்கிறார்கள்.

தவழும் குழந்தைகள் முதல் முதியோர் வரை விரும்பிச் சாப்பிடுவது கோதுமை ரஸ்க். சுத்தமான கோதுமை மாவு, சற்றே ஓமம் கலந்தது. துளியளவுக் கூட இனிப்புக்காக சாக்ரின் கலப்படம் செய்யப்படாதது. சர்க்கரை வியாதிக்காரர்களும் எவ்விதத் தயக்கமுமின்றி ரமணாவின் கோதுமை ரஸ்க்கை சரமாரியாக சுட்டுத் தள்ளலாம். இது உணவுக்கு உணவு. மருந்துக்கு மருந்து.

சின்னக் குழந்தைகளுக்காகவே பிரத்யேக



''உனக்கு ஏராளமான சொத்துக்களை விட்டுட்டுப் போன உன் மாமாவோட கடைசி ஆசையை நிறைவேத்த முடியலையேன்னு வருத்தப்படறியே, என்ன ஆசை?''

''அவர் முகத்து மேல நான் அழுத்திப் பிடிச்சுக்கிட்டிருந்த தலையணையைத் தள்ளி விடணும்னு ஆசைப்பட்டார்!''

– மேல்மங்கலம் பத்ரா

மாகத் தயாரிப்பது 'சூப்பான்' பிஸ்கட்! (பெயரைப் பாருங்கள்!). குச்சி குச்சியாய் ஓமம் கலந்தது.

''பொதுவாகவே பேக்கரி தயாரிப்புகள் எதுவாகிலும் அதில் முட்டை கலந்து தயாரித்தால்தான் அதிலே ஒருவகை மிருது தன்மை, குவாலிட்டி, ருசி இருக்கும் என்ற நிலையை எங்கள் தயாரிப்புகளின் மூலமாகத் தகர்த்து விட்டோம் என்கிறார் இதன் மேலாளர் வி.எஸ். கணேசன். ''திருச்சி மாநகரில் இருப்பவைகளில் 'Egg less Bakery' ரமணா ஒன்றுதான்'' என்கிறார்.

விற்பனைக்கான பண்டங்கள் தயாராகும் பேக்டரியைச் சுற்றி வரும்போது நமது கண்களில் படுகிற இடமெல்லாம் அத்தனை சுத்தம். இரண்டு மிகப் பெரிய செங்கல் அடுப்புகள். இந்தச் செங்கல் அடுப்புத் தயாரிப்புகள்தான் நிறைய வெளிநாட்டுச் சுற்றுலாவாசிகளுக்குப் பிடித்துப் போயுள்ளது என்கிறார்கள்.

ரமணாவின் தயாரிப்புகளில் சூப்பர் ஸ்டாராய் இருப்பது சுத்தமான நெய் பிஸ்கட். விலை அதிகம் இது ஒன்றுதான். ஒரு கிலோ நூற்றியிருபது ரூபாய். சென்னைவாசிகள் நிறைய பேர்களுக்கு இதன்மேல் கொள்ளைப் பிரியம் என்கிறார் அவர். இந்த நெய் பிஸ்கட்டின் அபிமான ரசிகராய் மறைந்த கே.பி. சுந்தராம்பாள் இருந்திருக்கிறார். திருச்சி வரும்போது அவர் ரமணாவுக்கு வராமல் போனதில்லை என்கிறார் நாற்பதாண்டுகளாக இங்கு பணிபுரியும் பார்த்தசாரதி. இதன் மீது 'காதல் வயப்பட்டவர்'களில் நடிகர் ஜெமினிகணேசனும் ஒருவராம்.

**— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



## அதிசயப் பாம்பு!

சட்டென்று பார்த்தால், பெரிய மலைப்பாம்பு தலையைத் தூக்கிப் பார்ப்பது போல இருக்கிறதா? பெங்களூர் புறநகர்ப் பகுதியில் உள்ள பாறைகள் நிறைந்த பகுதியொன்றில்தான் இப்படி இயற்கையாகவே ஒரு பாறை அமைந்துள்ளது.

– சி.எம்.

உ

# கச்சி மூதூர் அர்ச்சகர்கள் க்ஷேமநல ட்ரஸ்ட்

பதிவு அலுவலகம் : ஸ்ரீ காமகோடி சங்கர மடம், காஞ்சிபுரம்.
நிர்வாக அலுவலகம் : 10, இரண்டாவது மெயின் ரோடு, கோட்டூர்புரம், சென்னை - 600 085.
போன் : 4411936/4917340 E.Mail: prb@vsnl.com Website : http://personal.vsnl.com/kmaw_trust



## வேண்டுகோள்

நம் நாட்டில் பெரும்பாலான மக்கள் இன்றியமையாத தெய்வ அருளை நாடி மன அமைதி பெற விழைவதால், கோவில்கள் சரிவர பராமரிக்கப்பட்டு பூஜைகள் செவ்வனே நடைபெற ஏற்பாடு செய்வதே தலை சிறந்த சமூகத்தொண்டு என்று **காஞ்சி மாமுனிவர் ஸ்ரீ சந்திர சேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் கூறுவார்கள்.**

இந்த உன்னத நோக்குடன், பல்வேறு காரணங்களால் தற்சமயம் தமிழ் நாட்டில் நலிவுற்றிருக்கும் கிராமியக்கோவில்களில் வறுமை நிலையிலும் பூஜை செய்து கொண்டிருக்கும் தகுதி வாய்ந்த அர்ச்சகர்களை, ஆண்டுதோறும் வாய்மொழித்தேர்வுகளை நடத்தி, தேர்ந்து எடுத்து அவர்களுக்கு உதவி புரிவதற்காகவே, ஸ்ரீ காஞ்சி மஹாஸ்வாமிகள் மேற்படி டிரஸ்டை 1986வது ஆண்டு நிறுவினார். இதை பராமரிக்க வேண்டிய இருப்பு நிதியை ஈடுபாடுடைய அன்பர்கள் மனமுவந்து அளிக்கும் நன்கொடைகளால் மட்டுமே பெற வேண்டும் என்பது மஹாஸ்வாமிகள் இட்ட நிபந்தனை. மாதம் 4000 ரூபாயும் அதற்கு மேலும் வருமானம் பெறும் ஒவ்வொரு அன்பரும் தமது ஒருமாத வருமானத்தை தம் **வாழ்நாளில் ஒருமுறையாவது நன்கொடையாக** அளிக்க முன் வர வேண்டும் என்பது பேரருளாளரின் ஆக்ஞை. மற்றவர்கள் தங்களால் இயன்ற அளவு கொடுக்கலாம்.

1987வது ஆண்டில் 5 அர்ச்சகர்களுக்கு தலா மாதம் 100 ரூபாய் வீதம் உதவத் தொடங்கிய இந்த டிரஸ்ட், தற்சமயம் ஸ்ரீ காஞ்சி மஹானின் அருளாசியுடன் சேர்ந்துள்ள வைப்புத்தொகையை ரூ. 112 லட்சத்திலிருந்து கிடைக்கும் வட்டி வருமானத்தைக் கொண்டு, மொத்தம் 276 அர்ச்சகர்களுக்கு (59 பட்டாச்சாரியார்கள், 110 சிவாச்சாரியார்கள், 107 பரம்பரை பூஜாரிகள்) நபர் ஒருவருக்கு மாதம் ரூ. 325/- வீதம் உதவி வழங்கி வருகிறது. மேலும் தகுதியுடையவர்களுக்குத் தலா ரூ. 10,000/- வீதம் குழுக்காப்பீடு செய்யப்படுகிறது. ஆண்டுதோறும் தகுதி வாய்ந்த அர்ச்சகர்கள் எண்ணிக்கை கூடுவதாலும், மாத உதவித்தொகை உயர்த்தப்படுவதாலும், வைப்புத்தொகையின் வட்டி விகிதம் குறைந்து வருவதாலும், இருப்பு நிதியை அவ்வப்பொழுது நன்கொடைகளால் அதிகப்படுத்தப்பட வேண்டியிருக்கிறது.

நன்கொடைகளை **"KACHCHI MOODOOR ARCHAKAS WELFARE TRUST"** என்ற பெயரில் கிராஸ் செய்யப்பட்ட செக்/டிராஃப்ட் அல்லது மணியார்டர் மூலமாக மேற்படி நிர்வாக அலுவலக முகவரிக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம். காஞ்சிபுரம் ஸ்ரீ மடத்திலும் நன்கொடைகள் அளிக்கலாம். நன்கொடைகளுக்கு வருமானவரி சட்டம் 80ஜி பிரிவின் கீழ் விலக்கு உண்டு. வெளி நாடுகளிலிருந்தும் அன்பர்கள் நன்கொடை அனுப்புவதற்கு வசதியாக இந்த அறக்கட்டளை FCRA வின் கீழும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

8 ஜனவரி 2000

என். கிருஷ்ணசாமி ரெட்டி
(ஓய்வுபெற்ற நீதிபதி, உயர்நீதி மன்றம், சென்னை.)
பொறுப்புக் குழுவின் சேர்மன்.

# உன் சரித்திரம்

நீ ஓர் எழுத்தாளன். நீ மனச்சாட்சி உள்ளவன். இவ்விரு முரண்பட்ட விஷயங்களுடன் அடிக்கடி மல்லுக்கட்ட வேண்டியிருப்பதால்தான் உன் சரித்திரத்தைக் கிளற வேண்டியிருக்கிறது.

எழுத்தாளனுக்கு மனச்சாட்சி இல்லாது போனால்தானே முரண்பாடு என்று சிந்திக்க ஆரம்பித்து விட்டாய். ரொம்ப நல்லது. உன் மூளையின் செல்கள் தேனீக்களாக மாறிக் கொட்ட ஆரம்பித்து விட்டன. உன் இரவுத் தூக்கத்தை முகமூடிக் கொள்ளைக்காரர்கள் களவாடிப் போய் விட்டார்கள். அவர்கள் ஓடிப் போன பாதையின் தன்மை தெரியாமல் நீயும் தேடிக் கொண்டு பின்னால் ஓட ஆரம்பித்து விட்டாய். அடடே, இருளில் தடுமாறி விழப் பார்க்கிறாய் பார். சுதாரித்துக் கொள்.

யாரோ ஒரு அல்ஜீரியன் நாற்பது வயதில் நோபல் பரிசு வாங்கிய விவகாரந்தான் உன்னைப் புரட்டிப் போட்டிருக்கிறது. சரியா? ரொம்ப சரி. முதன் முதலில் கொள்ளைக்காரர்கள் உன் கனவில் புகுந்து சூறையாடிப் போனது அப்போதுதான்.

மிகுந்த நம்பிக்கையும் ஆவேசமுங் கொண்டு எப்படி உழைக்க ஆரம்பித்தாய்! பரிசு ஒரு குறியீடுதான். அடைய வேண்டிய உயரம் பற்றிய தீர்மானம் வந்த போது எத்தனை மனவெழுச்சி உண்டானது. இருப்பது வெறும் மூவாயிரத்தி அறுநூற்றி ஐம்பது நாட்கள். அதே நாற்பது வயது. அதே உயரம். பிரமாதம் போ. இடுப்பு கிளர்ந்து, இரு சிறகுகள் முளைத்து, வெகு லாகவமாகப் பறக்க ஆரம்பித்தாய்.

யோசி. உன் முதல் புத்தகம். அதைக் கொண்டு வர எத்தனை கழைக்கூத்தாடியிருக்கிறாய். தெய்வ சங்கல்பம் என்று சொன்னால் நீ ஆட்சேபிக்கப் போவதில்லை. வேறென்ன, உன் பதிப்பாளரை நீ தேடியடைந்த விஷயந்தான்.

'என்னது? சிறுகதைத் தொகுதியா?' என்று மந்திர குகை போல வாயையும் விழிகளையும் பிளந்த பதிப்பாளர்களின் உள்ளே பயணம்



செய்து அழுகிய சிறுகுடல், பெருங்குடல், நுரையீரல், இதயங்களை தரிசனம் செய்து விட்டு விரக்தியுடன் நீ திரும்பியிருந்த நேரம்.

யார்தான் உன்னைப் பொருட்படுத்தினார்கள்? மார்க்கெட்டின் தன்மை மாறியிருக்கிறது. மக்கள் இப்போது சிறுகதைகளை விரும்புவதில்லை. தொலைக்காட்சித் தொடராகவும் வரும் சாத்தியமுள்ள குடும்பப்பாங்கான, காதல் உள்ள, பாசப் போராட்டமுள்ள, ஆவிகள், ராட்சஸர்கள் உலாவும், வரிக்கொரு ஜோக் சொல்லும் பாத்திரங்களுள்ள பத்து ஃபாரங்களுக்கு மிகாத நாவல் இருக்கிறதா என்று கேட்டார்கள்.

உன் கனவில் நீ இருமுறை விஷமருந்தியும் மும்முறை தூக்கு மாட்டிக் கொண்டும் ஒருமுறை ஹிட்லரின் கைத் துப்பாக்கியை இரவல் வாங்கிக் கொண்டும் உன்னை மாய்த்துக் கொண்டாய். சுக்கிரனின் மிருதசஞ்சீவனியை எப்படியோ அறிந்து வைத்திருந்த உன் மனைவி, ஒவ்வொரு முறையும் மறுநாள் கனவில் நுழைந்து உன்னை உயிர்த்தெழச் செய்து பகலுக்குள் வீசி விடுவாள்.

அப்போதுதான் ஒரு வாசகர் திருவிழாவில் உன் பதிப்பாளரை நீ கண்டடைந்தாய். உன்னையொரு தமிழ் பேசும் ஆல்பெர் காம்யுவாக அவர் அறிந்திருக்க நியாயமில்லை. ஆனாலும் உன் இரு சிறுகதைகளை அவர் படித்திருந்தது உன் பேரதிர்ஷ்டம்.

உனக்கு அவரது முன் சரித்திரம் தெரியாது. உனக்கென்ன, பிற பிரசித்தி பெற்ற பதிப்பாளர்களுக்கே தெரியாது. அவர் நூலக ஆணைகளுக்காகத் தவம் இருப்பதில்லை. நகரின் புகழ்பெற்ற, குளிர்சாதன வசதி செய்யப்பட்ட புத்தகக் கடைகளில் அவர் பதிப்பித்த நூல்கள் எது ஒன்றும் காணக் கிடைத்ததில்லை. மதிப்புரை எழுதும் இலக்கியப் பத்திரிகைகள் எதனிலும் அவரது நூல்கள் சிலாகிக்கப்பட்டதில்லை. ஆனாலும் அவர் ஒரு பதிப்பாளர்.

வத்திப் பெட்டி அளவில் சுலோகப் புத்தகங்கள் வெளியிட்டு, ஒருவர் மகாலிங்கபுரத்தில் இரு மாடி வீடுகள் வாங்க முடியும் என்பதை உன்னால் நம்ப முடியவில்லை. தமிழகத்து பக்தர்களைப் பற்றிய சரியான மதிப்பீடு உன்னிடம் இல்லாததுதான் காரணம். ஐம்பது பைசா, ஒரு ரூபாய்க்கு மேல் அவர்தம் நூல்களுக்கு ஒருபோதும் விலை வைத்ததில்லை. கிரவுன், டெம்மி என்றெல்லாம் சொல்லப்படுகிற அளவுகளில் அடங்காத ஒரு குறுநில ஆட்சி அவருடையது. உள்ளங்கையில் பாதியளவு நீள அகலத்தில் அவர் காமாட்சி, மீனாட்சி, விசாலாட்சி, சூரியன், சந்திரன், சனி, குரு, புதன், ராமன், கிருஷ்ணன், அல்லா, யேசு, ராகு, கேது, நாகராஜன், லலிதாம்பிகை, சோபனாம்பிகை,



மேனகாம்பிகை, தனம் பெற, கல்வி பெற, தோஷம் நீங்க, வேஷம் கலைய, நோய் அகல, காரிய சித்திக்கு, தேக சௌக்கியத்துக்கு, பயணத்தில் படிக்க, படுத்துக் கொண்டு படிக்க, உட்கார்ந்து படிக்க, தேர்வுக்கு முன், ரிசல்டுக்குப் பின், வேலை கிடைக்க, மோட்சம் கிடைக்க, கல்யாணம் ஆக - என பதிப்பிக்கும் நூல்களெல்லாம் பிற பதிப்பாளர்கள் கற்பனை செய்ய இயலாத, லட்சங்களிலான பிரிண்ட் ஆர்டரின் பேரில்தான் வெளியாகும். முதல் பதிப்பு, இரண்டாம் பதிப்பு, மூன்றாம் பதிப்பு விவகாரங்களே அவரிடம் கிடையாது. ஒரே பதிப்பு. குறைந்தது ஒரு லட்சம். ஏஜென்ஸி கமிஷன், பதிவுத் தபால் சள்ளைகள் பக்கம் அவர் தலைவைத்தும் படுப்பது கிடையாது.

நகரெங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கோயில் வாசல்களில் நம்பகமான சில பையன்கள் மூலம் கடை விரித்தால், தினசரி தேங்காய், பழத்துடன் கணிசமாக விற்பனையாகி விடும்.

உன் வாழ்வில் நீ செய்த முதல் சிறந்த காரியம், அவரிடம் உன் சிறுகதைத் தொகுதியைக் கொண்டு வர முடியுமா என்று கேட்டதுதான்.

இந்தப் பிரகலாதன் கதை, கண்ணப்பர் கதை, ஆழ்வார் - நாயன்மார்களின் கதை - இவற்றில் ஏதேனுமொன்றை நீ எழுதித் தர இயலுமானால் வெளியிடுவதில் மகிழ்ச்சியே என்றும் ரூ. இரண்டாயிரம் முன் பணமாகவும் ஏழரை சதவீத ராயல்டியும் தருவதாகச் சொன்னார். பரசுராமனின் ஆயுதத்தைப் பிடுங்கி இந்த க்ஷத்ரியர்கள் குலத்தையே வேரறுக்க வீர சபதம் பூண்டிருப்பாய். தேவதைகளின் ஆசிர்வாதம் நிரம்பிப் பரவிய ஒரு முகூர்த்த கணமாக அது இருந்ததால் அடக்கிக் கொண்டு, சிறுகதை பற்றியும் இலக்கியம் பற்றியும் உன் ஓயாத போர்க் கோலம் பற்றியும் ஆர்பெர்ட் நோபல் பற்றியும் அவரது நினைவுப் பரிசைப் பெற்ற ஆர்பெர் காம்யு பற்றியும் தமிழிலிருந்து யாரொருவரும் எட்ட முடியாத அவ்வுயரத்துக்கு நீ செல்ல விரும்பும் லட்சியம் பற்றியும் பெரிதாக எதையும் எண்ணிப் பார்க்கவும் விருப்பமற்ற மந்தைகளின் சமூகத்தில் வாழ வேண்டியிருப்பதன் அவலம் பற்றியும் உணர்ச்சிகரமாக ஒரு சொற்பொழிவாற்றினாய்.

உனக்கே தெரியாததல்ல. பாஷையின் குறுக்குச் சுவர் தாண்டி நீ பக்கத்து மாநிலம் சென்று சேரவே பல்லாண்டுகள் ஆகிவிடக் கூடும். ஆயினும் உன் போஷாக்கான

''என் மாமியார் கோபமா இருக்கறப்ப கூட குணமா இருப்பாங்க!''
''எப்படி?''
''மாமியார் மருமகள் சண்டைய நா சுவாரசியமா பண்ணினா ஒன்ஸ்மோர் கேட்பாங்க!''
- அம்பை தேவா

கனவை அதன் ஜீவத் துடிதுடிப்புடன், உண்மையான ஆர்வத்தின், ஏக்கத்தின் சாற்றில் தோய்த்தெடுத்து வெளிப்படுத்திய விதத்தில் உன் பதிப்பாளர் புன்னகை பூத்தார்.

ஒரே ஒரு சிறுகதைத் தொகுப்பு. போனால் போகிறது. கோயில் வாசல்களில் யாரும் சிறுகதை வாங்குவதில்லைதான். ஆயினும் உன் ஆர்வத்துக்காக அவர் வெளியிடத் தயார். தவிரவும் உன்னிடம் சொல்லாத ஒரு பிரத்யேகக் காரணமும் அவருக்கு இருந்தது. அதுதான், ஆயிரம் கைகளும் நூறாயிரம் நீட்டிய நாக்குகளும் அச்சமூட்டும் சிவந்த விழிகளும் கொண்ட வருமான வரி.

நஷ்டம் காட்ட ஒரு சிறுகதைத் தொகுதி வெளியிடுவதைக் காட்டிலும் வேறு உன்னத உபாயம் இல்லை என்று அவருக்குத் தோன்றியதை அப்போது நீ அறிய மாட்டாய்.

க்ரீம் ஒயிட் தாளில் லேமினேட் செய்யப்பட்ட அட்டையுடன் ஆஃப்செட் வாகனத்தில் பூட்டப்பட்டது உன் சிறுகதைக் குதிரை.

உன் கனவின் முதல் அத்தியாயத்துக்கு வழி பிறந்து விட்டது. உன் நா தழுதழுத்த நன்றியை எப்படியெல்லாம் வெளிப்படுத்தினாய்! பதிப்பாளருக்கும் ஓரத்தில் ஒரு நப்பாசை ஒட்டிக் கொண்டிருந்தது உனக்குத் தெரியாது. இடைப்பட்ட காலத்தில், இலக்கிய உலக வியாபார குண விசேஷங்களை அவர் சிலரிடம் கேட்டு அறிந்திருந்தார். பதிப்புலக வாழ்விலேயே முதல் முறையாக நூலக ஆர்டர் படிவம் ஒன்றையும் வாங்கி வந்திருந்தார். பள்ளி, கல்லூரிகளுக்கு எடுத்துச் சென்றால் விற்குமா என்று உன்னிடம் கேட்டார்.

நீ உன் புத்தக மேலட்டை விஷயத்தில் அநாசாரமானதொரு காரியம் செய்திருந்தாய். நவீன ஓவியம். ஆக்டோபஸ் மாதிரியுமில்லாமல் ஆண்டாள் மாதிரியுமில்லாமல் ஒரு பெண்ணின் உருவம். கடவுளே! அவ



ளுக்கொரு சேலையாவது, நவீன ஆடையாவது அணிவித்திருக்கலாமல்லவா நீ? மாறாக ஒரு சிற்பத்தின் சாயலில், உடை உண்டா இல்லையா என்றே புரியாத ஒரு குழப்பமான வண்ணத் தெளிப்பில் சர்வ தேசத் தரம் காட்ட முனைந்திருந்தாய். கல்லூரிகளில் துணைப் பாட நூல் தேர்ந்தெடுப்பவர்களுக்கு சர்வதேசத் தரமெல்லாம் ஒவ்வாமை தரும் விஷயமென்பதை யோசிக்க மறந்தது உன் பிழையல்ல. அது விதியின் கோர விளையாட்டு. தவிரவும் உன் கதைகளுக்கொரு சமூக அக்கறை உண்டா? ஏழைமை கண்டு எந்தக் கதையாவது இரங்குகிறதா? ஒளி படைத்த கண்ணினாய் வாவென்று யாரையாவது கூப்பிடுகிறதா? தீப்பெட்டி ஆபீஸ் சிறுமியின் அன்றாடப் பிரச்னைகள் பற்றிப் பேசுகின்றனவா? அட, நம் தொன்மையான கலாசாரப் பெருமைகளையாவது எடுத்துரைக்கின்றனவா?

ஒரு இழவுங்கிடையாது. நாற்பது வரிகளுக்குக் குறைந்து எந்த பேராவும் முற்றுப் பெறுவதில்லை. ஒரு கலகலப்பான வசனம் உண்டாவெனில் அதுவுங்கிடையாது. உண்மைக்கு ஒரே முகந்தான். அது ஒரு போதும் ரசிக்கத் தகுந்ததாக இருப்பதில்லை. அதை உரிப்பதோடு மட்டுமல்லாமல் உப்பு, மிளகாய்த் தூளையும் சேர்த்திருந்தாய். மனச்சாட்சி பற்றிய உன் ஆழ்ந்த பரிசிலனைகள் ஆல்பெர் காம்யுவுக்குச் சவால் விடுபவை. என்ன பெரிய அந்நியன்? அம்மா செத்துப் போனதற்குக் கூட அழுகை வராத வெட்கங்கெட்ட ராஸ்கல்.

நீ உன் பதிப்பாளரை நம்பிக்கை கொள்ளச் செய்யும்விதமான விற்பனை உத்திகளை விளக்க ஆரம்பித்தாய். சிற்றிதழ்களுக்குத் தலா இரண்டு பிரதிகள் மதிப்புரைக்கு அனுப்ப வேண்டும். மூன்று மாதங்களுக்கொருமுறைதான் அவை வரலாமா வேண்டாமா என்று யோசிக்கும். பாதகமில்லை. ஒரு நல்ல மதிப்புரை வந்து விட்டால் போதும். இலக்கிய அங்கீகாரமும் இணையற்ற விற்பனையும் உறுதி.

மட்டுமல்லாமல், தரமான விற்பனை நிலையங்களிலும் புத்தகத்தைப் பார்வைக்கு வைக்க வேண்டுமென வற்புறுத்தி, அவரை அண்ணா சாலையிலுள்ள ஒரு குளிர்சாதன வசதி பொருந்திய புத்தகக் கடைக்கு அழைத்துச் சென்றாய். பிரசித்தி பெற்ற கடைகளில் தமிழ் நூல்கள் தாழ்த்தப்பட்ட இனமாக, வீட்டு விலக்கான பெண் போல் ஓரமாகக் கிடத்தப்படுவதை எண்ணிக் கண்கலங்கினாய். 'இந்த நிலை விரைவில் மாறும் சார்!' என்று உணர்ச்சிவசப்பட்டு உன் பதிப்பாளரிடம் சொன்னாய்.

எது ஒன்றும் புரியாத அந்த ஆன்மிகவாதி, ஒரு புத்தகத்துக்கு ஏழு சதவீத கமிஷன், வைத்திருப்பதற்கான இட வாடகையாக நூலின் விலையில் ஐம்பதில் ஒரு பங்கு, நாற்பது நாட்களில் விற்காவிட்டால் திருப்பி எடுத்துக் கொண்டு விட வேண்டுமென்கிற நிபந்தனை - ஆகியவற்றில் கலவரமாகித் திருதிருவென விழித்தார். சுண்டைக்காய் கால் பணம். சுமைக்கூலி முக்கால் பணமா? என்று பிராந்தியப் பழமொழியால் உன்னையும் கலவரப்படுத்தினார்.

எத்தனை நம்பிக்கை சொன்னாய் அவரிடம்? சந்தேகமே வேண்டாம். புத்தகம் விற்கும். ஒரு விமர்சனக் கூட்டம் நடத்தி, சாதகமான ஓய்வு பெற்ற இலக்கியவாதிகளைப் பேச வைக்கலாம் என்றாய். செலவு மட்டும் அவர் பார்த்துக் கொண்டால் போதும். நபர்களை நீ ஏற்பாடு செய்து விடுவாய்.

வேறு வழியெதுவும் இல்லை அவருக்கு. உரலில் தலை கொடுத்த ஆடாகியிருந்ததுதான் காரணம்.

அதே புத்தகக் கடையின் மாடியில் சகாய வாடகையில் ஓர் இலக்கிய அரங்கமும் கட்டியிருந்தார்கள். வெண்பொங்கல், வடை, கேசரி, காப்பியுடன் இலக்கியவாதிகள் உன் புத்தகத்தை சாங்கோபாங்கமாகப் பாராட்டினார்கள். வேறு வழியில்லை. அன்றைக்கு நிறைய இலவசப் பிரதிகள்தான் காலியாயின. இலக்கியவாதிகள் முழு ஐம்பது ரூபாய் நோட்டை எடுத்து வர மறந்தது எப்படி உன் பிழையாகும்?

பதிப்பாளருக்கு மறுபடியும் நம்பிக்கை சொல்லி, நாளை முதல் விற்கும் என்று உறுதி கூறி வீடு வந்ததிலிருந்துதான் மறுபடியும் உன் கனவில் கொள்ளைக்காரர்கள் நுழைய ஆரம்பித்து விட்டார்கள்.

விற்குமா? விற்குமா? என்று உன்னையே நீ கேட்டுக் கொள்ளும்போது ஒன்றை மறந்து

விடுகிறாய். ஆல்பெர் காம்யு விற்பனை பற்றிக் கவலைப்பட்டதாகச் சரித்திரக் குறிப்புகள் ஏதுமில்லை. விற்பனை, பதிப்பாளரின் கவலை. உன் கவலை படைப்பு சார்ந்தது மட்டுமே என்றால் புரிந்து கொள்ள மறுத்து ஒரு வார இடைவெளியில் அந்தக் குளிர்சாதன புத்தகக் கடைக்குச் சென்று புத்தக அடுக்கை ஆராய்கிறாய்.

இருபது பிரதிகள். தலா ரூ. ஐம்பது மட்டும். ஆனால் புதுக்கருக்கு கலையாமல், மை வாசனையுடன் அப்படியேதான் இருக்கிறது. இலக்கிய ரசிகர்களெல்லாம் எங்கே ஓடி ஒளிந்து விட்டார்கள்? கவலையுடன் திரும்பி, இருநாள் இடைவெளியில் மீண்டும் செல்கிறாய். அதே இருபது. அதே கவலை. ஒருவருக்குக் கூடவா ஒரு புதிய இலக்கியப் புயலைக் கரை சேர்க்கும் உத்தேசமில்லாமல் போய் விட்டது?

நிறுவன மேலாளர் சொன்ன நாற்பது நாள் கணக்கில் பாதி தினங்கள் தீர்ந்து விட்டதை எண்ணிப் பார்த்தாய். திடீரென்று வேறொரு கலவரமும் உன்னை ஆட்கொள்கிறது.

மூன்று பேருந்துகள் மாறி ஈக்காடு தாங்கலிலிருந்து வேலை மெனக்கெட்டு நீ வந்து பார்க்கிறாய், விற்றிருக்கிறதா என்று. குட்டி யானை மாதிரியொரு கார் வைத்திருக்கும் ஆன்மிகப் புத்தகச் செல்வரான உன் பதிப்பாளர் வந்து பாராமலா இருப்பார்? ஐயோ, அவரை இனி எப்படிச் சந்திப்பது என்று சித்தம் கலங்குகிறாய்.

அடடே, அதோ ஒரு வாசகர் உன் புத்தகத்தை எடுக்கிறார். ஆர்வப் படபடப்புடன் நீ அருகே ஓடியதன் காரணம் அவர் வாங்க வேண்டும் என்பது மட்டுமல்ல. புத்தகத்தின் பின் அட்டையில் உன் புகைப் படம் இருக்கிறது. தற்செயலாக அதனையும் உன்னையும் கவனித்து ஒப்பிட்டு, கண நேர சித்தக் குழப்பத்தில், ஆர்வத்தில் உன் கையைப் பற்றிக் குலுக்கலாம், உன் படைப்புகளை அவர் அறிந்திருந்தால் அது பற்றிப் பேசலாம், மறக்காமல் ஒரு பிரதி வாங்கி, அதில் உன் கையொப்பம் கேட்டுப் பெறலாம் என்று ஆசைப்பட்டாயே, இது சரியானது. ஒரு படைப்பாளியின் நியாயமான ஆசை. ஒரு சரியான வாசகனைப் பெறுவதே விருது பெறுவதற்கொப்பானதல்லவா? சபாஷ். நீ ஓடியது சரிதான்.

ஆனால், என்ன பரிதாபம். அந்த வாசகர் ஏனோ உன்னை அறிந்திருக்கவில்லை. உன் புத்தகத்தை ஒரு புரட்டுப் புரட்டி விட்டு வைத்து விட்டது வருத்தத்துக்குரிய விஷயந்தான். அப்போது உன் கலவரம் அதிகமானது.

நீ ஆல்பெர் காம்யு அளவு சாதிக்கா விட்டாலும் பாதகமில்லை; உன் பதிப்பாளரை ஓட்டாண்டியாக்கி விடக்கூடாது என்று நினைத்தாய். அடுத்த முறை அவர் அங்கு வந்து பார்க்கும் போது ஒரு புத்தகமாவது விற்பனையாகியிருந்தால் எத்தனை நிம்மதி அடைவார் என்பது உன் யோசனை. நாமே ஒரு பிரதியை விலை கொடுத்து வாங்கி விடலாமா என்று கூட உனக்குத் தோன்றியது. பாதகமில்லாத உபாயந்தான். ஆனாலும் நீ ஓர் இலக்கியவாதி அல்லவா? ஐம்பது ரூபாய்த் தாளை எப்போதாவது தரிசிப்பதுதான் உன் வழக்கம்.

புத்தருக்கு ஞானத்தையே போதி மரம் தான் கொடுத்தது என்பது போலப் பள்ளிப் புத்தகங்கள் திரித்து விட்டன. அவருக்கு ஞானம் வந்த போது அம் மரத்தினடியில் இருந்தார். அதே போலத்தான் உன் ஞானக் கண் திறந்த போது நீ புத்தகக் கடையில் இருந்தாய்.

இலக்கியவாதிகளுக்குக் காசு கொடுத்து வாங்கும் வசதியுங்கிடையாது, வழக்கமுங் கிடையாது. வாங்கும் சக்தி உள்ளவனுக்கு இலக்கியம் வேண்டியிருக்காது. அதனால் எழுதுபவன் மரம் வெட்டப் போய்விட முடியுமா என்ன?

உன் பதிப்பாளரை மோசம் செய்து விட்டோமோ என்கிற குற்ற உணர்வுக்கு நீ அந்தக் கணமே விடைகொடுத்து விட்டு, அடுத்தப் புத்தகத்துக்கு அடுத்த பதிப்பாளரைத் தேட ஆரம்பித்தாய். மனச்சாட்சியுடனான உன் மல்யுத்தம் இவ்வாறாக ஒரு முடிவுக்கு வந்தது. ○

---

''ஐம்பது வயசானாலே மாடிக்குப் போகும்போது மூச்சு வாங்கறது சகஜம் தான். அதுக்காக ஒண்ணும் பயப்பட வேண்டாம்!''

''மாடிக்கு லிப்டில் போகும்போது கூடவா மூச்சு வாங்கும் டாக்டர்!''

– ஞா. ஞானமுத்து

# மாறு வேடத்தில் மாடு மேய்த்தவர்!

**இதோ ஒரு வித்தியாசமான கலெக்டர் என்று இரு வாரங்களுக்கு முன் திருச்சி கலெக்டர் மூர்த்தி பற்றிய கட்டுரை வெளியாயிற்று. இதோ மேலும் சில தகவல்கள்:**

கார்கில் நிதியா? மாநிலத்தில் முதல் மாவட்டம். சிறு சேமிப்பு வசூலிலும் முதலிடம். கொடி நாள் வசூலிலும் முதலிடம். இன்னும் பலப்பல திட்ட நடைமுறைகளிலும் மாநிலத்தில் முதலிடம். குழந்தைத் தொழிலாளர் சீரமைப்புத் திட்டப் பணிகளில் இந்தியாவிற்கே மாதிரி மாவட்டமாகத் திருச்சிராப்பள்ளி.

இதெல்லாம் எப்படி சாத்தியம்?

இரவு, பகல் பாராது கடினமாய் உழைப்பதுடன் மக்களோடு மக்களாக வாழ்வதால்தான் இவை அனைத்தும் சாத்தியமாயிற்று என்கிறார் மாவட்ட ஆட்சித் தலைவர் வை. மூர்த்தி.

ஊமைத்துரையின் நண்பராயிருந்த முகமத்கான் பிறந்த ஊர்தான் இவருக்கும் சொந்த ஊர்! விழுப்புரம் மாவட்டத்தில் இருக்கும் வழுதாவூர். அதில் சாதாரண விவசாயக் குடும்பம்.

எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கும்போது, அந்தக் கிராமத்தில் தான் நடத்திய இரவுப் பள்ளி இப்பவும் மறக்க முடியாதது என்கிறார். ஆடு, மாடுகளை மேய்த்துக்கொண்டு இருக்கும் படிப்பறிவற்ற ஆதிதிராவிட சிறுவர்களை ஓரிடத்தில் ஒன்றிணைத்துப் பாடம் சொல்லித் தர ஏற்பாடு. விளக்கு வெளிச்சத்திற்கு என்ன செய்வது? வீடு வீடாய்க் கூடை சுமந்து சென்று நெல் சேகரித்து அதனைக் கடையில் தந்து மண்ணெண்ணெய் வாங்கி காடா விளக்கு வெளிச்சத்தில் 'கற்கை நன்றே' சொல்லிக் கொடுத்தது நினைவுகளை விட்டு அகலாது என்கிறார்.

இந்தப் பதிமூன்று வயதிலே அவரது நெஞ்சில் சமூக நலப் பணிகளுக்கு விதை தூவப்பட்டு விட்டது.

பள்ளிப்படிப்பு முடிந்ததும் கல்லூரிப் படிப்பு சென்னையில். பிரசிடென்ஸி கல்லூரியில் எம்.ஏ. வரலாறு. அப்பொழுது தமிழ்ப்பாடம் எடுத்தவர் மு. மேத்தா. "அவர் எனது கல்லூரிப் படிப்புக்கு மட்டுமல்ல வாழ்க்கைக்கும் ஆசிரியராய் விளங்கியவர்" என்கிறார் வை. மூர்த்தி. பின்னர் சட்டக் கல்லூரியில் பி.எல்., முடித்தவுடன் கூட்டுறவுச் சங்கங்களின் துணைப் பதிவாளர் பணி. குரூப் ஒன் தேர்வில் தேர்ச்சி பெற்று சைதாப்பேட்டை, பெரியகுளம் ஆகிய பகுதிகளில் ஆர்.டி.ஓ., அதன் பின்னர் அப்பொழுது முதல்வராக இருந்த எம்.ஜி.ஆருக்கு பி.ஏ.வாகப் பணி. அதனைத் தொடர்ந்து டிட்கோவில் தலைவர்/மேலாண்மை இயக்





''இன்னிக்குத்தான் வேலையில் சேர்ந்திருக்கீங்க. சங்கோஜப்படாமல் எதுவானாலும் கேளுங்க!''

''இந்த வருஷமே எனக்கு போனஸ் கொடுப்பீங்களா சார்!''

– ஞா. ஞானமுத்து

குனர். படிப்படியாக வளர்ச்சி பெற்று 1991ல் IAS கேடருக்கு வந்து விட்டார். பிறகு தூத்துக்குடியில் ஐந்து மாதம் கலெக்டராகப் பணியாற்றிவிட்டு இப்பொழுது திருச்சியில்.

''தமிழகத்தின் பல பகுதிகள்லயும் பணி புரிஞ்சிருக்கீங்க. அதுல ரொம்ப சவாலாக எடுத்துட்டு செய்த காரியம்ன்னு...?''

''1982 – 83கள்ல நான் ஆர்.டி.ஓ.வா இருந்தேன். தேனி – ஆண்டிப்பட்டி வட்டத்தில் இருந்த வருசநாடு வனப்பகுதிகள்லேந்து விலையுயர்ந்த தேக்கு, மற்ற மர வகைகளை வெட்டி கடத்திட்டு இருந்திச்சு ஒரு பெரிய கும்பல். மாடு மேய்க்கற ஆள் மாதிரி நானும், இன்னொருத்தரும் (இன்ஃபார்மர்) கோவணம் கட்டிக்கிட்டு ஏழெட்டு மாடுகளை ஓட்டிக்கிட்டு அந்தப் பகுதிகள்ல ஒன்பது நாள் அலைஞ்சி திரிஞ்சோம். உயிரையும் பொருட்படுத்தாது காடு மேடெல்லாம் சுத்தி சுத்தி வந்து அந்தக் கூட்டத்தை காவல்துறை உதவியோடு எங்கும் தப்பித்துப் போகாம வலை விரிச்சி கூண்டோடு பிடிச்சிட்டோம். எனக்கு அது ரொம்பவும் திருப்தியான பணிகள்ல ஒண்ணு.''

''தங்களைத் தமிழ்ப் பற்றாளர் என்று கூறுகிறார்களே?''

''என்னுடைய மகனுக்கு அன்புச்சோழன் என்றும், மகளுக்கு கனிமொழி என்றும், வசிக்கும் இல்லத்திற்கு சோழமொழி எனவும் பெயர் வைத்திருக்கிறேன். 1970லே வங்கிக் காசோலைகளில் தமிழில் கையெழுத்திட்டுள்ளேன். மாணவப் பருவத்திலிருந்தே சிறு கதைகள், கவிதைகள் எழுதுவதில் ஆர்வம் அதிகம். இதழ்களுக்கு நான் அனுப்பிய சிறு கதைகள் திரும்பி வந்ததும் உண்டு!'' என்கிறார் சிரித்தபடி.

''நமக்கு நாமே திட்டத்தை மக்களிடம் கொண்டு சென்ற விதம் குறித்து...''

''ஒருமுறை திருச்சி அரசினர் தலைமை மருத்துவமனைக்குச் சென்றபோது அதனைப் பார்க்க நேரிட்டது. குழந்தைகள் பிரசவ வார்டு, போதிய இடவசதி, தொட்டில் வசதி ஏதுமின்றி சில தாய்மார்கள் தங்கள் குழந்தைகளை மரக்கிளைகளில் சேலைகளின் உதவியால் தொட்டில் கட்டி அதில் போட்டிருந்தார்கள். மரத்தடிக்குக் கீழே கம்பளிப் பூச்சிகளும், மரவட்டைகளும் ஊர்ந்து செல்கின்றன. உடனடியாய் இதற்கு மாற்று என்ன செய்வது? நமக்கு நாமே திட்டத்தின் வாயிலாக செயல்பட வேண்டியதுதான். ஒரு வியாபாரக் கழகப் பிரமுகர், திருச்சி ரவுண்ட் டேபிள் சங்கம், மருத்துவக் கல்லூரி மாணவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு வாரத்தில் குழந்தைகள் பராமரிப்பு பாதுகாப்புக் கூடம் ஒன்று தயாராகி விட்டது. மரக்கிளை தொட்டில்கள் இப்பொழுது மறைந்து போய்விட்டன மருத்துவமனை வளாகத்தினுள்!''

''சமீபத்திய திருச்சி வெள்ள நிவாரணப் பணிகள்...?''

''தாழ்வான பகுதிகளிலிருந்து தகவல்கள் வந்து கொண்டிருக்கும்போதே மீட்புப் பணிகளும், நிவாரணப் பணிகளும் துவங்கி விட்டன. மாநகர காவல் துறையினர், மாநகராட்சி ஊழியர்கள், தீயணைப்புத் துறையினர், பாய்லர் ஆலையிலிருந்து தீயணைப்புத் துறையினர், 117 பிரதேச ராணுவப் படையினரும் சேர்ந்துகொண்டு முழு ஈடுபாட்டுடன் செயல்பட்டனர். பெஸ்கி நகர், செல்வ நகர், எம்.எம். நகர், சண்முகா நகர் போன்ற பகுதிகளில் வெள்ள நிவாரணப் பணிகள் முடுக்கி விடப்பட்டன. வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பொதுமக்களுக்கு உணவுப் பொட்டலங்கள் வழங்கியதோடு நின்றுவிடவில்லை. அவர்கள் சமைத்துச் சாப்பிட அரிசி, காய்கறிகள், பால், மளிகைப் பொருட்கள் வாங்க பணம் என்று எல்லா வகைகளிலும் உதவி செய்தது நிவாரணப் பணி புரிந்த அனைவருக்கும் மனநிறைவைத் தந்தது!''

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# பொன்னியின் செல்வன்

## பதினான்காம் அத்தியாயம்

## கனவு பலிக்குமா?

நந்தினி மணிமேகலையின் முகவாயைச் சற்று நிமிர்த்திப் பிடித்துக் கொண்டு அவளுடைய மலர்ந்த கண்களை ஊடுருவி நோக்கினாள்.

"என் கண்மணி! உன் அந்தரங்கத்தை நீ என்னிடம் சொல்லாமல் வைத்துக் கொள்வதே நல்லது. பார்க்கப் போனால், உனக்கு நான் பழக்கமாகி முழுமையாக ஒருநாள் கூட ஆகவில்லை. நெடுநாள் பழகிய தோழிகளிடந்தான் அந்தரங்கத்தைச் சொல்ல வேண்டும்" என்றாள்.

"இல்லை, அக்கா! உங்களைப் பார்த்தால் எனக்கு வெகுநாள் பழக்கமான தோழி மாதிரியே தோன்றுகிறது. யாரிடமும் சொல்லாத விஷயத்தைத் தங்களிடம் சொல்லும்படி என் உள்ளம் தூண்டுகிறது. யாரிடமும் கேட்கக் கூடாத காரியத்தைத் தங்களிடம் கேட்கும் தைரியமும் உண்டாகிறது..."

"அப்படியானால் கேளடி, கண்ணே!"

"உருவெளித் தோற்றம் என்று கதைகளில் சொல்லுகிறார்களே, அது உண்மையாக ஏற்படக் கூடுமா, அக்கா? நம் எதிரில் ஒருவர் இல்லாதபோது அவர் இருப்பது போலவே தோன்றுமா?"

"சில சமயங்களில் அப்படித் தோன்றும். ஒருவரிடம் நாம் அதிகமான ஆசை வைத்திருந்தால், அவருடைய உருவம் எதிரில் இல்லாவிட்டாலும் இருப்பது போலத் தோன்றும். ஒருவரிடம் அதிகமான துவேஷம் வைத்திருந்தால் அவருடைய உருவமும் தோற்றம் அளிக்கும். மாயக் கண்ணனுடைய கதை நீ கேட்டதில்லையா, மணிமேகலை? ஏன்?

நாடகம் கூடப் பார்த்திருப்பாயே? கம்ஸனுக்குக் கிருஷ்ணனின் பேரில் ரொம்பத் துவேஷம். ஆகையால் கண்ட இடமெல்லாம் கிருஷ்ணனாகத் தோன்றியது. கத்தியை வீசி வீசி ஏமாந்து போனான். நப்பின்னை என்னும் கோபிகைக்குக் கண்ணன் மீது ரொம்ப ஆசை. அவளுக்கும் கண்ணன் உருவம் இல்லாத இடத்திலெல்லாம் தோன்றுமாம். தூணையும் மரத்தையும் நதியின் வெள்ளத்தையும் கண்ணன் என்று கட்டித் தழுவிக் கொள்ளப் போய் ஏமாற்றமடைவாளாம்! அடியே, மணிமேகலை! உன்னை அந்த மாதிரி மயக்கி விட்ட மாயக் கண்ணன் யாரடி?''

"அக்கா! முதன் முதலாக நாலு மாதத்துக்கு முன்னால்தான் அவரை நான் நேரில் பார்த்தேன். அதற்கு முன்னால் என் தமையன் கந்தமாறன் அவரைப் பற்றி அடிக்கடி சொல்லியிருந்தான். அப்போதெல்லாம் அவர் உருவம் என் கண் முன் தோன்றுவதில்லை. ஒருதடவை பார்த்த பிறகு அடிக்கடி என் கனவில் அவர் தோன்றி வந்தார். பகலிலும் சில சமயம் எதிரில் அவருடைய உருவம் நிற்பது போலிருக்கும்...''

''நேற்றுக்கூட அந்த மாயாவியின் உருவெளித் தோற்றத்தை நீ கண்டாய் அல்லவா?''

"ஆம், அக்கா! உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

"என்னிடம் மந்திர சக்தி உண்டு என்பதைப் பற்றி உனக்கு யாராவது சொல்லவில்லையா..?''

"ஆம்; சொன்னார்கள். அது உண்மைதானா, அக்கா?''

"நீயே பரீட்சித்துத் தெரிந்து கொள். உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்த யௌவன சுந்தர புருஷன் யார் என்று வேண்டுமானால், என் மந்திர சக்தியினால் கண்டு சொல்லட்டுமா?''

"சொல்லுங்கள், பார்க்கலாம். எனக்கும் அவர் பெயரைச் சொல்லக் கூச்சமாயிருக்கிறது.''

நந்தினி சிறிது நேரம் கண்ணிமைகளை மூடிக்கொண்டிருந்து விட்டுத் திறந்து, "உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆசைக் காதலன் வாணர் குலத்தில் வந்த வல்லவரையன் வந்தியத்தேவன்! இல்லையா?'' என்றாள்.

"அக்கா! உங்களிடம் மந்திர சக்தி இருப்பது உண்மைதான்!'' என்றாள் மணிமேகலை.

"அடி, பெண்ணே! எப்போது உன் உள்ளத்தை அவ்வளவு தூரம் ஒருவருக்குப் பறி கொடுத்து விட்டாயோ, அப்போது ஏன் உன் தமையனிடம் அதைப் பற்றிச் சொல்லவில்லை? மதுராந்தகருக்கு ஆசை காட்டுவானேன்? கரிகாலரை இங்கே தருவித்து வீண் பிரயத்தனம் செய்வானேன்? என்னை அநாவசியமாக இங்கே வரவழைப்பானேன்?''

''அக்கா! என் தமையன் கந்தமாறனுக்கு அவரைப் பிடிக்கவில்லை...''

"அழகாயிருக்கிறது! உன் தமையனா கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான்? ஆனால் கந்தமாறன்தானே வந்தியத்தேவனைப் பற்றி உனக்குச் சொன்னான் என்றாய்? இங்கே அவனைக் கூட்டிக்கொண்டு வந்ததும் உன் தமையன்தானே?''

"ஆமாம்; கந்தமாறன்தான் அவரைப் பற்றிச் சொன்னான். அந்தப்புரத்துக்கு ஒரு நாளைக்கு அழைத்துக்கொண்டும் வந்தான். ஆனால் பிற்பாடு அவன் மனம் மாறி விட்டது. அதற்குக் காரணமும் இருக்கிறது. தஞ்சாவூரில் என் தமையனை அவர் கத்தியால் முதுகில் குத்தி விட்டாராம், அக்கா! உங்கள் அரண்மனையிலே என் தமையன் காயத்தோடு படுத்துக் கிடந்தானாமே? உங்கள் அன்பான பராமரிப்பினால்தான் அவன் உயிர் பிழைத்து எழுந்தானாமே?''

"நான் செய்ததை உன் தமையன் அதிகப்படுத்திக் கூறுகிறான். அது போனால் போகட்டும். இப்போது நீ என்ன செய்வாய்? உன் மனத்தைக் கவர்ந்தவன் இப்படி உன் தமையனுக்கு விரோதியாகி விட்டானே?''

"ஆனால் இவர் என்ன சொல்கிறார், தெரியுமா...?''

"இவர் என்றால், யார்?"

"அவர்தான்! நீங்கள் சற்று முன் பெயர் சொன்னீர்களே, அவர்தான்! கந்த மாறனை அவர் குத்தவேயில்லையென்று ஆணையிடுகிறார். வேறு யாரோ குத்தித் தஞ்சாவூர் கோட்டை மதில் ஓரத்தில் போட்டிருந்தார்கள் என்றும், அவர் எடுத்துக்கொண்டு போய்க் காப்பாற்றிய தாகவும் சொல்லுகிறார்..."

"இதை எப்போதடி அவர் உனக்குச் சொன்னார்?"

"நேற்றுத்தான்...!"

"நேற்று அந்த வந்தியத்தேவனை நீ நேரில் பார்த்தாயா, என்ன? அவனுடைய உருவெளித் தோற்றத்தைக் கண்டதாக வல்லவா கூறினாய்?"

"அதுதான் அக்கா, எனக்கு ஒரே மனக்குழப்பமாயிருக்கிறது. நேற்று நான் பார்த்தது அவரா, அல்லது அவருடைய உருவெளித் தோற்றமா என்று தெரிய வில்லை. நேற்று நடந்தவற்றை எண்ணி னால், எல்லாம் ஒரு கனவு மாதிரி இருக் கிறது. அக்கா! சில சமயம் மனிதர்கள் செத்துப் போனால் அவர்களுடைய ஆவி வந்து பேசும் என்று சொல்லுகிறார்களே, அது உண்மையா?" – இந்தக் கேள்வியைக் கேட்டபோது மணிமேகலையின் குரலில் அளவிலாத பீதி தொனித்தது.

நந்தினியின் உடலும் நடுங் கிற்று. எங்கேயோ உச்சி மேட்டைப் பார்த்த வண் ணம் "ஆம்; அது உண் மைதான்! அற்பாயுளில் மாண்டவர்களின் ஆவி அப்படி உயிரோ டிருப்பவர்களை வந்து சுற்றும். ஒருவரு டைய தலையை வெட்டிக் கொன்று விட்டார்கள் என்றால், சில சமயம் தலை மட்டும் வரும். சில சமயம் உடம்பு மட் டும் தனியாக வரும். இன்னும் சில சமயம் இரண்டும் தனித்தனியாக வந்து 'பழி வாங்கினாயா?' என்று கேட்கும்!' என்றாள்.

பிறகு மணிமேகலையைப் பார்த்து உரத்த குரலில், "அடி பெண்ணே! நீ எதற் காக இந்தக் கேள்வி கேட்டாய்! உன் காத லனுக்கு அப்படி ஏதாவது நேர்ந்திருக்கும் என்று பயப்படுகிறாயா? உன் மனத்தில் இந்தச் சந்தேகத்தை யார் கிளப்பி விட் டார்கள்?" என்றாள்.

"இந்த அரண்மனையின் ஆவேசக் காரன் ஒருவன் இருக்கிறான். அவனைக் கூப்பிட்டு அனுப்பினேன். அவனை யாரோ நேற்றிரவு அடித்துப் போட்டு விட்டார்களாம். அவனுக்குப் பதி லாக அவன் பெண்டாட்டி தேவ ராட்டி வந்தாள். அவள்தான் சொன் னாள்..."

"சீச்சீ! அதையெல்லாம் நீ நம்பாதே!"

"எனக்கும் நம்பிக்கைப்படவில்லை. வெறும் ஆவி வடிவமாயிருந்தால், தொட முடியாதல்லவா, அக்கா!"

"ஆவியையும் தொட முடியாது; உரு வெளித் தோற்றத்தையும் தொட முடி யாது. நீ ஏன் கேட்கிறாய்! உன் உள்ளத் தைக் கவர்ந்தவனை நீ நேற்றுத் தொட்டுப் பார்த்தாயா, என்ன?"

"அதுதான் ஒரே குழப்பமாயிருக்கிறது. தொட்டுப் பார்த்தது போலவும் இருக் கிறது; ஆனால் வேறு சில விஷயங்களை நினைத்துப் பார்த்தால் சந்தேகமாகவும் இருக்கிறது."

"நேற்று நடந்ததையெல்லாம் விவர மாகச் சொல்லடி பெண்ணே! நான் உன் சந்தேகத்தை நிவர்த்தி செய்கிறேன்!"

"ஆகட்டும், அக்கா! நான் ஏதாவது முன் பின்னாக உளறினால் கேள்வி கேட் டுத் தெரிந்து கொள்ளுங்கள்!" என்றாள் மணிமேகலை. பிறகு அவள் கூறினாள்:- "நேற்று நான் கிட்டத்தட்ட இதே நேரத் தில் இங்கே இருந்தேன். என் தமையன் சொல்லிப் போயிருந்தபடி தங்களுக்கு இங்கே வேண்டிய சௌகரியம் எல்லாம் பணிப்பெண்கள் சரியாகச் செய்திருக் கிறார்களா என்று கவனிப்பதற்காக வந்தேன். ஒருமுறை, இதோ இருக்கும் கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன்...!"

"உன் அழகை நீயே பார்த்துக் கொண் டிருந்தாயாக்கும்..."

"அப்படியொன்றும் இல்லை, அக்கா! என் முக இலட்சணம் எனக்குத் தெரி யாதா, என்ன?"

"உன் முக லட்சணத்துக்கு என்ன குறைவு வந்தது? ரதியும் இந்திராணியும் மேனகையும் ஊர்வசியும் உன்னைப்

பார்த்துப் பொறாமைப்பட மாட்டார்களா?"

"அவர்கள் எல்லாரும் உங்கள் கால் தூசி பெற மாட்டார்கள், அக்கா!''

"சரி, சரி! மேலே சொல்! கண்ணாடியில் உன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாய்...''

"அப்போது திடீரென்று இன்னொரு முகம் கண்ணாடியில் தெரிந்தது. என் முகத்துக்கு அருகில் தெரிந்தது...''

"அது உன் காதலன் முகந்தானே!''

"ஆமாம்; எனக்குத் தூக்கி வாரிப் போட்டது...''

"எதற்காகத் தூக்கி வாரிப் போட வேண்டும்? நீதான் அடிக்கடி அவனுடைய முகத்தைக் கனவில் பார்ப்பதுண்டு என்று சொன்னாயே? உருவெளித் தோற்றத்தைக் காண்பதுண்டு என்றும் கூறினாயே?"

"அதற்கும் இதற்கும் கொஞ்சம் வித்தியாசம் இருந்தது. கனவில் வரும்போது எதிரே சற்றுத் தூரத்தில் தெரியும். உருவெளித் தோற்றத்திலும் அப்படித்தான். ஆனால் இங்கே பின்னாலிருந்து - சொல்லக் கூச்சமாயிருக்கிறது...''

"பாதகமில்லை, சொல்லடி கள்ளி!''

"பின்னாலிருந்து கன்னத்தில் முத்தமிட வருகிறதைப் போல் இருந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஒருவரும் இல்லை. பிறகு கண்ணாடியிலும் அந்த முகம் தெரியவில்லை. எனக்கு ஒரு சந்தேகம் உண்டாயிற்று. இந்த அறைக்குப் பக்கத்தில் உள்ள வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவை உங்களுக்குத் திறந்து காட்டினேன் அல்லவா? நேற்று, கண்ணாடி அந்தக் கதவுக்கு நேரே வைத்திருந்தது. ஆகையால் அந்தக் கதவைத் திறந்து வேட்டை மண்டபத்திலிருந்து யாராவது எட்டிப் பார்த்திருப்பார்களோ என்று தோன்றியது. அப்படியிருக்க முடியாது என்று எண்ணினேன். அன்னிய புருஷன் ஒருவன் அந்த வேட்டை மண்டபத்தில் எப்படி வந்திருக்க முடியும்? ஆயினும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகக் கதவைத் திறந்து வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்த்தேன்...''

நந்தினி இதற்குள் ஆர்வத்துடன் கேட்கத் தொடங்கியிருந்தாள். "வேட்டை மண்டபத்தில் அந்தத் திருடன் ஒளிந்திருந்தானா? அகப்பட்டுக்கொண்டானா?'' என்று கேட்டாள்.

"என்ன அக்கா, அவரைத் 'திருடன்' என்கிறீர்களே?"

"திருடன் என்றால், நிஜத் திருடனா? உன் மனத்தைக் கவர்ந்த் திருடனைச் சொன்னேன் அடி! அவன் வேட்டை மண்டபத்தில் இருந்தானா?''

"அதுதானே அதிசயம்! அவர் அங்கே இல்லை. அதற்குப் பதிலாக எங்கள் அரண்மனைப் பணியாள் இடும்பன்காரி அந்த அறையைச் சுத்தம் செய்துகொண்டிருந்தான். அவனுடைய முகம் அய்யனார் கோவில் வாசலில் உள்ள காடு வெட்டிக் கருப்பன் முகம் மாதிரி இருக்கும். 'இங்கே வேறு யாராவது வந்ததுண்டா?' என்று கேட்டேன். 'இல்லை' என்று சாதித்து விட்டான்.

"அவன் பொய் சொல்லியிருப்பான் என்று கருதுகிறாயா?''

"அது என்னமோ எனக்குத் தெரியாது. ஆனால் இன்னொரு ஆள் அந்த மண்டபத்தில் ஒளிந்திருப்பதாகத் தோன்றியது. 'திருட்டு தானே வெளியாகட்டும்' என்று நான் இந்த அறைக்குத் திரும்பி வந்து விட்டேன்...''

"திருட்டு வெளியாயிற்றா?''

"கேளுங்கள்! நான் இந்த அறைக்குள் வந்து வேட்டை மண்டபத்துக்குள் ஏதாவது பேச்சுக்குரல் கேட்கிறதா என்று கவனித்துக்கொண்டிருந்தேன். பேச்சுக் குரல் கேட்டது. தடபுடலாக ஏதோ விழுகிற சத்தமும் கேட்டது. நான் என்ன செய்யலாம் என்று யோசித்துக்கொண்டிருக்கும்போதே இந்தக் கதவு அசைந்தது. நான் விளக்கை மறைத்து வைத்து விட்டுக் காத்துக்கொண்டிருந்தேன். இந்தக் கதவிலேயே வட்டமான ஒரு சிறிய உட்கதவு இருக்கிறது. அதைத் திறந்து கொண்டு ஓர் உருவம் இங்கே வரப் பார்த்தது. 'அபயம்! அபயம்! என்னைக் காப்பாற்று!' என்று குரல் கேட்டது. குரலும் உருவமும் அவரைப் போல் தோன்றியபடியால், அவர் இந்த அறையில் வருவதற்கு உதவி செய்துவிட்டு

விளக்கைப் போட்டேன். பார்த்தால் அவரேதான்!''

''மணிமேகலை! இது என்ன அதிசயமடி! விக்கிரமாதித்யன் கதையைப் போல அல்லவா இருக்கிறது?''

"இன்னும் கேளுங்கள்! நாலு மாதக் கனவில் கண்டு வந்தவரை நேரில் பார்த்ததும் என் உள்ளம் பூரித்தது; உடம்பு சிலிர்த்தது. ஆனால் கள்ளக் கோபத்துடன் அவரிடம் பேசினேன். 'பெண்கள் வசிக்கும் அந்தப்புரத்தில் எப்படி அவர் திருட்டுத்தனமாகப் பிரவேசிக்கலாம்?' என்று கேட்டேன். அவரைக் கொல்லுவதற்காக யாரோ சிலர் துரத்திக்கொண்டு வருவதாகக் கூறினார். 'உயிருக்குப் பயந்தோடும் பயங்கொள்ளி' என்று பரிகசித்தேன். அதற்குத் தம்மிடம் ஆயுதம் இல்லை என்று சமாதானம் கூறினார். பிறகுதான் என் தமையனை அவர் முதுகில் குத்தியதைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன். 'இல்லவே இல்லை' என்று சத்தியம் செய்தார், அக்கா!"

"நீயும் அதை நம்பிவிட்டாயாக்கும்!"

''அப்போது நம்பும்படியாகத்தான் இருந்தது. ஆனால் பிறகு நடந்ததையெல்லாம் யோசிக்கும்போது எதை நம்புவது, எதை நம்பாமலிருப்பது என்றே தெரியவில்லை...''

"பிறகு இன்னும் என்ன அதிசயம் நடந்தது?''

''அவருடன் பேசிக்கொண்டிருக்கும் போதே என் ஒரு காதினால் அடுத்த அறையில் ஏதாவது சத்தம் கேட்கிறதா என்று கவனித்துக்கொண்டிருந்தேன். பல பேர் நடமாடும் சத்தமும் பேச்சுக்குரல்களும் கேட்டன. ஆகையால் அவரைக் கொல்வதற்கு யாரோ தொடர்ந்து வருகிறார்கள் என்பது உண்மையாகவே இருக்கும் என்று எண்ணிக்கொண்டேன். கேளுங்கள், அக்கா! அந்தச் சமயத்தில் இந்தப் பேதை மனம் எப்படியாவது அவரைக் காப்பாற்ற வேண்டும் என்று உறுதிகொண்டது. அவரைக் கொல்ல வருகிறவர்கள் யார் என்றும் தெரிந்துகொள்ள விரும்பினேன். இடும்பன்காரி இதற்கெல்லாம் உட்கையாக இருப்பானா? அப்படியானால் அவன் இவருக்கு உட்கையா, இவரைக் கொல்ல வருகிறவர்களுக்கு உட்கையா என்றும் அறிய விரும்பினேன். வேட்டை மண்டபத்துக்குள் வரும் இரகசியச் சுரங்க வழி இவ்வளவு பேருக்குத் தெரிந்திருப்பதை நினைத்துத் திகில் உண்டாயிற்று. அதிலும் நீங்கள் இங்கே தங்கப் போகிறீர்கள் என்பதை எண்ணிய போது கவலை அதிகமாயிற்று. தகப்பனாரைக் கூப்பிட்டனுப்பலாம்



என்று நினைத்தால், அதற்கும் தைரியம் வரவில்லை. இவர் அந்தப்புரத்துக்குள் வந்திருப்பதைத் தகப்பனார் பார்த்தால், உடனே இவர் உயிருக்கே ஆபத்து வந்து விடும். ஆகையால் இவரை இங்கேயே சற்று இருக்கும்படி சொல்லிவிட்டு, வேட்டை மண்டபத்திற்குள் இருப்பவர்கள் யார் என்று பார்த்துவிட்டு வருவதற்காகக் கதவைத் திறந்துகொண்டு



போனேன். உள்ளே ஐந்தாறு ஆட்கள் மூலைக்கு மூலை சுவர் ஓரமாக இருந்தார்கள். என்னைப் பார்த்து விட்டு அவர்கள் பிரமித்து நின்றதாகத் தோன்றியது. அவர்களை அவ்விதம் பார்த்ததில் என் மனத்திலும் சிறிது பயம் உண்டாயிற்று. அந்தப் பயத்தைப்



போக்கிக் கொண்டு கடுங் கோபத்தை வரவழைத்துக்கொண்டு, அவர்கள் யார் என்று கேட்பதற்காக வாய் எடுத்தேன். இதற்குள், இந்த அறையில் என் தோழி சந்திரமதி மற்றொரு கதவு வழியாகப் புகுந்து 'அம்மா! அம்மா!' என்று கூப்பிட்டுக்கொண்டு வந்தாள். இவர் இங்கே இருப்பது எனக்கு உடனே நினைவு வந்தது. சந்திரமதி இவரைப் பார்த்து விட்டுக் கூச்சல் போடப் போகிறாளே என்று பயந்து போனேன். வேட்டை மண்டபத்துக்குள் இருப்பவர்களை மறுபடி பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பினேன். சந்திரமதியையும் வழி மறித்து அழைத்துக்கொண்டு இந்த அறைக்குள் வந்து பார்த்தேன். இங்கே அவரைக் காணவில்லை. மாயமாய் மறைந்து போய்விட்டார். 'யாராவது இங்கே இருந்தார்களா?' என்று சந்திரமதியைக் கேட்டேன். தான் பார்க்கவில்லை என்றாள். இன்னும் சிறிது தேடிப் பார்த்துவிட்டு மறுபடி வேட்டை மண்டபத்துக்குள் போனேன். அங்கேயும் நான் சற்று முன் பார்த்தவர்கள் யாரும் இல்லை. இடும்பன்காரி மாத்திரம் முன்போலவே அறையைச் சுத்தம் செய்துகொண்டிருந்தான். 'சற்று முன்னால் இங்கே வந்திருந்தவர்கள் யார்? அவர்கள் இப்போது எங்கே?' என்று கேட்டேன். இடும்பன்காரி 'இங்கே ஒருவருமே வரவில்லையே, அம்மா!' என்று ஒரு சாதிப்பாகச் சாதித்தான். அவன் வார்த்தையை என்னால் நம்ப முடியவில்லை. என் தோழி சந்திரமதியோ என்னைப் பரிகாசம் பண்ண ஆரம்பித்துவிட்டாள். 'அக்கா! இன்றைக்கு உங்களுக்கு ஏதோ சித்தப்பிரமைதான் பிடித்திருக்கிறது! ஆள் இல்லாத இடங்களிலெல்லாம் ஆள் இருப்பதாகத் தோன்றுகிறது'' என்றாள். பிறகு நீங்கள் எல்லாரும் கோட்டை வாசலை நெருங்கி வந்துகொண்டிருப்பதாகத் தெரிவித்தாள். தங்களை வரவேற்பதற்காக என்னை என் தந்தை உடனே அழைத்து வரச் சொன்னதாகவும் கூறினாள். உடனே நான் அரண்மனை வாசலுக்குப் புறப்பட்டேன். சீக்கிரம் அங்கே வந்து விடுவதற்காகச் சந்திரமதி வந்த நடையில் சென்று இரண்டு கட்டுக்களைத் தாண்டி மச்சுப் படி வழியாக ஏறி மேல் மாடத்தில் நடந்து போனேன். அப்போது மறுபடியும் ஓர் அதிசயத்தைப் பார்க்க நேர்ந்தது. அந்த வாணர்குலத்து வீரர் நிலா முற்றத்தைக் கடந்து மதில் சுவர் ஓரமாகப் போய்க்கொண்டிருந்தார். சுவரில் ஒரு மூங்கில் கழியை வைத்து ஏறி மதில் சுவரைத் தாண்டிக் குதிப்பதையும் பார்த்தேன். என் கண்களுக்கு அவ்வாறு தோன்றியது. அவையெல்லாம் உண்மையாக நடந்தவையா அல்லது என் சித்தப் பிரமையா என்று இன்னமும் எனக்கு நிச்சயமாகவில்லை.

நந்தினி சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அந்த மாளிகை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் அடர்ந்த மரங்களுக்கிடையே நேற்று மாலை அவள் பார்த்த இரு முகங்கள் அவள் மனக்கண் முன் தோன்றின. அவர்களைப் பிடிப்பதற்குக் குதிரை ஆட்கள் ஏவப்பட்டிருக்கிறார்கள் என்பதையும் அவள் அறிந்திருந்தாள். அவர்கள் ஒருவேளை இதற்குள் பிடிபட்டிருப்பார்களா? பிடிபட்டிருந்தால் இங்கே கொண்டு வரப்படுவார்களா...?

"அக்கா! உங்களுக்கு என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டு, நந்தினியின் சிந்தனையைத் தடை செய்தாள் மணிமேகலை.

''எனக்கா! எனக்குத் தோன்றுகிறதையா கேட்கிறாய்? உனக்கு மோகப் பித்தம் நன்றாகத் தலைக்கு ஏறியிருக்கிறது என்று தோன்றுகிறது'' என்றாள் நந்தினி.

"சந்திரமதியைப் போல் நீங்களும் பரிகாசம் செய்கிறீர்களா?''

"நான் பரிகாசம் செய்யவில்லையடி! நேரில் பார்த்துப் பேசிய உனக்கே உண்மையா, கனவா, சித்தப் பிரமையா என்று தெரியவில்லையே? நான் எப்படிச் சொல்ல முடியும்? இந்த அறையிலிருந்து வெளியேறிப் போவதற்கு வேறு ஏதேனும் இரகசிய வழி இருக்கிறதா?''

"எனக்குத் தெரிந்த வரையில் வேறு இரகசிய வழி இல்லை, அக்கா!''

"நீயும் சந்திரமதியும் போன வழியில் அவனும் போய் மச்சுப்படி ஏறிப் போயிருக்கலாம் அல்லவா?''

"அங்கே வழியில் பல பணிப்பெண்கள் இருந்தார்கள். அக்கா! அவர்களுக்குத் தெரியாமல் போயிருக்க முடியாது."

"அதிசயமாகத்தானிருக்கிறது.... இதையெல்லாம் பற்றி உன் தகப்பனாரிடம் நீ தெரிவிக்கவில்லையா?"

"தெரிவிக்கவில்லை, அக்கா! தகப்பனாரிடம் சொல்லக் கூச்சமாகவும் இருக்கிறது; பயமாகவும் இருக்கிறது. ஒருவேளை அவர் இங்கே வந்திருந்ததெல்லாம் உண்மையாக இருந்தால்..."

"ஆமாம்; புருஷர்களிடம் இதைப் பற்றியெல்லாம் பேசாமலிருப்பதே நல்லது. அவர்களுக்குச் சொன்னாலும் புரியாது..."

"என் தமையனிடம் சொல்லலாமா, வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்..."

"அவனிடம் சொன்னால் கட்டாயம் ரகளையாக முடியும். உன் தமையனுக்கு இப்போது எப்படியாவது உன்னைக் கரிகாலனுக்குக் கல்யாணம் பண்ணி வைத்து 'விட வேண்டும் என்றிருக்கிறது...!"

"அக்கா! நீங்கள்தான் எனக்கு உதவி செய்ய வேண்டும். கந்தமாறனுக்கு உங்களிடம் ரொம்ப விசுவாசம். நீங்கள் சொன்னால் கேட்பான்..."

"அடி பெண்ணே! நான் எந்த நோக்கத்துடன் இங்கே வந்தேனோ, அதற்கு விரோதமாக என்னுடைய உதவியையே கேட்கிறாயே? வெகு கெட்டிக்காரி நீ! அப்படியே கரிகாலருக்கு உன்னை மணம் செய்து கொடுக்கும் யோசனையைக் கைவிட்டாலும், மற்றவனைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாதே? அவன் உன்னை விரும்புவான் என்பது என்ன நிச்சயம்?"

"அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை, அக்கா! அவர் என்னை விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்..."

"பெண்களின் தலை எழுத்தே அப்படித்தான் போலும்! புருஷர்கள் எப்படி நடந்துகொண்டாலும், பெண்கள் அவர்களுக்காக உயிரை விட வேண்டியதென்று ஏற்பட்டிருக்கிறது! ஏதோ உன் அதிர்ஷ்டம் எப்படி இருக்கிறதென்று பார்க்கலாம். மறுபடியும் நேற்று மாதிரி ஏதேனும் நேர்ந்தால் என்னிடம் சொல்வாய் அல்லவா?"

"உங்களிடம் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்வது அக்கா! நேற்றிரவு ஒரு கனவு கண்டேன்; அதையும் சொல்லிவிட விரும்புகிறேன்..."

"பகற் கனவு கண்டது போதாது என்று, இரவிலும் வேறு கனவு கண்டாயா? அது என்ன? மறுபடியும் அவன் கனவில் வந்து உன்னை ஏமாற்றி விட்டுப் போனானா?"

"இல்லை, இல்லை! இது வேறு விஷயம். நினைக்கவே பயங்கரமாயிருக்கிறது. காலை நேரத்தில் காணும் கனவு பலிக்கும் என்கிறார்களே? அது உண்மைதானா, அக்கா!"

"கனவைச் சொல் கேட்கலாம்! வேறு விஷயம் என்றால், இன்னும் யாரையேனும் பற்றிக் கனவு கண்டாயா?"

"இவரைப் பற்றித்தான்! இவரை யாரோ ஒருவன் கத்தியால் குத்த வருகிறது போல் இருந்தது. இவர் கையில் ஆயுதம் ஒன்றும் இல்லை. ஆனால் தரையிலே ஒரு கத்தி பளபளவென்று மின்னிக் கொண்டு கிடந்தது. நான் அதைத் தாவி எடுத்துக்கொண்டு பாய்ந்தேன். இவரைக் குத்த வருகிறவனை நான் முதலில் குத்தி விடுவது என்ற எண்ணத்துடன் ஓடினேன். அருகில் சென்றதும் அவனுடைய முகம் தெரிந்தது. அவன் என் தமையன் கந்தமாறன்...! 'ஓ!' என்று அலறிக் கொண்டு விழித்தெழுந்தேன். என் உடம்பெல்லாம் வியர்வையினால் சொட்ட நனைந்திருந்தது. வெகு நேரம் என் கை கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. கனவு அவ்வளவு நிஜம் போல இருந்தது. இது ஒருவேளை பலித்து விடுமா, அக்கா!"

"அடி பெண்ணே! உன் மனம் உண்மையிலேயே குழம்பிப் போயிருக்கிறது. நிஜமாக நடந்தது பிரமை போலத் தோன்றுகிறது. கனவிலே கண்டது நிஜம் போலத் தோன்றுகிறது! நல்ல தோழி எனக்குக் கிடைத்தாய்! நான்தான் பைத்தியக்காரி என்றால், நீ என்னை விட ஒரு படி மேலே போய்விட்டாய்!' என்றாள் நந்தினி.

இந்தச் சமயத்தில் சந்திரமதி உள்ளே வந்தாள். "அவர்கள் வந்து கொண்டிருக்கிறார்களாம்! வீர நாராயண ஏரியைத் தாண்டி வந்து விட்டார்களாம்!" என்று தெரிவித்தாள்.

(தொடரும்)

# 2000

## —வது ஆண்டுக்கான பொதுவான பலன்களைத் தருகிறார் இந்த வாரம்....



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

பொங்கல் சந்தோஷத்தோடு சேர்ந்து சுப காரியங்களுக்கான முஸ்தீபுகளில் ஈடுபடுவீங்க. கல்யாணம், ஃப்ளாட் வாங்கிக் குடியேறுவது போன்ற சந்தோஷ சமாசாரங்கள் நடக்கும். பொருளாதாரத்தைப் பொறுத்தவரை வருவதும் போவதுமாத்தான் இருக்கும். சில முக்கியமான முடிவுகளை எடுக்கறபோது மட்டும் உடனடியா எடுத்துடாதீங்க; யோசிங்க. முடிஞ்சா சில நாட்களுக்குத் தள்ளிப் போட்டு முடிவெடுங்க. மத்தபடி இந்த வருஷம் உங்களுக்கு நல்ல பலன்களைத் தர்ற வருஷந்தான்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

வருஷ ஆரம்பத்தில் வருமானம் கூடுற மாதிரியே செலவுகளும் கூடும். சந்தோஷமும் கூடும். பாதி வருஷம்வரை அத்தனை பிரமாதமான பலன்கள் இல்லேன்னாலும் பாதிக்கு மேல் நல்ல பலன்களை எதிர்பார்க்கலாம். ஏப்ரல், மே மாதங்களில் சில பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கும். குறிப்பா தொழில் விஷயங்களில் நிதானமா இருங்க. இல்லேன்னா சாதாரணப் பிரச்னைகள்கூட இடியாப்பச் சிக்கலாயிடும். பண விஷயம் அப்படியும் இப்படியுமாத்தான் இருக்கும். வருஷக் கடைசியில கல்யாணம் கூடி வரும். வீடோ, ஃப்ளாட்டோ வாங்குவீங்க.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

முதல் மூன்று மாதங்களுக்கு எதிலும் நிதானம் காட்டுங்க. முடிஞ்சா நீண்ட தூரப் பயணங்களை ஒத்திப் போடுங்க. தந்தையின் உடல் நலத்துக்காகக் கொஞ்சம் செலவு பண்ண வேண்டியிருக்கும். உடன்பிறப்புகளாலும் சில தொல்லைகள் வரலாம். ஏப்ரல் முதல் ஜூலை வரைக்கும் கவலையே வேண்டாம். நினைச்சது நடக்கும். கல்யாணம் நிச்சயமாகும். குழந்தைப் பிறப்பு நடக்கும். ஆகஸ்ட் முதல் அக்டோபர் வரை அரசியல்வாதிகள் எச்சரிக்கையா இருக்கணும். கலைத் துறையினருக்குப் புதுமை கை கூடும். வருஷக் கடைசில அனைவருமே கவனமா இருக்கணும்.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

வருஷ ஆரம்பத்தில் எல்லாமே மாமூல்தான். கோர்ட் வழக்குன்னு மாட்டிக்காதீங்க. கூடிய வரைக்கும் பயணம் வேண்டாம். மார்ச் முதல் மே வரை நல்ல முன்னேற்றம் தெரியும். உல்லாசப் பயணம், விருந்து கேளிக்கைன்னு ஜமாய்ப்பீங்க. வெளி நாட்டு லேர்ந்து நல்ல சேதி வரும். ஜூன், ஜூலையில் பண நடமாட்டம் அதிகரிக்கும். அதற்கப்புறம், சட்டம், போலீஸ் துறையில் இருப்பவர்கள் திடீர் மாற்றங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். முக்கியஸ்தர்களின் ஆதரவு கிடைக்கும்னாலும் எல்லோருமே டிசம்பரில் எச்சரிக்கையா இருக்கணும்.

# நடக்குமென்பார்; நடக்கும்!



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பொங்கலுக்கப்புறம் சில முக்கியமான காரியங்களெல்லாம் நீங்க நெனைச்ச மாதிரியே நடக்கும். சோம்பல் நீங்கி புத்துணர்ச்சியோடு செயல்படுவீங்க. ஏப்ரல் – ஜூலைகளில் சில சோதனைகள் ஏற்படும்னாலும் சமாளிச்சிடுவீங்க. ஆகஸ்ட் – நவம்பர் கால கட்டங்களில் புது முயற்சிகளில் ஈடுபடுவீங்க. வெற்றியும் கிடைக்கும். டிசம்பரில் புகழ் கூடும். சிலருக்கு வெளிநாடு விசிட் செய்யற யோகமும் இருக்கு. பொதுவா நல்ல வருஷம்னாலும் குடும்ப ஆரோக்கியத்தில் – குறிப்பா தாயின் ஆரோக்கியத்தில் அதிக அக்கறை காட்டணும்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

புது வருஷம் ஜோரா ஆரம்பிக்கும். சந்தோஷம் பொங்கும். சிலருக்குச் சில சோதனைகள் ஏற்பட்டாலும் மெட்ராஸ் மழை மாதிரி லேசானதாத்தான் இருக்கும். சமாளிச்சிடுவீங்க. பொருளாதாரத்தில் பிரச்னை இருக்காது. வெளிநாடு போற சான்ஸ்கூட பிரகாசமா இருக்கு. பிறருடைய உதவிகள் தாராளமா

**அக்னிசர்மா பக்கம்**

கிடைக்கும். திடீர் அதிர்ஷ்டங்களுக்கும் வாய்ப்பிருக்கு. சில மாணவர்களுக்கு வெளிநாடு போய்ப் படிக்கிற சான்ஸும் இருக்கு. பொதுவா இது எல்லோருக்குமே நல்ல வருஷம்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

ஜனவரி முதல் வாரத்திலேயே உங்கள் வாழ்க்கையில் அற்புதமானதொரு திருப்பம் ஏற்படும். மந்த நிலை போய், உற்சாகம் பீறிடும். உங்கள் புது முயற்சிகளுக்கு உதவிக் கரங்கள் நீட்டப் பலரும் காத்திருப்பார்கள். வெளிநாட்டுப் பயணத்துக்கும் சான்ஸ் இருக்கு. ஜூனுக்கு மேல் உங்கள் தொழிலில் சில மாற்றங்களும் பிரச்னைகளும் ஏற்படலாம். கவனமா சமாளிக்கணும். எதிலும் நிதானம் காட்டணும். மறுபடியும் டிசம்பரில் பழைய சுறுசுறுப்பும் யோகமும் ஆட்டோமாடிகா வந்து சேர்ந்திடும்.



**விருச்சிக ராசிக்காரரான சின்னி ஜெயந்துக்கு இது அமோகமான வருஷம். வாழ்க்கை வசதிகள் கூடி படு சந்தோஷமா இருப்பாராம்.**



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

ஜனவரியில் சந்தோஷம்னா, பிப்ரவரியில் கல்யாணம் மாதிரியான காரியங்களால மேலும் சந்தோஷமாகும். வாழ்க்கை வசதி கூடும். புதுப் பொருள்களை வாங்கித் தள்ளுவீங்க. பதவியுயர்வு, சம்பள உயர்வுகளுக்கும் குறையிருக்காது. ஆனாலும் ஆகஸ்ட்டுக்கு அப்புறம் வம்பு தும்புகளில் மாட்டிக்காதீங்க. சிக்கலாயிடும். பயணமும் வேண்டாம். மாணவர்கள் கடுமையா உழைக்க வேண்டியிருக்கும். டிசம்பரில் மீண்டும் நல்ல மாறுதல்களை எதிர்பார்க்கலாம்.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

ஆரம்பம் சுமாரா இருந்தாலும் அடுத்து வரும் மாதங்களில் திட்டங்களெல்லாம் எளிதில் நிறைவேறும். குடும்பத்தில் சுப காரியங்கள் நடக்கும். ஏப்ரல் – மே மாதங்கள் சட்டம், காவல் துறையினருக்குச் சவாலான கால கட்டமாகத்தான் இருக்கும். ஜூன், ஜூலைகளில் நல்ல காரியங்கள் நடக்கற அதே சமயங்களில் சில பிரச்னைகளும் வரத்தான் செய்யும். உடல் ஆரோக்கியத்திலும் அதிக அக்கறை காட்ட வேண்டியிருக்கும். அப்புறம் எல்லாம் சரியாயிடும். பொதுவா எல்லாத் துறையினருக்குமே பெரிய பிரச்னைகள் ஏதும் இல்லாத வருஷம் இது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

முதல் இரண்டு மாதங்கள் சாதாரணம்தான். பண விஷயத்தில் ஏற்ற இறக்கத்தைத் தவிர்க்க முடியாது. எதிலும் நிதானம் காட்டணும். அதற்கப்புறம்தான் முன்னேற்றம் தென்படும். பண விஷயத்திலும் அபிவிருத்தி ஏற்படும். வெளிநாட்டுலேர்ந்து நல்ல சேதிகள் வரும். மறுபடியும் ஆகஸ்ட், செப்டம்பர்களில் சில பிரச்னைகளைச் சந்திக்க வேண்டியிருக்கும். நிதானமா செயல்பட்டுச் சமாளிக்க வேண்டியிருக்கும். அதற்கப்புறம்தான் நேஷனல் ஹைவேஸில் பயணிக்கிற மாதிரி ஒரே சீரான முன்னேற்றமும் சுப காரியங்களும் நடக்க ஆரம்பிக்கும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

ஆரம்பம் குதூகலமா இருந்தாலும் அடுத்த மாதமே மகிழ்ச்சி குறையறதுக்கான வாய்ப்புகளே அதிகம். அரசியல், நிர்வாகத் துறையினருக்குப் பிரச்னைகளும் எதிர்ப்புகளும் வந்தே தீரும். ஆனாலும் பக்குவம் காட்டினா நிச்சயம் சமாளிக்க முடியும். மே மாதத்தில் சுப காரியங்களுக்கான சந்தர்ப்பம் கூடி வரும். ஆனாலும் பண விஷயத்தில் நெருக்கடி இருக்கும். அப்புறம் வரும் மாதங்களில்தான் பிரச்னைகள் குறைந்து நல்ல பலன்கள் கூடி வர ஆரம்பிக்கும். சிலருக்கு படிப்பு, வேலை விஷயமாக வெளிநாட்டு யோகம் அடிக்கலாம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கல்யாணம், காது குத்தல்னு உற்சாகமாத் தொடங்குவீங்க, இந்த வருஷத்தை. ஆனாலும் மார்ச்சுக்கு அப்புறம் குடும்பத்தில் சில பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கும். வழக்கு விவகாரங்களும் உங்களுக்குச் சாதகமா இருக்காது. கூடப் பிறந்தவங்களே கூட பிரச்னைகளைத் தருவாங்க. மேயில் அரசியல்வாதிகளுக்குச் சில திடீர்த் திருப்பங்கள் நேரிடலாம். ஜூனுக்கப்புறம் உத்தியோகஸ்தர்களுக்கு பிரமோஷன் இருக்கும். நவம்பர் – டிசம்பரில் நிதானம் அவசியம். தூரப் பயணம் தவிர்ப்பதே நல்லது. டிசம்பர் கடைசியில் பழையபடி உற்சாகமாயிடுவீங்க. ●

# “மக்களை ஒத்துழைக்கச் சொல்லுங்க!”

திருச்சி நகரில் 235 அன்-அப்ரூவ்ட் லே அவுட்கள் முளைத்து விட்டன!

“விளை நிலங்களில் வீடு கட்டி விட்டதனால், வெள்ளம் புகுந்து விடுகிறது” என்று நமது சந்திப்பின்போது நகர வரை படத்தை வைத்துக் கொண்டு விளக்கினார், மாநகராட்சி கமிஷனர் முத்துவீரன்.

இவ்வருடம் முப்பதாயிரம் கன அடி தண்ணீர் நகரினுள் புகுந்துவிட்டதாகச் சொன்னார் கமிஷனர்.

“இந்தப் பகுதி மக்களில் பெரும்பாலானோர் படித்தவர்கள். ஆனாலும் நிலம் வாங்கும்போது அது எந்த மாதிரியான இடம், குடியிருப்புக்கு ஏற்றதுதானா, மாநகராட்சி அனுமதி பெற்றுள்ளதா, TDP அப்ரூவல் உண்டா, குடிநீர், சாக்கடை வசதிகள் இருக்கின்றனவா என்பன போன்றவற்றை ஏனோ கவனிக்கத் தவறி விடுகிறார்கள். வெள்ளம் பாதித்த பெரும்பாலான பகுதிகள் மிகத் தாழ்வான விளைநில பூமிதான்” என்றவர், 1979-ல் வந்த வெள்ளப் பெருக்கை நினைவு கூர்ந்து, “அதன்பிறகு பெரிய வெள்ள பாதிப்பு இம்முறைதான்” என்றார்.

“உழவர் சந்தையைத் திறந்து வைக்க வந்த முதல்வர், நிவாரண நிதியாக ஐம்பது கோடி உடனடியாக வழங்கப்படும் என்று அறிவித்திருக்கிறார். உங்கள் நிவாரணத்திட்டம் என்ன?”

“இந்த ஐம்பது கோடி நிதியை வீணாகாமல் உபயோகிப்பதற்கு மூன்று திட்டங்கள் போட்டோம்.

1. கோரையாறு, ஆரியாறு-இரண்டுக்கும் அணைகள் கட்டுவது.

2. நதிப் போக்கை, நகருக்கு வெளியே செல்லுமாறு திருப்பிவிடுவது.

3. வெள்ளப் படுகைக் கால்வாய் அமைப்பது.

இந்த மூன்றில், மூன்றாவது திட்டத்தை பிடபிள்யூடி ஏற்றுக் கொண்டிருக்கிறது.



• சாக்கடைப் பாதையில் எழுந்த வீடுகளைச் சுட்டிக் காட்டுகிறார் கமிஷனர்.

அதாவது, கோரையாற்றில் வெள்ளம் வருமானால், அந்தக் கூடுதல் நீர் நகருக்குள் புகாமல் வேறொரு வழியாகச் செல்ல பை-பாஸ் கால்வாய் அமைப்பதுதான் திட்டம். இதற்காக இஞ்சினியர்கள் இப்போதே பணியாற்றத் தொடங்கி விட்டார்கள்!”

“வெள்ளத் தடுப்புக்குத் திட்டங்கள் கூறுகிறீர்கள். ஆனால் நகரில் எந்த ஒரு பகுதிக்கும் ஒழுங்கான சாக்கடை கூட இல்லையே? வடிகால் வசதியே இல்லாமலிருப்பதை ஏன் கவனிக்கவில்லை?”

“இதற்கும் மக்களைக் குற்றம் சாட்ட வருத்தமாகத்தான் உள்ளது. நீங்கள்



திருந்தன! பேராசிரியர்கள், வழக்கறிஞர்கள் என பெயர்ப் பலகைகள் அடையாளம் காட்டிய பலரும் மேல்தட்டுவாசிகள்!

மாநகராட்சி, இந்த ஆக்கிரமிப்பு வீடுகளை இடிப்பதற்காக அம்புக்குறி அடையாளங்கள் போட்டு, நோட்டீஸ் கொடுத்தால், பலரும் உடனே கோர்ட்டுக்குச் சென்று 'ஸ்டே' வாங்கி விடுவதாகச் சொன்னார்கள் கமிஷனருடன் வந்த பிற அதிகாரிகள்.

"இந்த வாய்க்கால்கள் ஒவ்வொன்றும் 42 கிலோ மீட்டர் நீள முடையவை. ஆனால் எட்டு வாய்க்கால்களுமே இன்று இருக்கிற இடம் தெரியாமல் வீடுகள் முளைத்துவிட்டன. போதாக்குறைக்கு பிளாட் போட்டு விற்பவர்கள், 'பாதுகாப்பு'க்காக ஆங்காங்கே கோயில்களையும் கட்டிவிட்டால் மாநகராட்சி என்ன செய்வது? மொத்தம் 879 வீடுகளை இப்போது இடிக்க வேண்டிய கட்டாயம்! கோர்ட் தடை விலகினால் பணி தொடங்கிவிடும்'' என்கிறார் கமிஷனர் முத்துவீரன்.



• மேயர் புனிதவல்லி பழனியாண்டி

என்னுடன் வந்தால் நேரில் அதற்கான காரணத்தை விளக்க முடியும்" என்ற கமிஷனர், அவரது காரிலேயே நம்மை பாரதி நகர் என்கிற குடியிருப்புப் பகுதிக்கு அழைத்துச் சென்றார்.

"திருச்சி நகரின் சாக்கடை நீர் வெளியேற எட்டு வாய்க்கால்கள் உண்டு. காத்தான் வாய்க்கால், தொட்டி வாய்க்கால், வண்ணாரப்பேட்டை வாய்க்கால், விருப்பாச்சிபுரம் வாய்க்கால், தென்னூர் இரட்டை வாய்க்கால், கோட்டை வாய்க்கால், தாராநல்லூர் வாய்க்கால், தேவதானம் வாய்க்கால் என்பவை அவை. இந்த வாய்க்கால்கள், கழிவு நீரைக் கொண்டு சென்று நகருக்கு வெளியே, கடலுக்குப் போகும் நதி நீரோடு சேர்த்துவிடும். ஆனால் இன்று எந்த வாய்க்காலும் ஒழுங்காக இல்லை. காரணம் வாய்க்கால் போகும் பாதையிலேயே வீடுகள் கட்டி விட்டார்கள்! பாருங்கள்'' என்று அவர் அழைத்துச் சென்று காட்டிய பாரதி நகரில் பளபளப்பான பல பங்களாக்கள் முளைத்



• கமிஷனர் முத்துவீரன்

"இந்த பிரச்னையினால்தான் நகரின் எந்தப் பகுதியிலும் சாக்கடை நீர் தேங்கியே இருக்கிறது. மழைக்காலத்தின் அவலம் நீங்கள் சொல்லாமலே எங்களுக்குத் தெரியும். உரிய மருத்துவ வசதிகளைச் செய்து தரத் தவறவில்லை'' என்றார் ஒரு மாநகராட்சி அதிகாரி.

கமிஷனருடன் பேசியபடியே மாநகராட்சி அலுவலகம் வந்து அங்கு மேயரையும் சந்தித்தோம்.

"திருமதி புனிதவதி பழனியாண்டி இங்கே முழுநேர மேயர்" என்று அவர் எதிரிலேயே ஜோக் அடித்தார் கமிஷனர்



## மக்களே திறந்த மேம்பாலம்!

இந்தியாவிலேயே மிக நீளமான பாலம் பெங்களூரில் நூறு கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்ட சிர்சி சர்க்கிள் மேம்பாலம்தான்! மூன்றாண்டுகளுக்கு முன்பு L&T நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு கட்டி முடிக்கப்பட்டுள்ள இந்தப் பாலத்தின் நீளம் 2.5 கி.மீ. இதைக் கட்டி முடிக்கப்படும்வரை எந்தவிதமான விபத்தோ போக்குவரத்து இடைஞ்சலோ ஏற்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. கட்டுமானப் பணிகள், கடந்த மாதமே முடிந்து விட்ட போதிலும் திறப்பு விழாவிற்காக கர்நாடக முதல்வரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். கொடுத்த தேதியில் அவர் அல்மாட்டி பிரச்னைக்காக பேச்சுவார்த்தை நடத்த டெல்லி செல்ல வேண்டியதாகி விட்டது. இருப்பினும், 'நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்' என்று முதல்வர் அனுமதி கொடுத்த பிறகும் திறப்புவிழா இழுத்தடித்துக் கொண்டே போயிற்று.

இந்தியாவில் புதிய தேசிய நெடுஞ்சாலைகளோ, மேம்பாலங்களோ கட்டப்பட்டால் அதை பயன்படுத்துபவர்களிடமிருந்து 'user pays' வசூலிக்கப்பட வேண்டுமென்று புதிய திட்டமொன்று கொண்டு வரப்பட்டிருக்கிறது. தற்போது அது நடைமுறையிலும் செயல்படுத்தப்பட்டு வருகிறது. டெல்லியில் கட்டி முடிக்கப்பட்ட 'நொய்டா' பாலத்திற்கு பயன்படுத்துபவர்களிடமிருந்து இப்போது பணம் வசூலித்து வருகிறார்கள். இதன் அடிப்படையில் இந்தப் பாலத்திற்கும் பணம் வசூலிக்கலாம் என்று யோசனை சொல்லப்பட்டது. இது தொடர்பான பேச்சுவார்த்தைகள் ஆரம்ப நிலையில் இருந்த காரணத்தினாலும் பாலத்தைத் திறப்பது மேலும் தாமதமாகிக் கொண்டிருந்தது.

'முக்கியப் பிரமுகர்களுக்காக நாங்கள் ஏன் காத்திருக்க வேண்டும்? ஏற்கெனவே இந்தப் பாதை நாங்கள் பயன்படுத்திக் கொண்டிருந்ததுதானே? இப்போது மேம்பாலமாக மாறியிருக்கிறது. இதனால் ஏற்படுகின்ற போக்குவரத்து நெரிசல் பற்றி அரசியல்வாதிகளுக்கு எங்கே தெரியப் போகிறது? அவதிப்படுவது நாங்களல்லவா?' என்று பயணத்தின்போது தடுக்க வந்த போலீசாரிடம் பொதுமக்கள் குமுற, மறுநாளே எந்தவிதமான அமர்க்களமுமின்றி மேம்பாலம் திறந்து வைக்கப்பட்டது!

— மகேந்திரன்

முத்துவீரன்.

மற்ற மேயர்களைப் போல சொந்தத் தொழில், தனித் தொழில், என ஏதும் இவருக்குக் கிடையாது என்கிறார்கள்.

"திருச்சியைப் பொறுத்தவரை மாநகராட்சி சிறப்பாகச் செயல்பட வேண்டுமானால் அரசைவிட, மக்கள் அதிகம் ஒத்துழைக்க வேண்டியது அவசியம். இங்கு நீங்கள் சுட்டிக்காட்டுகிற ஆக்கிரமிப்புகள்தான் வெள்ளத்துக்குக் காரணமென்றால், ஆக்கிரமிப்புகளை அகற்ற மக்களுடைய ஒத்துழைப்பு அவசியமாகிறது. காரணம், எந்த ஆக்கிரமிப்பும் யாராவது ஒரு 'முக்கியப் பிரமுகர்' சம்பந்தமில்லாமல் நடைபெறுவதில்லை. அரசியல் ரீதியிலான முட்டுக்கட்டைகளைச் சமாளிப்பதே பெரிய விஷயமாயிருக்கிறது" என்கிறார் மேயர்.

நதியோர ஆக்கிரமிப்பாளர்களுக்கு மாற்று இடம் தந்தாலும் போக மறுப்பதாகச் சொன்னார் மேயர்.

"ஸ்ரீரங்கத்தின் நிலைமை படுமோசமாக இருக்கிறதே. ஒரு புனித நகரைப் பராமரிப்பது போலவா வைத்திருக்கிறீர்கள்?"

"நாங்கள் எதுவுமே செய்ய முடிவதில்லை அங்கே! எங்கள் மாநகராட்சி ஆட்கள், ஆக்கிரமிப்பு அகற்றலுக்கெனப் போனால் உள்ளே நுழைய விடவே மறுக்கிறார்கள். மதில்சுவர்களை சரி செய்யும் விஷயமெனில், எங்கே நின்று சரி செய்ய முடியும்? வேலை பார்க்கக் கூட சாலையில் நிற்க முடியாத அளவு இட நெருக்கடி. நகரின் பாதாள சாக்கடை திட்டத்துக்காக 70 லட்சம் வரை செலவுத் திட்டம் தயாரித்தோம். அதுவும் நிறைவேற்றப் படாமல் பல தடைகள். அந்த ஊர் மக்கள் எங்களை விரோதியாகப் பாராமல் ஒத்துழைத்தால் மிகக் குறுகிய காலத்தில் திருப்பதிபோல ஆக்கிவிட முடியும் என்கிற நம்பிக்கை இருக்கிறது. ஏனெனில் ஸ்ரீரங்க மேம்பாட்டுக்கு என்று கேட்டால் அரசு நிச்சயம் நிதி தர மறுக்காது" என்கிறார் மேயர்.

ஒரு நேரடி சந்திப்புக்கு ஸ்ரீரங்கத்து மக்களும் மாநகராட்சியும் தயாரானால் இதற்கொரு விடிவு கிடைத்துவிடக் கூடும் என்று தோன்றுகிறது.

— கிருஷ்ணன்

படங்கள்: வெங்கடேஷ்



# கடி

**ப**ற்கள், நாக்கு, வாய், கழுத்து எல்லாமே சுளுக்கிக் கொள்கிற மாதிரி சிரிக்கிறார்கள். சந்தோஷம் என்றாலே சிரிப்பதுதான் என்கிற மாதிரி. சரஸ்வதிக்கு யார் சிரிப்பதைப் பார்த்தாலும் வயிறு எரிகிறது. சினிமாவில் பார்க்கிற நகைச்சுவைக் காட்சிகள், பத்திரிகையில் பிரசுரமாகிற நகைச்சுவைத் துணுக்குகள், தொலைக்காட்சியில் தொணதொணக்கிற தொணப்புகள் எல்லோருக்கும் விழுந்து விழுந்து சிரிக்க வைக்கிற விஷயங்கள். சரஸ்வதியைப் பொறுத்தவரை அவை எரிச்சல்கள். போன முறை பார்த்த படத்தில், போன முறை படித்த புத்தகத்தில், போன முறை பார்த்த தொலைக்காட்சி நிகழ்ச்சியில் வந்ததாகவே அவளுக்குத் தெரிகிறது.

"மனிதர்கள் யாரும் புதியதாக வாழவில்லை. எனவே அவர்கள் புதியதாக சிந்திக்கவில்லை. வாழ்ந்த மாதிரியான வாழ்க்கையைத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். சிரிப்பு என்பது பிறரின் துன்பமாகத்தான் இருக்கிறது. செந்தில், கவுண்டமணியிடம் உதைபடுவது சிரிப்பு. இந்த காட்சிக்கு நாம் அடிமை. மாறாக செந்திலிடம் கவுண்டமணி உதை வாங்கினால் நாம் சிரிப்பதற்குத் தயாராக இல்லை. அதே காட்சி, அதே வசனம் என்றாலும் உதைப்பவர், உதை வாங்குபவர் மாறி இருந்தால் நாம் சிரிக்க மாட்டோம். அப்படியென்றால் நாம் பைத்தியம். குறிப்பிட்ட விஷயத்திற்கு மட்டுமே சிரிக்கிற மன நோயாளிகள்." -யாராவது மேடையிலேற்றி, மைக்கை கொடுத்து விட்டால் இவ்வாறு பேசுவதற்கு நகைச்சுவை சம்பந்தமாக நிறைய விஷயங்கள் வைத்துக் கொண்டிருக்கிறாள். ஏன், இருநூறு பக்கங்களுக்கு ஆய்வு செய்து டாக்டர் பட்டம் கூட சரஸ்வதியால் வாங்க முடியும்.

**நே**ற்று கல்லூரியில் உணவு வேளை. தயிர் சாதப் பொட்டலத்தைப் பிரித்து சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது திலகா வந்தாள்.

"என்னடி சரஸ்! பாக்ஸ்ல கொண்டு வராம வாழை இலையில கட்டி வந்திருக்கே, ஓட்டல்ல வாங்கினியா?" என்று கேட்டாள்.

"இல்லடி. எங்கத் தோட்டத்திலேயே வாழை மரம் இருக்கு. வாழை இலைல சாப்பிட்டா உடம்புக்கு நல்லதுன்னு அம்மா கட்டிக் கொடுத்திட்டா..."

"ஆமாடி சரஸ்! நான் கூட ஒரு புத்தகத்துல படிச்சேன். வாழைக்கு நிறைய மருத்துவ குணம்னு. பழத்திலிருந்து, பூவிலிருந்து, தண்டு, இலை, நார் எல்லாமே பயனுள்ளதா இருக்கும். நான் உன்னை ஒண்ணு கேட்கட்டுமா?"

"கேளேன்."

"கல்யாண வீட்ல எதுக்கு வாழை மரம் கட்றாங்க?"

"தெரியலயே..."

ஹேமலதா முந்திக் கொண்டாள். "நான் சொல்லட்

## நாராயணி கண்ணகி

# ஜோக்

டுமா...? வாழையடி வாழையா இந்த உலகம் இருக்கும் வரைக்கும் சந்ததிகளை குடும்பக் கட்டுப்பாடு பண்ணாம உற்பத்தி பண்ணனும்னு சொல்றதுக்காக..."

"எந்தக் காரணமும் இல்லைடி. அழகுக்குதான் வாழை மரத்தைக் கட்டி இருக்காங்க... எப்படியும் வாழை மரத்தை வெட்டிதான் ஆகணும். அது இன்னொருமுறை காய்க்காது. தென்னை மரத்தை வெட்டி நிறுத்த முடியுமா? அதனாலதான்" என்றாள் நித்யா.

திலகா எந்த பதில்களுக்கும் திருப்தியாகவில்லை. "போங்கடி மக்குகளா! சிம்பிளான ஒரு பதில். அது கூடத் தெரியலை... கல்யாண வீட்ல எதுக்கு வாழை மரம் கட்றாங்கன்னா அது கீழே விழாம இருக்கத்தான்..."

அவ்வளவுதான். மொத்த பேரும் தடால் தடால் என்று சிரித்து விழ ஆரம்பித்தார்கள், சரஸ்வதியைத் தவிர. அவளுக்குள் நெருப்பு சுழன்றது.

"கல்யாண வீட்டில் எதற்கு வாழை மரம் நடுகிறார்கள் என்பது நல்லதொரு ஆய்வு. அதை சிரிப்பாக்கி சின்னா பின்னமாக்கி விட்டாளே... சரியானதொரு அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள வாய்ப்பின்றிப் போய் விட்டதே..."

இதுவே பரவாயில்லை. போன மாதம் கனமான மழை பெய்து, இரண்டு மூன்று தினங்களுக்கு வழியெல்லாம் சேறாக இருந்தது. ஜூவாலஜி மேடம் சறுக்கி விழுந்ததைப் பார்த்துவிட்டு வந்த சங்கரி வருத்தமாக மேடத்தின் துன்பமாக எடுத்துக் கொள்ளாமல், சிரித்து சிரித்துக் கூற, கேட்டவர்களும் கூட சிரித்தார்கள். சரஸ்வதிக்கு மனத்தில் பொங்கிற்று.

என்ன அநியாயம்? பிறர் துன்பப்படும்போது சிரிக்க வேண்டும் என்கிற புத்தி இந்த மனிதர்களுக்குள் எந்தக் காலத்தில் எப்படி நுழைந்தது? இது மிருகத்தனமான சிரிப்பல்லவா? மிருகங்கள் சிரிப்பதில்லையே... ஆனால் அழுகின்றன. மிருகத்திலிருந்து நாம் வித்தியாசப்படுகிற ஆறாவது அறிவு என்பது இந்த சிரிப்புதானா?

காவல் நிலையத்தில் பெண் கற்பழிக்கப்படுவதை மையமாக வைத்து ஆயிரம் ஜோக்குகள். ஆசிரமத்தில் சாமியார்களால் பெண்கள் கற்பழிக்கபடுவதும் ஜோக். மாமியாருக்குத் துன்பம் நேருகிற மாதிரியான விஷயம் ஜோக். நினைத்து நினைத்து தலையிலடித்துக்



கொள்வாள்.

**க**ல்லூரியின் ஆண்டு விழா அறிவித்தார்கள். அதில் சிறப்பு அம்சம் 'கடி ஜோக்' போட்டி.

சரஸ்வதியால் தாங்கவே முடியவில்லை. "வேறு ஏதாவது உருப்படியா வைக்கக் கூடாதா?" என்று விழாவிற்குப் பொறுப்பாக இருந்த எக்கனாமிக்ஸ் டிபார்ட்மெண்ட் புரொபசரை தைரியமாகக் கேட்டாள்.

அவர் நிதானமாகக் கண்ணாடியை கழட்டி கையில் வைத்துக் கொண்டு சொன்னார்– "விழான்னாலே காமெடின்னு ஆகிப் போச்சும்மா... பட்டிமன்றம் வைச்சாலும் ஜோக்குதான் பண்ணப் போறாங்க. இப்போ எல்லா விஷயமும் சிரிக்க வைக்கிறதை நோக்கிதான் போகுது... மனுஷன் எத்தனையோ கஷ்டத்துல இருக்கான்மா. சிரிக்கவே வாய்ப்பு இருக்கிறதில்லை... சிரிக்கிறது இதயத்துக்கு நல்லதாம். சிரிக்கட்டும் விடு."

"இல்லைங்க ஸார்! இந்த சிந்தனையே தப்பு. ட்ரிங்ஸ் பண்ணா குடல் வெந்துடும். அதுக்கு குடிக்கிறதை நிறுத்தணும். பகலெல்லாம் மாத்திரை, மருந்துன்னு சாப்பிடறது. ராத்திரி ஆனதும் குடிக்கிறது. எப்படி உடம்பு நல்லா ஆகும்? அப்படிதான் ஸார்! சிரிக்கிறது உடம்புக்கு நல்லதா இருக்கலாம். துன்பப் படறது கெட்டதில்லையா? மக்களுடைய துன்பம் போறதுக்கு வழி கண்டு பிடிக்காம, ஜோக்குகளால மட்டும் சிரிக்க வைக்கிறது, ராத்திரில பிராந்தி குடிக்கிறதும், பகல்ல மருந்து குடிக்கிறதும் போலதான் ஸார்" என்றாள்.

"சரி! டைமாச்சு. நான் வரட்டுமா? அப்போ கடி ஜோக் போட்டில நீ கலந்துக் கலையா?" என்று கூறிவிட்டு நகர்ந்து விட்டார்.

**போ**ட்ரான் அணு குண்டைப் போல் வெடித்த சிரிப்பொலியில் மண்டபம் அதிர்ந்தது. ஐநூறு பேருக்கு மேல் குவிந்திருந்த அந்தக் கல்லூரி ஆண்டு விழா. இல்லை. கடி ஜோக் விழாவில், அனைவரின் வயிறும் புண்ணாயிற்று.

"இப்போது கடிக்க வருபவர் நித்யா!" விழாத் தலைவர் அழைத்தார்.

ஒருவித படபடப்புடனும் இதற்கு முன்பு கடித்தவர்களை விட சிறப்பாகக் கடிக்க வேண்டுமே என்கிற அக்கறையுடனும் மேடைக்கு வந்தாள் நித்யா. மேடை ஏறும் காரணத்தால் வெகுவாக அலங்கரித்துக் கொண்டிருந்தாள். மேடையை நிலா விளக்குகளால் குளிப்பாட்டி அமர்ந்திருப்பவர்களை நட்சத்திரங்களாய் மின்ன வைத்திருந்தார்கள்.

"எனக்குக் கல்யாணமாகி பதினைஞ்சி வருஷம் ஆகுது..." என்று நித்யா தொடங்கினபோதே சிரிப்பு விரிந்தது. இன்னும் மணமாகாத, கல்லூரியில் படிக்கிற பெண் அப்படிச் சொன்னால் எடுப்பு இருக்கும் தானே...? அதாவது இப்போது பார்வையாளர்கள் நித்யாவை திருமணமாகி பதினைந்து வருடங்களாகிவிட்ட பெண்மணியாக பாவித்துக் கொள்ள வேண்டும்.

"சொல்லுங்க ஆன்ட்டி..." கூட்டத்திலிருந்து ஒரு குரல்.

ஆன்ட்டிகள் முந்தானையை மேலேற்றி விட்டுப் பேசுவதைப் போன்று நடிப்பு நடித்து "கல்யாணம் ஆனப்பவே அந்த மனுஷன்கிட்ட ஹனிமூனுக்கு ஊட்டி போலாம்னு கேட்டேன்" என்றாள்.

ஹனி மூன் என்ற கிளுகிளுப்பு சேர்ந்து கொண்டதால் பெரியதாய் சிரிப்பும், சத்தமும் எழுந்தது.

மேடையில் ஜோக் சொல்லுகிற போது வெறும் வார்த்தைகளுக்குப் பலனில்லை. அதை உச்சரிக்கும் விதம், ஏற்ற இறக்கம், சமயத்தில் பார்வையாளர்களை சிரிக்க வைத்துவிட்டு சும்மா நிற்கிற நிதானம்

---

**"டாக்டருக்குத் தன்னம்பிக்கை குறைவு போல!"**

**"எதை வச்சு சொல்ற?"**

**"அவரோட அறைல 'வாங்கின பீஸ் வாபஸ் கிடையாது' என்று எழுதி வச்சருக்காரே!"**

– அம்பை தேவா



எல்லாவற்றிற்கும் மேலாக நடிப்பு, பேசுவது என்றாலும் கூட, பேசுகிற பாத்திரமாகவே மாறி, அதன் உடலசைவுகளையும் காட்ட வேண்டும் என்கிற வித்தைகளை நித்யா அறிந்திருந்தாள்.

"இந்த பதினைஞ்சி வருஷமும் சளைக்காம அவரும் ஊட்டிக்கா? போலாம்னு சொல்லிட்டுதான் இருக்கார். போன பாடில்லை. நானும் விடாம, ஒவ்வொரு சம்மருக்கும் கேட்டுட்டுதான் இருப்பேன். அவரும் போலாம் போலாம்னு சொல்லுவாரு... அவ்ளோதான், ப்ராடு! ஏமாத்துப் பேர்வழி!" கோபத்தை முகம் காட்டிற்று. கைகளில் நெட்டை முறித்தாள்.

சிரிப்பலைகள்.

"திடீர்னு போனவாரம் வந்து நித்திகுட்டி பத்து நிமிஷத்துல ரெடியாகணும்னார்..."

மேலும் சிரிப்பலைகள்.

சரஸ்வதி நொந்து நூலாகி உட்கார்ந்திருந்தாள். 'இதெல்லாம் ஜோக்கா?'

"எனக்கு அதிர்ச்சியாயிடுச்சு. அப்படியே ஷாக்காயிட்டேன். 'என்னங்க திடீர்னு'ன்னு கேட்டேன். 'எதுவும் பேசாத, சீக்கிரம் ரெடியாயிடு'ன்னாரு. 'இந்த குளிர் சீசன்ல எப்படிங்க?'ன்னேன். அதான் பக்கத்துல நீ இருக்கியே, எந்த குளிரும் என்னை ஒண்ணும் டச் பண்ணாது'ன்னார். 'பிள்ளைங்க லீவ்ல பாட்டி வீட்டுக்குப் போயிருக்கிற இந்த நேரம் தான் ஏத்ததுன்னு மடமடன்னு ரெடியானேன். அழகா டிரெஸ் பண்ணிட்டு அந்த ஆளோட புறப்பட்டேன். அந்தப் படுபாவி எங்கே அழைச்சிட்டு போனான் தெரியுமா?"

"ஊட்டிக்கு வேதா?" கூட்டத்திலிருந்து குரல்.

"ஊட்டிக்குதான். பக்கத்து தியேட்டர்ல ஓடிட்டிருந்தது முரளி நடிச்ச ஊட்டி படம்." சொல்லிவிட்டு அப்பாவியாய் இறங்கி வந்தாள் நித்யா. கூட்டம் அதிர்ந்து சிரித்து விட்டு அடுத்த சிரிப்பிற்குக் காத்திருந்தது.

சரஸ்வதி தலையில் அடித்துக் கொண்டாள்.

"சரஸ்வதி" என்று விழாத் தலைவர் அழைத்தார்.

கூட்டம் அமைதியானது.

"சரஸ்வதி, பி.எஸ்ஸி செகண்ட் இயர்" என்றார் மீண்டும்.

பி.எஸ்ஸி செக்கண்ட் இயரில் இருப்பது ஒரே சரஸ்வதி, அவளுக்கு சிரிப்பே ஆகாதே என்பதாலும், அவளின் பெயரைக் கடி ஜோக் போட்டிக்கு அழைத்த முரண்பாட்டிற்காகவும் கூட்டம் சிரித்தது.



"ஒரு வாரம் கூட ஓடாத படத்துக்கு நூறாவது நாள் விழா கொண்டாடுறாங்களே எப்படி?"

"டி.வில இதுவரை நூறு தடவை ஒளிபரப்பாயிடுச்சாம்!"

– அம்பை தேவா

சரஸ்வதிக்கே அதிர்ச்சியாக இருந்தது. "என் பேரை யார் தந்திருப்பார்கள்?"

"சரஸ்வதி!" மீண்டும் அழைப்பு.

அவளுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. ஏற்கெனவே எல்லோரையும் கடித்துவிட வேண்டும் என்கிற வெறியில் இருக்கிறாள்.

சடக்கென்று மின்னலாய் அவளுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. வேகவேகமாய் மேடைக்கு வந்தாள்.

சரஸ்வதி மேடையில் வந்து நின்றதற்கே கூட்டம் சிரித்தது.

"என்னை அவமானப் படுத்தணும் என்றே என் பெயரைத் தந்திருக்கிறீர்கள், நன்றி. நான் பின் வாங்க மாட்டேன். நிஜமாகவே நான் கடி ஜோக் சொல்லப் போறேன்" என்றவள் நேரே மைக்கிடம் போனாள். பர்ஸில் கொறிப்பதற்கென வைத்திருந்த வேப்பர் சாக்லெட்டை எடுத்து கர்ர்ர்க்' என ஒரு கடி கடித்துவிட்டு மைக்கில் "ஜோக்" என்றாள். மறுபடி ஒரு கடி. "ஜோக்" இன்னொரு கடி. "ஜோக்." கூட்டம் 'ஓ' என்று அலற...

"போதும் போதும் விட்ரும்மா தாயே!. பரிசு உனக்குதான்" என்று பரிசைத் தூக்கித் தந்து விட்டார் தலைவர்.

சரஸ்வதியிடம் அதன்பின் யாரும் கடி ஜோக் சொல்வதில்லை. கேட்பதுமில்லை. ●

மாதப் பத்திரிகை போல மாதம் ஒரு சினிமா தரத் தொடங்கி விட்டாலும், சமரசமற்ற தரத்தினால் தம்மைத் தனித்து அடையாளப்படுத்துவதில் சிக்கலேது மில்லை இயக்குநர் செல்வாவுக்கு. மறு படியும் ஒருசிறுகதைக்குத் திரை வடிவம்.



கல்யாணம் நிச்சயிக்கப்பட்ட பெண், தன் நண்பனுக்கே மனைவி யாகப் போகிறவள் என்கிற விஷயம் தெரியாமல், கண்டதும் காதல் கொண்டு, கடிதம் கொடுக் கிறார் பிரசாந்த். தவறை உணர்ந்து, மன்னிப்புக் கேட்டுக் கொண்டு திரும்பி விட்டபின் வேறுவித பிரச்னை உருவாகிறது.




திருமணத்துக் குப் பின் சந்தே கத்தால் அந்தப் பெண்ணை வாட்டியெடுத்து விடுகிறான் அந்த நண்பன். தற் கொலை வரை போய் விடுகிற கௌசல்யாவை மீட் டெடுத்து வந்து புதிய கதவுகளைத் திறந்து விடும் பொறுப்பு பிரசாந்துக்கு. கொடுத்த காதல் கடிதத்துக்கொரு பிராயச்சித்தம்.

வெள்ளித் திரையைப் பிழிந்து உலர்த்த லாம் போலத் தன் கண்ணீரால் ஈரமாக்கும் கௌசல்யாவுக்கு முதல் முறையாக மிக அழுத்தமான பாத்திரம். திருமண வாழ்வின் ஒவ்வொரு அசைவிலும் சந்தேகத் தீயுடனே வலம் வரும் கணவனைச் சமாளிக்க முடியா மல் அழுகிறாரோ, அழுகிறாரோ, அப்படி அழுகிறார்.

ஒரு காட்சியில், சாப்பிடும் போது, 'நீ முதலில் சாப்பிடு' என்று கௌசல்யாவை ஆனந்த் சொல்ல, 'அடடா, மனுஷன் மாறி விட்டானோ' என்று ஒருகணம் இவர் நெகிழ, 'ஒருவேளை எனக்கு சாப்பாட்டில் விஷம் வைத்துவிட்டு அவனோடு ஓடி விடு வாயோ என்றுதான்' என ஆனந்த் விளக்கம் தரவும் பீறிடும் துக்கத்தை வெறித்தனமாக வாயில் சோற்றை அடைத்துக் கொண்டு கதறும் போது தியேட்டரில் தாய்மார்களின் முந்தானை நனைகிறது.

மேலோட்ட மான அப்பாவித் தனமும் மனம் முழுக்க வக்கிர மும் விரோதமும் கொண்டு, அதிகபட்சம் மறைமுகமாகவே அதனை வெளிப்படுத்த வேண்டிய பாத்திரம் ஆனந்துக்கு. வழக்க மாக சினிமாவில் நூற்றுக்கணக்கான சந்தே கக் கணவர்கள் வந்து விட்டதால், பாத்திரப் படைப்பால் மட்டுமே வித்தியாசம் காட்டி யாக வேண்டிய நிலையில், இயக்குநரின் மிகச் சிறந்த கருவியாகச் செயல்பட்டிருக் கிறார் ஆனந்த். இந்தத் திறமைசாலி, கோடம் பாக்கத்தில் வாய்ப்புகளற்றுப் போனது ஏன் என்பதுதான் புரியவில்லை.

இறுக்கமும் சோகமும் கொண்ட கதைக் குச் சற்றே கலகலப்பூட்ட விவேக் - தாமு- வையாபுரிக் கூட்டணி. நன்றாகச் சிரிக்க முடிவதும் எதற்குச் சிரித்தோம் என்று பிறகு யோசிக்க வேண்டியிருப்பதும் ரசிகர்களின் ராசி.

வழக்கம் போல் தேவா. வழக்கம் போல் இ(ம்)சை.

கதை பழசானாலும் இன்னும் உயிருள் ளதுதான் என்று நிரூபித்திருக்கிறது இயக்கு நர் செல்வாவின் சீரான திரைக்கதை.

கௌசல்யா விடும் கண்ணீர், படத்தை நூறு நாள் ஓடவைக்கும் என்று தோன்று கிறது.

— ஔரங்கசீப்

# எங்கு வாங்குவீர்?




83.90 / **77**




82/- / **75.25**




12/- / **10.45**




44/- / **40**




110/- / **98.45**




50/- / **47.25**




73.60 / **67.95**




32.60 / **29.95**




91/- / **86.65**

**மேலே உள்ள பொருள்கள் மட்டுமில்லாமல் எல்லா வீட்டு உபயோக பொருட்களுமே சென்னையிலேயே குறைந்த விலையில் சுபிக்ஷாவில் மட்டும்தான் கிடைக்கிறது. சுபிக்ஷா இன்று எல்லா வீட்டு உபயோக பொருட்களின் விற்பனையிலும் சென்னையில் No.1.**




## Subhiksha

**Pay Less ... Always**

**மருந்துகளுக்கு 10% தள்ளுபடி**

- அடையார் 68/5, டீச்சர்ஸ் காலனி
- அண்ணாநகர் W-125, 3வது அவென்யூ
- அண்ணாநகர் (மே) 1944, 18வது மெயின்
- அசோக் நகர் 32, முதல் அவென்யூ
- அரும்பாக்கம் D-103, MMDA காலனி
- ஆதம்பாக்கம் 1/C, கருனீகர் தெரு
- ஆதம்பாக்கம் 15, பழண்டியம்மன் கோயில் தெரு
- ஆள்வார்பேட் 101, டி.டி.கே. சாலை
- எழும்பூர் 22, எழும்பூர் நெடுஞ்சாலை
- கிழக்கு தாம்பரம் 2, IIவது மெயின் ரோடு, சிட்லபாக்கம்
- குரோம்பேட்டை 81, ராதாநகர் மெயின் ரோடு
- கீழ்பாக்கம் 20A/3, டெய்லர்ஸ் சாலை
- கோடம்பாக்கம் 332, ஆற்காடு சாலை
- சேலையூர் 11, கேம்ப் ரோடு
- சாலிக்கிராமம் 7/1, அருணாச்சலம் சாலை
- தி.நகர் 12, தணிகாச்சலம் சாலை
- திருவான்மியூர் 2வது கிழக்குத் தெரு, காமராஜ் நகர்
- விருகம்பாக்கம் 50/1, காளியம்மன் கோயில் தெரு
- வேளச்சேரி 137, வேளச்சேரி தாம்பரம் ரோடு
- நங்கநல்லூர் 140, காலேஜ் ரோடு
- நுங்கம்பாக்கம் 114, வில்லேஜ் ரோடு
- பாடி 4, எம்.டி.எச். ரோடு
- பெரம்பூர் 13 & 14, குருமூர்த்தி கார்டன் தெரு
- பெரவள்ளூர் 33, S.R.P கோயில் தெரு, ஜவகர் நகர்

### புதிய சுபிக்ஷாக்கள்

**அடையார்**
13, 2வது குறுக்கு தெரு, கஸ்தூரிபா நகர்
(பஸ் நிலையம் எதிரில்)

**திருவல்லிக்கேணி**
73, டி.பி.கோயில் தெரு (பார்த்தசாரதி கோயில் அருகில்)

**பெசன்ட் நகர்**
31/A, முதலாவது மெயின் ரோடு

**அயனாவரம்**
225, கொன்னூர் ஹை ரோடு (10B அருகில்)

**முகப்பேர்**
1/47, முகப்பேர் கிழக்கு
(JJ நகர் போலீஸ் ஸ்டேஷன் அருகில்)

- பெசன்ட் நகர் 2, எல்லையம்மன் கோயில் தெரு
- மடிப்பாக்கம் 1/A4, மடிப்பாக்கம் மெயின் ரோடு
- மந்தைவெளி 113, ஆர்.கே.மடம் சாலை
- மயிலாப்பூர் 4/1, பீமசேனா கார்டன் தெரு
- போரூர் 221, மவுண்ட் பூந்தமல்லி ரோடு
- மேற்கு மாம்பலம் 15/1, தம்பையா ரோடு
- மேற்கு மாம்பலம் 15, பிருந்தாவன் தெரு

**சென்னையில் 36 சுபிக்ஷாக்கள்**

**☎ 4910392**

*All trademarks acknowledged as properties of their owners.

# போஃபர்ஸ் வழக்கு

**சி.பி.ஐ. இயக்குனர் ஆர்.கே. ராகவன், உத்தியோக சுமையைச் சற்றே இறக்கி வைத்துவிட்டு, ஒரு வார லீவில் சென்னை வந்திருந்தார். போபர்ஸ் கேஸ் உட்பட பல்வேறு விஷயங்கள் குறித்தும் விவரமாக பேட்டியளித்தார். தொகுப்பு:**

**"போபர்ஸ் பிரச்னை வெளிச்சத்துக்கு வந்து ஏறத்தாழ பத்து வருடமாகிறது. இன்னும் வழக்கு முடிந்து, குற்றவாளி யார் என்பது நிரூபணமாகவில்லை; தண்டனை தரப்படவில்லை. ஏன் இந்த அபரிமிதமான காலதாமதம்?"**

"சி.பி.ஐ. கவனிக்கிற பெரும்பாலான கேஸ்களில் அயல் நாடுகளுக்குச் சென்று விசாரணை நடத்த வேண்டியுள்ளது; அயல்

## சி.பி.ஐ. இயக்குனர் ராகவன் சிறப்புப் பேட்டி

நாடுகளிலிருந்து ஆவணங்கள் பெற வேண்டியுள்ளது. போபர்ஸ் விசாரணையும் அவற்றில் ஒன்று. வெளி நாடுகளில் விசாரணை என்பது, நம் நாட்டுக்குள் விசாரணை நடத்துவது போல அத்தனை சுலபமானது இல்லை. அயல் நாட்டிலிருந்து ஒரு டாகுமென்ட் தேவை என்றால், நாங்கள் நீதி மன்றத்தை அணுக, அரசாங்கத்தின் அனுமதி கோருகிறோம். அரசு அனுமதி கிடைத்தவுடன், நம் ஊர் நீதிமன்றம் சம்பந்தப்பட்ட நாட்டின் நீதிமன்றத்துக்கு உத்தரவிடுகிறது. அந்த கோர்ட் உத்தரவு, அந்த நாட்டிலுள்ள இந்திய தூதருக்கு அனுப்பப்படுகிறது. அவர், அந்த ஊர் கோர்ட்டில் அதை சமர்ப்பிக்கிறார். அந்த ஊர் கோர்ட், அந்நாட்டு அரசுக்கு அல்லது போலிசுக்கு உத்தரவிடுகிறது. சம்பந்தப்பட்டவர்கள், தகவல்களைத் தந்தவுடன், நாம் கேட்டதையும், அவர்கள் தருவதையும் அந்த கோர்ட் பரிசிலித்து, தேவையான தகவல்களை மட்டும் தருகிறது. அதை வைத்துக் கொண்டு, நாம் மேற்கொண்டு செயல்பட வேண்டியுள்ளது. இவை அனைத்தும், நாம் நினைக்கிற மாதிரி மடமடவென்று நடக்கிற காரியங்களா? போபர்ஸ் விவகாரத்தில்கூட, 1990ல் சுவிஸ் கோர்ட்டுக்கு விண்ணப்பம் தரப்பட்டது. சமீபத்தில் கிடைத்தவை, இரண்டாம் தவணை ஆவணங்கள். எனவே, போபர்ஸ் விஷயத்தில் காலதாமதம் என்பது தவிர்க்க முடியாதது."

**"முழுக்க முழுக்க உள்நாட்டிலேயே விசாரணை நடத்த வேண்டிய கேஸ்களில் கூட காலதாமதம் ஏற்படுகிறதே! அதற்கு என்ன காரணம்?"**

"சி.பி.ஐயிடம் மூன்றுவிதமான கேஸ்கள் வருகின்றன. லஞ்ச, ஊழல் கேஸ்கள், பொருளாதாரக் குற்றங்கள் சம்மந்தப்பட்ட கேஸ்கள், கொலை போன்ற குற்றங்கள். பொதுவாகவே, சி.பி.ஐ. வழக்குகளை, வாய்மொழிச் சாட்சிகளை வைத்து நடத்துவதில்லை. ஆவணச் சாட்சிகள்தான் சி.பி.ஐயின் பலம். இதற்கு வலுசேர்க்கவே வாய்மொழி வாக்குமூலங்கள். ஆகவே, ஆவணச் சாட்சிகளைத் திரட்டுவது, அவற்றை நுணுக்கமாக ஆராய்வது அதன் அடிப்படையில் வழக்கை நடத்துவது என்பது நிறைய அவகாசம் எடுத்துக் கொள்கிற வேலை. அதுவுமில்லாமல், முன்னைவிட, இப்போது சி.பி.ஐ. வசம் ஒப்படைக்கப்படும் வழக்குகளின் எண்ணிக்கை அதிகரித்து விட்டதால் வேலைப் பளு கூடிவிட்டது. போதிய அளவு ஆள்பலம் இல்லை. இவையெல்லாம் சேர்ந்து முழு வீச்சுடன் செயல்பட முடியாமல் போகிறது. ஆனால், இன்னமும் சிறப்பாகச் செயல்பட வேண்டும். வழக்குகளை சீக்கிரமாய், சிறப்பாக முடித்து, குற்றவாளிகளுக்கு தண்டனை வழங்கப்படவேண்டும் என்பதே எங்கள் நோக்கம்."

**"இப்போதெல்லாம், எந்த ஒரு விஷயமானாலும், உடனே சி.பி.ஐ. விசாரணை வேண்டும் என்ற கோரிக்கை எழுகிறதே! இதற்கு என்ன காரணம்?"**

"உள்ளூர் போலீஸ் மீது அவநம்பிக்கை ஏற்பட்டுவிட்டதால், அவர்கள் விசாரணை செய்தால் உண்மை வெளிவராது; நியாயம் கிடைக்காது என்கிற எண்ணம் பரவலாகத் தோன்றிவிட்டதுதான் இதற்கு அடிப்படைக் காரணம். ஆனால் இதை நான் முழுமையாக ஏற்றுக் கொள்ள மாட்டேன். போலீஸ் துறை, அந்த அளவுக்கு மோசமாகிவிடவில்லை.

# எப்போது முடியும்?

ஒருசில கேஸ்களில் தவறுகள் நிகழ்ந்துவிட்டது என்பதற்காக, அவர்களை ஒட்டு மொத்தமாகக் குற்றம் சாட்டுவது தவறு. உள்ளூர் போலீசை நம்பாமல், எல்லாவற்றுக்கும் சி.பி.ஐ.தான் வேண்டும் என்றால், அது நடைமுறைச் சாத்தியமில்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். உள்ளூர் போலீசின் மீது மக்களுக்கு நம்பிக்கை ஏற்பட வேண்டுமென்றால், தேசிய போலீஸ் கமிஷனின் சிபாரிசுகளைச் செயல்படுத்த வேண்டும். அதைச் செயல்படுத்த மத்திய அரசின் அனுமதி தேவையில்லை. மாநில அரசுகளே, செயல்படுத்த முன்வரலாம். ஆனால், எந்த மாநில அரசாங்கமும், அதைச் செயல்படுத்த முன்வரவில்லையே.''

**"அந்தக் கமிஷன் சிபாரிசுகளில் மிக முக்கியமான ஒன்றைச் சொல்லுங்களேன்?"**

''மாநில செக்யூரிடி கமிஷன் என்று ஒன்றை அமைக்க வேண்டும். அதில் முதலமைச்சர், போலீஸ் துறை அமைச்சர், உள்துறைச் செயலாளர், காவல் துறைத் தலைவர், எதிர்க்கட்சித் தலைவர், இன்னும் சில நிபுணர்கள் என்று இடம் பெற்றிருப்பார்கள். போலீஸ் பற்றிய புகார்களை, பொதுமக்கள் இந்தக் கமிஷனுக்கு அனுப்பி வைக்கலாம். போலீஸ் துறையினரே, தங்கள் மேலதிகாரிகள், சட்டத்துக்குப் புறம்பாக செயல்பட வற்புறுத்தினாலும், இந்தக் கமிஷனின் கவனத்துக்குக் கொண்டு வந்தால், சம்பந்தப்பட்டவர் மீது நடவடிக்கை எடுக்கப்படும். காவல் துறை ஊழியர்கள் நியமன விஷயத்திலும், சில விதிமுறைகளை சிபாரிசு செய்தது இக் கமிஷன். டி.ஜி.பியின் பணிக்காலம் மூன்று வருடங்கள். அதற்குள், பெரும் தவறு ஏதும் நிகழ்ந்தாலொழிய அவரை மாற்றக் கூடாது. இதுபோன்ற கமிஷனின் சிபாரிசுகளைச் செயல்படுத்தினால், மாநில போலீசின் இமேஜ் உயரும். மக்களுக்கு நம்பிக்கை ஏற்படும். எதற்கெடுத்தாலும் சி.பி.ஐ. என்ற பேச்சுக்கு இடமிருக்காது.''

**"சி.பி.ஐ. இன்றைய சூழ்நிலையில் எந்த அளவுக்குச் சுதந்திரமாக செயல்பட முடிகிறது?"**

''அரசாங்கத்தின், ஆளும் கட்சியின் கட்டுப்பாடு ஏதுமின்றி முழுச் சுதந்திரத்துடன் சி.பி.ஐ. செயல்பட முடிகிறது. வினீத் நாராயணன் வழக்கில் சுப்ரீம் கோர்ட் அளித்த தீர்ப்பின்படி, ஒரு குழுதான் சி.பி.ஐ. தலைவர் பதவிக்குரிய தகுதியான மூன்று நபர்களை அனுபவம், நேர்மை ஆகியவற்றின் அடிப்படையில் தேர்ந்தெடுத்து அரசுக்கு அனுப்ப, அரசு அதிலிருந்து ஒருவரைத் தேர்ந்தெடுக்கிறது. அவரது பணிக்காலம் இரண்டு வருடங்கள். அதற்குள், அவரை அத்தனை சுலபமாக அந்தப் பொறுப்பிலிருந்து மாற்றிவிட முடியாது. இவையெல்லாம் சி.பி.ஐ. சுதந்திரமாகச் செயல்படுவதன் அறிகுறிகள். யார்மீது சி.பி.ஐ. வழக்குப் போட வேண்டும் என்றாலும், அரசின் அனுமதி பெற வேண்டியதில்லை. பொதுச் சேவகர், உயர் அதிகாரிகள் மீது லஞ்ச, ஊழல் வழக்கு போட வேண்டுமென்றால், அரசின் அனுமதி பெற வேண்டும் என்று சட்டம் சொல்லுகிறது. அந்த சட்டம்,

• ராகவன்

## மாதம் ஒரு நகரம்

### அல்வாக்காரர்கள் ஊருக்கு ஆசையோடு வருகிறோம்!



நெல்லைவாசிகளே!

அல்வாவும் தாமிரபரணியும் அதைவிட்டால் அருள்மிகு காந்திமதியுடனுரை நெல்லையப் பரும்தான் திருநெல்வேலி என்பது உங்களூர்ப் பக்கமே வராதவர்களின் கணிப்பு. இதோ உங்கள் சீமைப் பெருமையைப் பறைசாற்ற ஒரு வாய்ப்பு: திருநெல்வேலியின் சின்னதும் பெரிதுமான பெருமைகளை, வினோத மனிதர்களை, சாதனையாளர்களை, அழவைக்கும் பிரச்னைகளை, ஆச்சரியப்பட வைக்கும் புதுமைகளை... பிற வாசகர்களுக்குப் படம்பிடித்துக் காட்டவே ஒரு கல்கி இதழ் தயாரிக்கப்போகிறோம்.

உடனே உங்களூர் விஷயங்களை எழுதுங்கள். நேரில் வருவோம். மாநகராட்சிப் பணிகளுக்குச் சிறப்பிடம் தந்து அதிகாரிகளைச் சந்திப்போம். பிரச்னைகளை ஆராய்வோம்; சாதனைகளை வெளிச்சம்போட்டுக் காட்டுவோம்.

நாங்கள் வரவிருக்கும் தேதிகள் **17,18,19.**

உங்கள் கடிதங்கள் வந்து சேரக் கடைசித் தேதி: **14.1.2000**

– ஆசிரியர்

இருக்கிறவரை அரசு அனுமதி பெற்றுத்தான் வழக்குப் போட முடியும். பொதுவாகச் சொல்ல வேண்டுமானால், அரசாங்கத்தின் பிரஷர் இல்லாமல், சுதந்திரமாகவே சி.பி.ஐ. செயல்படுகிறது."

**"சி.பி.ஐ. தொடரும் வழக்குகளில், குற்றம் சாட்டப்பட்டவர், போதிய சாட்சியில்லாது, விடுவிக்கப்படுவது அதிகமாகி வருகிறதே! இதற்கு அரசியல் தலையீடு காரணமா?"**

"இல்லை... அரசியல் காரணங்கள் ஏதுமில்லை. சி.பி.ஐயின் புலனாய்வில் தரம் குறைந்து போனதுதான் பிரதான காரணம். அதற்குக் காரணம் அதிகமான வேலை பளு. தவிர, ஒருவரைக் கைது செய்த தொண்ணூறு நாட்களுக்குள் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட வேண்டும். இல்லையெனில் கைதானவர், ஜாமீனில் வெளிவந்து விடுவார். அதைத் தவிர்ப்பதற்காக, அவசரம் அவசரமாகப் புலனாய்வை முடித்து எண்பத்து எட்டாவது அல்லது எண்பத்து ஒன்பதாவது நாளில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்ய நேரிடுகிறது. இதனால், ஆங்காங்கே சில குறைபாடுகள் ஏற்பட்டு, தீர்ப்பு வேறு மாதிரியாகிவிடுகிறது."

**"குற்றம் சாட்டப்பட்டவர் ஜாமீனில் வெளிவந்து, வலுவான வழக்கை சந்திப்பதைவிட, பலவீனமான குற்றச் சாட்டின் பேரில், குற்றம் நிரூபிக்கப்படாமல், ஒரு குற்றவாளி விடுதலை செய்யப்படுவது என்பது சமுதாயத்துக்கு ஆபத்தில்லையா?"**

"ஆமாம்! அதனால்தான் அப்படி அவசரப்பட்டு குற்றப்பத்திரிகை தாக்கல் செய்ய வேண்டாம் என்று நான் அறிவுறுத்தியிருக்கிறேன். காலக்கெடுவை மனத்தில் கொண்டு, முழுமையான புலனாய்வு முடிக்கப்படாமல், குற்றப் பத்திரிகை தாக்கல் செய்ய நேரிட்டால், அதன் பின்பும், புலனாய்வைத் தொடர்ந்து நடத்தி, வலுவான சாட்சிகளுடன் கூடுதல் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யுங்கள் என்பதே என் அதிகாரிகளுக்கு நான் கூறியுள்ள அறிவுரை."

**"மறுபடி போபர்ஸுக்கு வருவோம். குவாட்ராச்சி உட்பட சிலருக்கு கைது வாரண்ட் பிறப்பிக்கப்பட்டுவிட்டது. ஆனால் என்ன பயன்? அவர்களை கைது செய்வது, தண்டனை வழங்குவது எல்லாம் சாத்தியமா? வெறும் மாயைதானே!"**

"இதைத்தான் பலரும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஏன் சாத்தியமில்லை என்று நான் கேட்கிறேன். போபர்ஸ் பிரச்னை எழுந்த போது ஸ்விஸ் நாட்டிலிருந்து ஆவணங்கள் பெறுவது சாத்தியமா? கண்துடைப்பு என்றார்கள். ஆனால், இன்று ஆவணங்கள் வந்து விட்டனவே! அதுபோலத்தான் இதுவும். எதுவும் சாத்தியம்! முடியவே முடியாது என்று ஏன் ஆரம்பத்திலேயே முடிவுகட்ட வேண்டும்?"

**"போபர்ஸ் கேஸ் எப்போதுதான் முடியும்? குற்றவாளிகளுக்கு தண்டனை எப்போது கிடைக்கும்?"**

"அது ஒரு மில்லியன் டாலர் கேள்வி. என்னால் விடை தர இயலாது."

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **யோகா**

# வட்ட மேஜை

✉ உலக அழகி யுக்தாமுகியின் வெற்றிக்கான பலதரப்பட்ட காரணங்களை அலசியிருந்தது உங்களின் அட்டைப்படக் கட்டுரை. அடுத்த மிலெனியப் பெண் எப்படியிருக்க வேண்டும் என்ற கேள்விக்கான உலக அழகியின் பதில் அருமை.
ஈரோடு, க. நா. இராஜேஸ்வரன்.

✉ டி.டி.ஈ.யிடம் 'ராஜாஜி' அவர்களுக்கு (கடன் வாங்கிச் செலுத்திய அபராதம்) நேர்ந்த அனுபவம் மாதிரி இன்று அரசியல் தலைவர் யாருக்காவது நிகழ்ந்திருந்தால் ரயில் அடுத்த ஸ்டேஷன் வருவதற்குள் 'டி.டி.ஈ'யின் பதவி பறந்து போய் இருக்கும்.
சர்க்கார்பதி, பி. ஜெயப்பிரகாஷ்.

✉ டிசம்பர் குளிரில் சகல கலைஞர்களையும் சகட்டுமேனிக்கு வறுத்தெடுக்கும் தும்புருவின் வருகை முன்னறிவிப்பு இல்லாவிட்டாலும் கைதட்டி வரவேற்க வைத்தது!
புனே, ஜெ. ரஜினி ராம்கி.

✉ வளர்ந்து வரும் கலைஞரும், நல்ல குரல்வளமும், ஞானமும் கொண்டவருமான மணிமாறனின் இசைக் கச்சேரி பற்றிய உமது கருத்து கர்நாடக சங்கீதம் தெரிந்து பல கச்சேரிகளைக் கேட்டு வரும் எனக்கும், என்னைப் போன்ற பலருக்கும் மிகுந்த வேதனையைத் தந்தது. ஏனென்றால் நானும் அந்தக் கச்சேரிக்கு வந்திருந்த சிலரில் ஒருவன். சுருதி சேரவில்லை, பிடிகள் வரவில்லை, ஸ்வரப்ரஸ்தாரம் சரியில்லை. பக்கவாத்தியக்காரர்கள்தான் காப்பாற்றினார்கள் என்பதெல்லாம் தும்புருவின் சங்கீத ஞானத்தை விட அகந்தையைத்தான் காட்டுகிறது. அன்று கேட்ட மணிமாறனின் இசை நன்றாகவே இருந்தது.
சென்னை - 20, ஜி. சுவாமிநாதன்.

✉ "காந்தியே வந்தாலும் இன்றைய இந்தியாவை மாற்றிவிட முடியாது" என்ற மகாத்மாவின் பேரனின் பேட்டிக் கட்டுரை அட்சர லட்சம் பெறும்.
சென்னை - 109, எஸ். ஆர். ஹரிஹரன்.

✉ மனிதநேயத்துடன் நற்பணி ஆற்றிவரும் திருச்சி மாவட்ட ஆட்சியர் வை. மூர்த்தி அவர்களுக்கும் நல்லதை நாலு பேர் அறியச் செய்த கல்கிக்கும் எனது வாழ்த்தும் நன்றியும்.
சென்னை - 78, ஏ.பி. மதிவாணன்.

✉ முன்னேறுவதற்கு சலுகைகள் தடையாய் இருக்கும் என்பதை சொல்லாமல் சொல்லியது கிரா. மூர்த்தியின் 'சும்மா கொடுத்தது' சிறுகதை.
சென்னை - 26, சி. மகேஷ்.

✉ சிதா ரவி எழுதிய விமர்சகர் வீராசாமி படு சூப்பர். அன்றைய பொழுது முழுதும் சிரித்துக் கொண்டே இருக்கும்படி செய்து விட்டது.
சென்னை - 40, ராஜிபாய்.

✉ இந்தியன் வங்கியை மூடிவிட பரிந்துரை செய்த அறிக்கை பற்றி கோபாலன் எழுதிய கட்டுரை அற்புதம். உண்மை நிலையை தங்களைப் போன்ற பத்திரிகையாளர் முன்வந்து வெளிப்படுத்தி மக்களிடையே உண்மை என்ன என்பதை தெள்ளத் தெளிவாக்கியதற்கு இந்தியன் வங்கி ஊழியர்கள் சார்பிலும் வாடிக்கையாளர்கள் சார்பிலும் எங்கள் நன்றி.
சென்னை - 28, டி.ஆர். ரங்கநாதன்.




✉ கல்கி, 19.12.99 இதழ் 'குறையொன்றுமில்லை' பகுதியில் தெய்வ பக்தியின் சிறப்பை எடுத்துரைக்கக் கண்ணப்ப நாயனாரின் வரலாற்றைத் தேர்வு செய்தது மிகவும் சரியானது. ஆனால் சைவ உணர்வுள்ள அன்பர்களுக்கு வேதனை ஏற்படுத்தும் வகையில், அந்தத் திருவரலாற்று நிகழ்ச்சி எழுதப்பட்டுள்ளது என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.
கோவை, என். சிவானந்தம்.

## சப்த விடங்க ஸ்தலங்கள் – 1

**வ**லன் என்ற அரக்கன் வானவருக்குச் சொல்ல முடியாத கஷ்டங்களைக் கொடுத்து வந்தான். பூவுலகில் சோழ நாட்டை அரசாண்ட முசுகுந்த சக்கரவர்த்தியை அழைத்து வரச் செய்தான் தேவேந்திரன். அவருடைய உதவியோடு அரக்கனைப் போரில் வென்றார்கள். மனம் நன்றியால் நிறைந்து தளும்ப, தேவேந்திரன் முசுகுந்தருக்குப் பரிசளிக்க விரும்பினான். ''உமக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்டபோது முசுகுந்தர் "உம்மிடமுள்ள தியாகேசரையும் விடங்கரையும் (லிங்க வடிவம்) தரவேண்டும்" என்று கேட்டு விட்டார். மகாவிஷ்ணு இந்திரனுக்கு அளித்த மூர்த்தங்கள் அவை!

வாக்குக் கொடுத்த இந்திரனுக்குத் தான் பூஜிக்கும் தெய்வங்களைக் கொடுக்க இஷ்டமில்லை. தேவ சிற்பியிடம் ''இதைப் போலவே இன்னும் ஆறு லிங்கங்கள் செய்து வா'' என்றான். தேவ சிற்பி செய்த லிங்கங்கள் உளியினால் செதுக்கப்படாதவை. டங்கம் என்றால் உளி. விடங்கம் என்றால் 'உளி நீங்கலாக' என்று பொருள். ஆதலால் விடங்கர் ஏழு சிவலிங்கங்களையும் ஒன்றாக வைத்து முசுகுந்தரிடம் "எது வேண்டுமோ எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

ஈசன் அருளால் மகாவிஷ்ணு பூஜித்த விடங்கரையே எடுத்துக் கொண்டார் முசுகுந்த சக்கரவர்த்தி. அது எப்படி அவருக்குத் தெரிந்தது? பூர்வஜன்ம சுகிர்தம்தான்! முற்பிறவியில் சோழ மன்னர் திருக்கயிலாயத்தில் ஒரு குரங்காக இருந்தார். குரங்காகப் பிறப்பதற்குக் கூட பாக்கியம் செய்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. குரங்குச் சேட்டை என்று சொல்கிறோமல்லவா? மரங்களில் ஏறி இலைகளையும் பிஞ்சுகளையும் பறித்து எறிந்து கொண்டிருந்தது அந்தக் குரங்கு! ஒரு நாள் சிவபெருமானும் பார்வதியும் வில்வ மரத்தடியில் உட்கார்ந்திருந்தார்கள். இந்தக் குரங்கு மரத்தில் ஏறி வில்வ தளங்களைப் பிய்த்துப் போட்டது. அந்த தளங்கள் அம்பாள் மீதும் ஈசன் மீதும் உதிர்ந்தன. இந்த மகா புண்ணியத்தால் சோழ நாட்டில் முசுகுந்த சக்கரவர்த்தியாகப் பிறந்தார். விடங்கரை அடையாளம் கண்டு கொள்



ளும் சுகிர்தமும் வாய்த்தது.

இந்திரன் ஆச்சரியப்பட்டு ஏழு விடங்கர்களையும் கொடுத்து விட்டான்.

முசுகுந்த சக்கரவர்த்தி பூவுலகத்துக்கு எடுத்துக் கொண்டு வந்து விடங்கரை வைத்து ஏழு புண்ணியத் தலங்களில் கோவில் கட்டினார். - இவையே சப்த விடங்க ஸ்தலங்கள். அவற்றுள் முதல் ஸ்தலம் திருவாரூர்.

திரு ஆரூர் என்றதும் ஏன் மெய்சிலிர்க்கிறது! எப்படிப்பட்ட உத்தமர்களும் ஞானிகளும், கலா நிபுணர்களும், அடியார்களும் பிறந்த ஊர்! அதனால்தான் திக்கெலாம் நிறைந்த புகழ்த் திருவாரூர் என்று பெயர் பெற்றது. சிவபெருமான் நமி நந்தியடிகள் என்ற பக்தருக்குத் திருவாரூரில் பிறந்த அத்தனை பேரையும் சிவகணங்களாகத் தெரியச் செய்தார். அதனால்தான் 'ஆரூரில் பிறக்க முக்தி' என்று சொல்கிறோம்!

'திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்' என்று சுந்தரர் பாடினாரே! பிற்காலத்தில் ஆரூரில் பிறக்கப் போகின்ற சங்கீத திரிமூர்த்திகளையும் சேர்த்து வணங்கினாரோ! ஞானசம்பந்தரும், சுந்தரரும் பாடிப் பரவிய இசைக்கு ஒரு புதிய பரிமாணமும், உத்வேகமும் கொடுத்த பெரியோர்கள் பிறந்த மண்ணல்லவா திருவாரூர்.

## ஆனந்தி

எத்தனை நூல்கள் ஆரூர்ப் பெருமான் மீது எழுதப்பட்டிருக்கின்றன! வடமொழியும் தமிழ் மொழியும் போட்டி போட்டுக் கொண்டு திருவாரூரைச் சிறப்பித்திருக்கின்றன. தமிழ்ப் புலவர்கள் ஆரூரனைப் பாடுவது பிறவி எடுத்த பயன் என்று கருதினார்கள்.

இசை மட்டுமா வளர்த்தது ஆரூர்! நடனக்கலை, சிற்ப சித்திரக் கலைகள், வாத்தியங்கள் என்று சகல கலைகளையும் ஆரூரில் ஆண்ட சோழ மன்னர்கள் ஆர்வத்துடன் வளர்த்தார்கள். கமலாலயம் என்று தேவியின் பெயரால் அழைக்கப்படுவது ஆரூர்க் கோயிலின் தனிச் சிறப்பு.

சோழ மன்னர்கள் ஆரூரில் முடி சூட்டிக் கொண்டு பெருமை அடைந்தார்கள். மனுநீதிச் சோழனின் வம்சத்தில் வந்தவர்கள் என்று நீதிக்குப் பணிந்து அரசாண்டார்கள்.

கோவில் ஐந்து வேலி, குளம் ஐந்து வேலி செங்கழுநீரோடை ஐந்து வேலி என்று பரந்த திருவாரூர்த் திருக்கோயிலுக்கே இப்போது செல்கிறோம்.




கமலாலயம் என்ற பெயர் பெற்ற திருக்குளம் நீர்

ததும்பி சிற்றலைகள் எழுந்து விழுந்து படித்துறையில் பரவிக் கொண்டிருக்கிறது. கோபுர வாசலிலிருந்து பார்க்கும்போது மத்தியில் உள்ள நடுவணநாதர் கோவில் நமது ஆர்வத்தைக் தூண்டுகிறது. காலையிலும் மாலையிலும் அர்ச்சகர் படகில் போய் பூஜை செய்கிறார். பிரதோஷம் ரொம்ப விசேஷமாம்.

குளக்கரையில் உள்ள மாற்றுரைத்த பிள்ளையாரை வணங்கலாம். விருத்தாசலத்தில் சுந்தரர் மணி முத்தாற்றில் இட்ட பொன்னை கமலாலயத்தில் வந்து தேடி எடுத்தார். பத்தரை மாற்றுப் பசும் பொன்னா என்று பிள்ளையாரை உரைத்துப் பார்க்கச் சொன்னார். விநாயகர் உரைத்துப் பார்த்து நல்ல பொன் தான் என்று சொன்ன பிறகு சுந்தரர் அதைப் பெற்றுக் கொண்டார். அடியார்கள் தான் பகவானை எவ்வளவு சோதித்து விடுகிறார்கள்!

கோயில் என்பது அரண்மனைக்குத் தமிழ்ப் பெயர். கோவி யின் இல். தியாகேசர் ராஜா. தில்லையில் நடராஜா. ஸ்ரீரங்கத்தில் ரங்கராஜா. அதனால் இவர்களுடைய இருப்பிடங்கள் கோயில் என்று வழங்கப்படுகின்றன. மற்றவை கோவில்.



• தியாகராஜசுவாமி

நீலவானைத் தொடும் கோபுரம். நீல நிறத்தண்ணீர் நிரம்பிய தடாகம். ஒருவித மயக்கத்துடன் உள்ளே செல்கிறோம்.

பிராகாரத்தை வலம் வரும்போது பற்பல சிறிய கோவில்கள். முதலில் கண்களில் தெரிகின்ற ஆனந்தீச்வரர் கோவிலுக்குள் சென்று தரிசனம் செய்யலாம். ஆகா! என்ன இருட்டு. "தேடிக் கண்டு கொண்டேன் தேடித் தேடொணா தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்" என்று பாடிக் கொண்டே இன்னொரு வாசல் வழியாக வெளியே வருகிறோம்! மங்கணன் என்ற முனிவர் சிவலிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டு ஆனந்தம் தாங்க முடியாமல் கூத்தாடினாராம். அதனால் ஆனந்தீச்வரர் என்று பெயர் பெற்றவர் இந்த ஈசர்!

வன்மீக நாதரின் கோயில் வாசலில் உள்ள கோபுரத்துக்கு அழகியான் கோபுரம் என்று பெயர். உள்ளே குடி கொண்டுள்ள விநாயகருக்கு அழகிய சோழ விநாயகர் என்று பெயர்! 'அருள்மொழிவர்மரின் தந்தை சுந்தரசோழர் திருப்பணியாக இருக்கலாமோ' என்று எண்ணமிட்டுக் கொண்டே புற்றிடங் கொண்டாரைத் தரிசிக்கிறோம். இந்த இடம் பூமியின் இதய கமலம் ஆகையால் பூங்கோயில் என்று பெயர் பெற்றது.

புற்றிடம் கொண்டாரைத் தரிசிக்கும் போதே அவர் புற்றில் தோன்றிய கதையைக் கேட்கலாம்.

மகாவிஷ்ணு ஒரு சமயம் தேவர்களையெல்லாம் ஒடுக்க எண்ணம் கொண்டார். சிவனருளால் தோன்றிய வில்லை வளைத்துக் கொண்டு துரத்திக் கொண்டு வந்தார். தேவர்கள் பராசக்தியிடம் அடைக்கலம் புகுந்தார்கள். அம்பிகை விஷ்ணுவின் வலிமையைத் தன்னிடம் இழுத்துக் கொண்டாள். விஷ்ணு வில்லின் மேல் சாய்ந்து உறங்கினாராம். தேவர்கள் செல்லாக மாறி வில் நட்டிருந்த இடத்தில் புற்று உண்டாக்கி அடியை அரித்தனர். வில்லின் நாண் அறுபட்டு வில் நிமிரவே அதன் மீது இருந்த விஷ்ணுவின் தலை தூக்கியெறியப்பட்டது! தேவர்கள் மறுபடியும் அஞ்சி நடுங்கினார்கள். அப்போது அந்தப் புற்றில் பரமன் தோன்றி அபயம் கொடுத்து விஷ்ணுவையும் உயிர்ப்பித்தார். காத்தல் கடவுளையே காத்த தெய்வம் இவர்.

கோடி முனிவர்களுக்குக் கோடி சிவலிங்கங்களாக ஈசன் சாட்சியளித்த அருள் தலம். வன்மீக நாதரை வழிபட்ட பிறகுதான் புத்திர காமேஷ்டி யாகம் செய்து தசரதர் நான்கு மகன்களைப் பெற்றார்.

பூங்கோயிலுக்குப் பக்கத்தில் உள்ளது தியாகராஜ சுவாமியின் திருக்கோயில். ராஜேந்திர சோழனால் கற்றளியாகக் கட்டப்பட்டிருக்கிறது. பரவையார் என்ற பெயருடைய காதலியின் வேண்டுகோளினால் இந்தக் கோயிலை எடுத்தான் முதலாம் ராஜேந்திரன்.

நாம் ஆவலுடன் தரிசிக்க வந்திருக்கும் தியாகரும் விடங்கரும் உள்ள சந்நிதி.

ரத்தினசிம்மாசனத்தில் அருகில் கொண்டி அம்மையுடன் வீற்றிருக்கிறார் தியாகர். எதிரே வீர கண்டயமும், ஞான

# எவ்விதத்தில் பார்த்தாலும் சரி 'எல்லா விதத்திலும் யூடிஐ எம்ஐபி

யூடிஐ
மன்த்லி இன்கம் ப்ளான்
2000

## அனைத்து சரியான காரணங்களுக்காக

| கவர்ச்சிகர ஆதாயம் 10.25%-10.75%* | வரி இல்லா வருமானம் | முதிர்வின்போது மூலதன பாதுகாப்பு | 54EA முதலீட்டாளர்களுக்கு இரட்டை லாபம்** |
|---|---|---|---|

யூடிஐ-ன் மன்த்லி இன்கம் ப்ளான் 2000. உங்கள் தேவைகளுக்கு ஏற்றவாறு அமைக்கப்பட்ட ஓர் 5 ஆண்டு 2 மாதங்களுக்கான திட்டம். உங்கள் தேர்வு சரியானதுதான் என உறுதி செய்யும் சரியான காரணங்களை பாருங்கள்.

விருப்பத் தேர்வுகள் :

* மாதாந்திர வருவாய் : ஆண்டிற்கு 10.25% என்ற விகிதத்தில் மார்ச் 31, 2001 வரை மாதந்தோறும் கிடைக்கும் என உறுதிப்படுத்தப்படுகிறது.

* வருடாந்திர வருவாய் : ஆண்டிற்கு 10.75% என்ற விகிதத்தில் ஆண்டிற்கு ஒரு முறை 31 மார்ச் 2001 வரை கிடைக்கும் என உறுதிப்படுத்தப்படுகிறது.

* க்யூமுலேட்டிவ் : 10.75% என்ற விகிதத்தில் வருவாய் க்யூமுலேடிவ் முறையில் 31 மார்ச் 2001 வரை கணக்கிடப்படும். தொடரும் ஆண்டுகளுக்கு வருவாய் பங்கீடு விகிதம் ஒவ்வொரு ஆண்டும் முன்கூட்டியே மார்ச் மாதத்தில் அறிவிக்கப்படும். முதிர்வின்போது மூன்று தேர்வுகளுக்கும் மூலதன மதிப்புயர்வுக்கு வாய்ப்பு உண்டு.

**எல்லா தரப்பட்ட முதலீட்டாளர்களுக்கும் பரிபூரண வரிவிலக்கு**

**** 54EA முதலீட்டாளர்களுக்கு இரட்டை லாபம்-:** நீண்டகால அளவிலான சொத்துக்களின் விற்பனைத் தொகையை முதலீடு செய்து வருமான வரிச்சட்டம் 1961, பிரிவு 54EA-ன் கீழ் மூலதன ஆதாயவரியை மிச்சப்படுத்துங்கள். இம்முதலீட்டிலிருந்து கிடைக்கும் வருமானத்திற்கு தற்சமயம் முற்றிலும் வரிவிலக்கு உள்ளது.

**லிக்விடிட்டி :** 3 ஆண்டுகளுக்குப் பின்பு என்ஏவி அடிப்படையிலான விலையில் மறுகொள் முதல் வசதி. மேலும் 3 தேர்வுகளின் கீழும் செய்யப்படும் முதலீடுகள் NSEன் ஹோல்சேல் டெட் செக்மென்டில் அட்டவணை இடப்படும்.

**முதிர்வின் போது மூலதன பாதுகாப்பு :** ட்ரஸ்டின் டெவலப்மென்ட் ரிசர்வ் ஃபண்டு உத்திரவாதம் அளிக்கிறது. ஆயினும் மறுகொள்முதல்களுக்கு இந்த உத்திரவாதம் கிடையாது.

**குறைந்தபட்ச முதலீடுகள் :** மாதாந்திர வருமானம் மற்றும் வருடாந்திர வருமானம் தேர்வுகளுக்கு ரூ.10,000/- மற்றும் க்யூமுலேடிவ் தேர்வுக்கு ரூ.5,000/- அதிகபட்ச வரம்பு ஏதுமில்லை.

**வாராந்திர என்ஏவி :** வாராந்திர அடிப்படையில் என்ஏவி அறிவிக்கப்படும்.

**வருவாய் நேரடி வரவு :** அகமதாபாத், பரோடா, பெங்களூர், புவனேஷ்வர், கல்கத்தா, சென்னை, ஐதராபாத், ஜெய்ப்பூர், மும்பை, புது டில்லி மற்றும் பூனேயில் உள்ள முதலீட்டாளர்களுக்கு வருவாய் ECS மூலமாக அவர்களுடைய வங்கி கணக்கில் நேரடியாக வரவு வைக்கப்படும்.

**மேற்கொண்டு விபரங்களுக்கு உங்கள் அருகமைந்த யூடிஐ அலுவலகம் அல்லது முக்கிய பிரதிநிதி/முகவரை அணுகவும்.**




**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

13, சர் வித்தல்தாஸ் தக்கர்ஸி மார்க், நியூ மெரீன் லைன்ஸ், மும்பை-400

டெலிபோன்: 2031818. வெப்ஸைட்: www.unittrustofindia.com

**இத்திட்டம் 20 டிசம்பர் 1999 முதல் 31 ஜனவரி 2000 வரை நடப்பில் போர்ட்ஃபோலியோ இருக்கும்**

பாதிப்பு நிலைமைகள் : பங்குகள் மேல்கேட் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் முதலீடுகள் மார்க்கெட் ஏற்றத்தாழ்விற்கு உட்பட்டவை. திட்டத்தின் போர்ட்ஃபோலியோவை பாதிக்கும் காரணங்களால் ஏறவோ, இறங்கவோ செய்யலாம். கடந்தகால செயல்பாடுகள் எதிர்காலப் பலன்களுக்கு உத்திரவாதமான அடையாளம் ஆகாது. காலவரைக்கு முன்பான மறு கொள்முதலுக்கு மூலதன பாதுகாப்பு உத்தரவாதம் அளிக்க முடியாது மற்றும் இத்தகைய நிலைகளில் மறுகொள் முதல் விலை என்ஏவியைப் பொருத்தது. மன்த்லி இன்கம் ப்ளான் 2000 என்பது திட்டத்தின் பெயரே தவிர திட்டத்தின் தரம், எதிர்கால வருமானம் அல்லது ஆதாயங்களை ஒரு வகையிலும் குறிப்பிடுவதாகாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படிக்கவும்.

தெற்கு மண்டல அலுவலகம் : யூடிஐ-ஹவுஸ், 29, ராஜாஜி சாலை, சென்னை-600 001. தொ: 521 0347.
**சென்னை** : யூடிஐ ஹவுஸ், 29, ராஜாஜி சாலை, சென்னை-600 001. தொ: 521 0356 ● **திருச்சி** : 104, சாலை ரோடு, உறையூர், திருச்சி-620 003. தொ: 760 060 ● **மதுரை** : தமிழ்நாடு சர்வோதயா சங்கம் பில்டிங், 108, திருப்பரங்குன்றம் சாலை, மதுரை-625 001. தொ: 738 186 ● **கோயம்புத்தூர்** : சேரன் டவர்ஸ், 3-வது மாடி, 6/25, ஆர்ட்ஸ் காலேஜ் சாலை, கோயம்புத்தூர்-641 018. தொ: 214 973

CWPL / UTI / 110 / TAM

கண்டயமும் இரு புறமும் சாத்தி வைக்கப் பட்டிருக்கின்றன. தியாகர் மண்டபத்துக்கு வெளியில் இருபுறமும் வார்ப்பினால் செய்த துவாரபாலகர்கள் கம்பீரமாக நிற்கிறார்கள். தேர் போன்ற விளக்கு, விருக்ஷ விளக்கு, சரவிளக்கு என்று பல விளக்குகள் அமைதியாக ஆடாமல் எரியும் தீபக் கொழுந்துகளுடன் ஜொலிக்கின்றன.

தியாகருக்கு வலது பக்கத்தில் பெட்டியில் மரகதலிங்கம் இருக்கிறது. காலை மாலை இவருக்கு அபிஷேகம் நடைபெறுகிறது. தியாகருக்கு ஆண்டில் ஆறு அபிஷேகங்கள் தான்.

*"பார்க்கப் பார்க்கத் திகட்டுமோ உத்தன் பாத தரிசனம்"*

என்று மனத்தில் பாடினால் பாதங்களைத் தரிசிக்க முடியாது! முகம் நீங்கலாக மேனி முழுவதையும் மறைத்து அலங்காரம் செய்து கொண்டிருக்கிறார் ஆரூர்ப் பெருமான். பங்குனி உத்திரத்தில் வலது பாதத்தையும், மார்கழித் திருவாதிரையில் இடது பாதத்தையும் தரிசிக்கலாம். ஆகா! இன்றைய அலங்காரத்தைப் பார்க்கக் கண்கள் என்ன தவம் செய்தனவோ. இருபக்கமும் வைத்து பட்டையாகத் தொடுத்த செங்கழுநீர் மாலை அணிந்து பெருமிதத்துடன் அழகர் அழகர் என்று சொல்வதற்குப் பொருத்தமாக மயக்கும் புன்னகையுடன் வீற்றிருக்கிறார் தியாகேசப் பெருமான்.

*"கண்டு கண்டிவள் காதலித்தன்பதாய்க்*
*கொண்டியாயின வாறு கோதையே."*

என்று மலை மகள் எப்படி தலைவனிடம் கரை காணாக் காதல் கொண்டிருக்கிறாள் என்பதை அழகாகக் கூறுகிறது தேவாரம்.

சாயரக்ஷை பூஜையில் முப்பத்து முக்கோடி தேவர்களும் வந்து கலந்து கொள்வதாக ஐதிகம். தியாகருக்கு நேர் எதிரே சுந்தரர் பரவையார் சங்கிலியாரோடு தரிசனம் செய்து கொண்டே இருக்கிறார். தீபாராதனைதான் என்ன அழகு! சாமரம் வீசுவதும் அலங்கார தீப வரிசைகளும், அந்த தீபங்களைப் பூஜித்துப் பிறகு தியாகேசருக்குக் காட்டும் அழகும், ஈசனின் ஐந்து முகங்களின் பெயரையும் சொல்லி ஐந்து தீபங்களால் ஆரத்தி செய்வதும் நம் மனத்தை அப்படியே லயிக்கச் செய்கின்றன. தியாகராஜரின் கொடியே தியாகக் கொடி என்ற பெயர் பெற்றது. அவருடைய நடனம் அஜபா நடனம். ஊர் ஆரூர். நாடு சோழ நாடு. ஆறு காவிரியாறு, பண் பதினெட்டு வகைப் பண் வாகனம் ஐராவதம்.

தியாகேசருடைய கதையைக் கேட்கலாமா? மகா விஷ்ணு தனக்குப் பிள்ளை இல்லை என்ற குறை தீர்க்கும்படி ஈசனை வேண்டினார். உமாதேவியை வணங்கவில்லை. தேவி கோபத்துடன் "உனக்குப் பிள்ளை பிறந்தாலும் அழிந்து போவான்" என்று சொன்னார். மகாவிஷ்ணு சிவபெருமான் உமாதேவி மத்தியில் பாலனான முருகன் மூவரையும் தன் இதய கமலத்திலேயே இருத்திக் கொண்டு இடைவிடாமல் ஜபம் செய்து வந்தார். நெஞ்சத்தையே கோவிலாக்கி மூவரையும் சேர்த்துத் தொழுது வர, மூச்சுவிடும் போது உண்டான மூன்றுவித அசைவுகளால் அந்த ஸோமாஸ்கந்தர் அசைந்து ஆடினார். உள்ளே மூச்சை இழுக்கும்போது மேலே ஏறியும், விடும்போது இறங்கியும் முன்னும் பின்னுமாக ஊஞ்சல் ஆடுவது போல் ஆடி, மார்பின் மீது எழும்பியும், இறங்கியும் குதித்தும் ஆடிக் கொண்டிருந்தார் தியாகராஜப் பெருமான். (இந்தத் தியாக- விடங்கரைத்தான் பின்னர் இந்திரனிடம் தந்தார் மகாவிஷ்ணு)

இப்படி திருமால் மார்பில் எழுந்தருளி ஆடியதன் உருவகமே அஜபா நடனம் என்று திருவாரூரில் நடைபெறும் சம்பிரதாய நடனம். அஜபா நடனத்தைக் காணக் கண்ணாயிரம் வேண்டும். அற்புதமாக அலங்காரம் செய்த தியாகரைத் தூக்கிக் கொண்டு உலா புறப்படும்போது பார்க்க வேண்டும். அஜபா நடனத்தைத் தியாகேசர் ஆடிப் புகழ் பெறுவதற்கு அவரைத் தூக்கிக் கொண்டு ஆடுவோர் பரம்பரையாக ஒத்துழைத்துப் பணி புரிகிறார்கள். இருந்தாடும் அழகரான இவரை ஆடவைப்பவர்கள் என்ன புண்ணியம் செய்தார்களோ? சுத்த மத்தளமும் பஞ்சானன வாத்யமும் முழங்க பௌர்ணமியில் ஈசன் அஜபா நடனம் செய்வதை வாழ்நாளில் ஒரு தடவையாவது தரிசிக்க வேண்டும். இந்த நடனத்தை குண்டலினி சக்தியின் எழுச்சியின் புறத்தோற்றம் என்று கருத இடமுண்டு.

தியாகர் ஸந்நிதியிலிருந்து கிளம்ப மனமில்லாமல் மாயாவித்தனமுள்ள மந்தஹாஸ வதனத்தில் லயித்து விட்டோம். இன்னும் மற்ற கோவில்களைத் தரிசிக்க வேண்டுமே என்று பிரியா விடைபெற்று கமலாம்பிகையை தரிசிக்கச் செல்கிறோம். அந்த அனுபவத்தைப் பிரிதொரு கட்டுரையில் பார்ப்போம்.

(தொடரும்)

# மூப்பனார் பூஜ்யம் என்கிறாரே மணிசங்கர் அய்யர்?


• பூஜ்ய மகிமை!


• அழகும் ஆசையும்...

● எஸ். ஏகதாஸ்,
சென்னை – 12. ❑

? சுவாமி விவேகானந்தரின் சொற்பொழிவை மேலை நாட்டவர்கள் கைதட்டி வரவேற்றார்கள்; இந்து கோவில்கள் கட்டவும் அனுமதி கொடுத்தார்கள். இங்கே சர்ச்சுகள் இடிக்கப்பட்டு மசூதிகள் தகர்க்கப்படுவது குறித்து என்ன நினைப்பார்கள்?

! மிகக் கேவலமான காட்டுமிராண்டித்தனம் என்றுதான் நினைப்பார்கள். அதை உத்தேசித்தாவது ஹிந்து தீவிரவாதம் கைவிடப்பட வேண்டும்.

● கே. சங்கரநாராயணன்,
செங்கல்பட்டு.

? குடிநீர்ப் பிரச்னையை எடுத்துக்காட்ட சென்னை மாநகராட்சிக் கூட்டத்திற்குக் காலி குடங்களுடன் கவுன்சிலர்கள் வருவதைத் தவிர வேறு வழி இல்லையா?

! நாடாளுமன்றத்திலும் சட்டசபையிலும் நிலவும் எக்ஸிபிஷன் அரசியல் இப்போது மாநகராட்சிக்கும் பரவியிருக்கிறது என்பதையே இந்த நிகழ்ச்சி உறுதிசெய்கிறது. இந்த அமைப்புகள் எல்லாமே மக்கள் பிரச்னைகளை ஆக்கபூர்வமாக அணுகித் தீர்க்க ஏற்பட்டவை. அவற்றை யுத்த களங்களாக்குவதில் மக்களுக்கு ஒரு ஆதாயமும் இல்லை.

● வி. மலையம்மான்,
திருநெல்வேலி.

? இப்போதைய திமுக ஆட்சியில் நியாயங்கள் காயப்பட்டும் காயங்கள் நியாயப்பட்டும் வருகின்றன என நெடுஞ்செழியன் கூறியிருப்பது பற்றி...?

! காயங்களையாவது சகித்துக் கொள்ளலாம். முந்தைய ஆட்சியிலோ நியாயங்கள் மாயங்களாகி விட்டனவே!

● சூர்யநிலா, சேலம் – 9.

? அப்துல் ரகுமானுக்கு சாகித்ய அகாடமி விருது கிடைத்திருப்பது பற்றி...?

! 'வானம்பாடி'யின் ஆலாபனைக்கு முதல் கைதட்டல்.

● கே. ஆர். வேலுச்சாமி,
அன்னூர்.

? உ.பி.யில் பி.ஜே.பி.யை அழிக்கவே தான் தனிக்கட்சி தொடங்கியிருப்பதாகக் கூறுகிறாரே கல்யாண் சிங்?

! கல்யாண் சிங்குக்குத்தான் என்னவொரு கல்யாண குணம்! பிறரை அழிக்கும் நோக்கத்துடன் தொடங்கப்படும் எந்த முயற்சியும் உருப்பட்டதாக வரலாறு இல்லை என்பதை அவருக்கு ஞாபகப் படுத்துகிறோம்.

● இ. பாஸ்கரன்,
சென்னை – 39.

? இரண்டாயிரமாவது வருடத்தில் திருமணம் செய்யக் கூடாது என்ற புரளி பரவியிருக்கிறதே – அதைப் பற்றி...?

! தமது வீட்டுக் கல்யாணத்துக்குச் சுலபமாகவும் மலிவாகவும் சத்திரம் கிடைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு யாராவது ஒருவர் இப்படியொரு கதை கட்டிவிருப்பார் என்று நினைக்கிறேன்.

● சூரியன், லால்குடி.

? 'ஊழல் செய்தவர்களைக் காப்பாற்றுவதை விட சயனைட் விழுங்கி இறந்து விடுவேன்' என்று கருணாநிதி கூறலாமா?

! வேதனையின் வெளிப்பாடுதான். ஆனால், இப்படிச் சொல்வது சரியல்ல. ஊழல் செய்தவர்கள் மேல் கடும் நடவடிக்கை எடுப்பேன் என்று சொல்லியிருக்க வேண்டும்.

● என். பாலகிருஷ்ணன்,
மதுரை – 1.

? 'உலக அரங்கில் அழகிப் பட்டம் கிடைக்கும்போதெல்லாம் கௌரவர் சபையில் பாஞ்சாலி துகிலுரிக்கப்படுகிறாள்' என்ற வாசந்தியின் கூற்று பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! அழகிப் போட்டிக்குச் செல்லும் பெண்கள் ஆசைப்பட்டு அல்லவா போகிறார்கள்! ஜெயிப்பதில் பெருமை கொள்கிறார்கள். நமக்கு அதில் சம்மதம் இல்லாது போகலாம்; அதற்காகப் பாஞ்சாலியுடன் ஒப்பிடுவது சரியல்ல.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம். ●

? தமிழகத்தின் முப்பதாவது மாவட்டமாக அரியலூர் மாவட்டம் அறிவிக்கப்பட்டுள்ளதே? மாவட்டங்களின் எண்ணிக்கையை அதிகரித்துக் கொண்டே செல்வதால் மக்களுக்கு என்ன நன்மை

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : எஸ். ஏகதாஸ், 19, புதுக்குளக்கரை சாலை, ஓட்டேரி, சென்னை - 600 012.

கிடைக்கிறது?

! மக்கள் நன்மைக்கு இதில் நேரடி சம்பந்தமில்லை. நிர்வாகச் செலவுகள்தான் அதிகரிக்கும். அதுவும் மக்கள் தலையில்தான் வடியும்!

● ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை – 59.

? கோயில் சொத்துகளைக் குத்தகைக்கும் வாடகைக்கும் எடுத்துக் கொண்டு அவற்றைச் சரிவர கட்டாமல் இருப்பவர்களுடைய பெயர்களைக் கோயில்களில் அறிவிப்புப் பலகைகளில் எழுதி வைத்தது போல் வங்கிக் கடன் திருப்பிச் செலுத்தாதோர் பெயர்ப் பட்டியல் எழுதி வைத்தால்...?

! கோயில் குத்தகைத் தொகை எந்த அளவுக்கு வசூல் ஆயிற்றோ அந்த அளவுக்கு வங்கிக் கடனும் வசூலாகும்.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? 'ஜதா. சபை முன்பு பல நாட்டுக் கொடிகள் பறக்கின்றன. அதில் ஈழத்துக் கொடி பறக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை' என்கிறாரே வை.கோ?

! இப்படியெல்லாம் பேசுவதால் தாம் கொடிகட்டிப் பறக்கலாம் என்கிற எண்ணத்தில் வைகோ வாய் விடுவது மிகவும் ஆபத்தானது. அதிலும் மத்திய அமைச்சரவையில் தமது கட்சி அங்கம் வகிக்க ஒப்புதல் தந்து விட்டு இப்படிப் பேசுவது பேராபத்து.

● க. பூங்கொடி, சித்தோடு.

? 'மூப்பனார் எங்கள் கட்சிக்கு வராததால் அவர் ஒரு பொம்மை, பூஜ்யம்' என்றெல்லாம் மணிசங்கர் அய்யர் கூறியுள்ளாரே?

! பூஜ்யம் எந்த எண்ணுக்குப் பக்கத்தில் சேர்கிறதோ அது மதிப்பில் கூடும் என்பது தெரியாதா? அதனால்தான் மூப்பனாரின் பொறுப்பு ரொம்ப அதிகம்.

● கே. வி. ராமன், சென்னை – 73.

? வரப்போகும் தமிழக சட்டமன்றத் தேர்தலில் த.மா.காவும் காங்கிரசும் ஒன்றாக இணைந்து ஆட்சியைப் பிடித்தால் காமராஜர் ஆட்சி வருமா அல்லது சோனியா ஆட்சி வருமா?

! இரண்டும் வராது; ஜெயலலிதா ஆட்சிதான் வரும்!

● கு. அருணாசலம், தென்காசி.

? சினிமாவுக்குப் பாட்டு எழுதுவோர் எல்லாம் 'கவிஞர்கள்' என்ற இனத்தில் சேர்த்துக் கொள்ளலாமா?

! சினிமாவைப் பொறுத்த வரை சில சமயம் கவிஞர்களாகவும் பெரும்பாலான சமயங்களில் கேட்டதைத் தருபவர்களாகவும் இருக்கிறார்கள். சினிமாவுக்கு வெளியே அதே நபர்களின் அவதாரம் வேறு. இனத்தைப் பரிசோதிக்காமல் சரக்கை மட்டும் விமர்சித்து விட்டுப் போவதுதான் நமக்கு நல்லது.


• கல்யாண குணம்!

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

? கடந்த '98ஆம் ஆண்டில் இந்தியா முழுவதும் வரதட்சணைக் கொடுமைக்கு 6917 பேர் பலியாகியிருப்பது பற்றி?

! காவல் துறை கவனத்துக்கு வந்த வழக்குகள் 6917. பலியாகாமல் நித்ய சித்ரவதை அனுபவிக்கும் பெண்கள் எண்ணிக்கை அதனினும் அதிகம். சமுதாய விழிப்புணர்ச்சிக்கு அடித்தளம் போடாமல் குருட்டுத்தனமாகச் சட்டம் மட்டும் இயற்றி விட்டால் மக்கள் தடுமாறிக் கொண்டுதான் இருப்பார்கள் என்பதற்கு மற்றுமொரு எடுத்துக்காட்டு.


• வழிகாட்டி


• சொல்லாதது!


• பொறுப்பற்ற பேச்சு!

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

? ஏமாற்றங்களை ஏற்றுக் கொள்ள எப்படிப் பழக வேண்டும்?

! எதிர்பார்ப்புகளைக் குறைத்துக் கொள்வதன் மூலம்.

★ ரூ. 25 பரிசு பெறுபவர்: எம். சம்பத், 9,மாரியம்மன் கோவில் தெரு, வேலாயுதம்பாளையம், கரூர் மாவட்டம் - 639 117.




'மீச வச்ச குழந்தையப்பா' என்று எழுதிய வைரமுத்து கூட ஒருபோதும் இப்படி ஜட்டியுடன் ரஜினியைத் தவழ வைத்து யோசித்திருக்க மாட்டார்!

விபூதி கம்பெனி விளம்பரதாரர்கள் கூட விட்டு வைக்கவில்லை.







சிங்க நடைதானே போட்டார்? சிங்க முகம் கூடவா? கடவுளே! கடவுளே! கடவுளே (ரஜினி குரலிலேயே நூறு முறை கூறவும்.)

# ரஜினி ராஜ்!



## திருச்சி நகரச் சுவர்களில் ரஜினி–25ஐ ஒட்டி நீக்கமற நிறைந்திருந்த போஸ்டர்களை இங்கே பார்க்கிறீர்கள்!

த.மா.கா.காரர்களாவது? சண்டைக்கு வருவதாவது?



இந்தப் படத்துக்குக் குறிப்பேதும் வேண்டுமா? ஆண்டவா! ஆண்டவா! ஆண்டவா!

படங்கள்: வெங்கடேஷ்



''தாத்தா பேரை பேரனுக்கு வைக்கிறது தப்புன்னு புரிஞ்சு போச்சுடா.''

''எப்படிச் சொல்றே?''

''எம்ப்ளாய்ன்மெண்ட் எக்சேஞ்சு லேர்ந்து எனக்குத்தான் ஆர்டர் வந்திருக்குன்னு ஆசை ஆசையா பிரிச்சுப் பார்த்தால் எங்க தாத்தாவுக்கு அனுப்பிருக்காங்கடா!''

– சீர்காழி வி. ரேவதி



''மன்னா! இளவரசியை அண்டை நாட்டு இளவரசர் கடத்திக் கொண்டு போய்விட்டார்!''

''பதறாதீர்கள் அமைச்சரே! இளவரசியை சமாளிக்க முடியாமல் அவனே இன்னும் நான்கு நாட்களில் திரும்பக் கொண்டு வந்து விட்டுவிடுவான்!''

– ஞா. ஞானமுத்து



''அந்தக் கம்பத்தில் கட்சிக் கொடி ஏன் முக்கால் கம்பத்தில் பறக்குது?''

''அந்தக் கட்சியின் மூத்த தலைவர் ஒருவர் ஐ.ஸி.யூவில் பத்து நாட்களாய் இருக்கார், அதான்!''

– மாயூரம் எஸ். விமலா

# சங்கீதமாய்ப் பேசிய வைகோ!



சுமி குப்பமார்க்கெட்

கொட்டு கொட்டுனு மழை வெளுத்து வாங்கின ஒரு ட்யூஸ்டே, ராஜா அண்ணாமலை மன்றத்துல தமிழிசை விழா இனாகுரேஷன். ஓர் இசைப் பேரறிஞரோ, கலாநிதியோ, கலாபாரதியோ, கலாசாகரமோ, கலாரிவரோ தொடங்கி வெச்சிப் பேசாம, என்னடா இவங்க வைகோவை இனாகுரேட் பண்ண கூப்பிட்டிருக்காங்களேன்னு இலேசான சந்தேகத்தோடுதான் உள்ள போனேன். (நிறைய காலி நாற்காலிகள்.) பூர்வாசிரமத்துல வைகோ ஒரு வீணை வித்வான், புல்புல்தாரா வாசிப்பார்னு ஏதாவது பிட் நியூஸ் தரப் போறாங்கன்னு எதிர்பார்த்தேன். பட், அவர் பேச ஆரம்பிச்சதும், இவரையும் விநாயக முதலியார் மாதிரி, 'அரசியலுக்கு வராதே'ன்னு அண்ணா சொல்லியிருந்தார்னா அருமையான இசை ஆராய்ச்சியாளர் நமக்குக் கிடைச்சிருப்பாரேன்னு தோணிச்சி.

வைகோ ஒரு தீவிரமான படிப்பாளிங்கறது தெரிஞ்சது. சங்க இலக்கியத்திலேருந்து லாஸ்ட் இஷ்யு கல்கி வரைக்கும் ஃபிங்கர் டிப்ஸ்ல வெச்சிருக்கார். இவர் கம்பராமாயணப் பாடலுக்கு நயம் சொல்றதை இஸ்மாயீல் சாப் கேட்டா அடுத்த கம்பன் விழால கூப்பிட்டு உட்கார வெச்சிடுவார். அவ்ளோ அழகா பேசறார்.

தமிழிசை மன்றத்துல பேசறோம்ங்கற கான்ஷியஸ்னஸை விட்டுடாம, குறிஞ்சிப் பண், மருதப்பண், நாத்தி மூனு பண், காலைப் பண், மாலைப் பண், அரசனோட தாராள குணத்துல மயங்கி பகலா இரவான்னு தெரியாம பண் மாத்திப் பாடின புலவரோட கதை அது இதுன்னு சுமார் ஒன் அவர் வெளுத்து வாங்கிட்டார்.

துளிகூட அரசியல் வாசனையே அடிக்காம இத்தனை நீட்டா, ஒரு சப்ஜெக்ட் அடிப்படைல பேசறதுக்குத் தமிழ்நாட்டுல கலைஞருக்கு அடுத்தபடி இவரை விட்டா வேற அரசியல்வாதி இருப்பாங்களான்னு தெரியலை. ஒண்டர்ஃபுல் ஸ்பீச்! வைகோ பேச்சே சங்கீதம் மாதிரி இருந்ததால அன்னிக்குக் கச்சேரிக்கு இருக்காம திரும்பி வந்துட்டேன்.



* * *

சிட்லபாக்கம் ஷண்முக சுந்தரம், பெங்களூர் ஷண்முக சுந்தரமா ஆனதுக்கப்புறம் அனுப்பின ஒரு ஹ்யூமரஸ் பிட் நியூஸைத் தரேன். எந்த ஒரு சீரியஸ் நியூஸையும் ஹ்யூமர் கலந்து கொடுத்தா, அது கவனத்தை ஈர்க்கும்ங்கறதுக்கு இது பெஸ்ட் எக்ஸாம்பிள்.

ஃப்ளைட் கிளம்பினதும் ஹோஸ்டஸ் சில பாதுகாப்பு அறிவிப்புகளைச் செய்வாங்க. யூஷுவலா அதை யாரும் கவனிக்க மாட்டாங்க. ஆனா, ஏதாவது ஏசகுபிசகா ஆயிட்டா, கவனிக்காததோட தீவிரம் உறைக்கும். இந்த ப்ராப்ளத்தைத் தவிர்க்க ஒரு 'வான தேவதை' இப்படியொரு அறிவிப்பு செஞ்சாங்களாம்.

● திடீரென்று விமானத்தின் காற்றழுத்தம் குறைந்து விடலாம். அப்போது ஓவென்று அலறுவதைக் காட்டிலும் எதிரிலுள்ள பிராண வாயுக் கவசத்தை இழுத்துப் பிடித்து மூச்சு விட மறக்க வேண்டாம்.

● இங்கு புகைபிடிக்கக் கூடாது. பிடித்துத்தான் ஆவேன் என்று அடம்பிடிப்பவர்களுக்கு, வெளியே இறக்கையில் நாற்காலி போடப்படும். முடித்துவிட்டு உள்ளே வரலாம்.

● விமானம் சமயத்தில் கடலில் இறங்க நேரிடலாம். அப்போது உங்கள் இருக்கையையே மிதவையாகப் பயன்படுத்தலாம். நாங்கள் கொடுத்த 'பளபளப்பான' இலவசப் புத்தகங்களை அப்போது மறக்காமல் எடுத்துக் கொண்டால், மீட்புப் படை வரும் வரை பொழுதுபோகும்!

* * *

**1999** கடைசில சில அருமையான நூல்கள் வந்திருக்கு. இலக்கிய வாசகர்கள் பொருட்படுத்தி விவாதிக்க வேண்டிய சில : ஜெயமோகனோட பின்தொடரும் நிழலின் குரல் (நாவல் - தமிழினி பதிப்பகம்) அசோகமித்திரனோட 'படைப்பாளிகள் உலகம்' (கட்டுரைகள் - கலைஞன்) யுகபாரதியோட 'பஞ்சாரம்' (கவிதைகள் - ராஜேஸ்வரி புத்தக நிலையம்) இமையத்தோட 'ஆறுமுகம்' (நாவல் - க்ரியா)

சும்மா நானே எழுதிட்டிருக்கறதுல அர்த்தமில்லை. இதையெல்லாம் நீங்க படிச்சிட்டு விமர்சனம் மாதிரி எழுதலாம். என் கருத்துக்கு ஒத்துப்போகணுங்கற அவசியம் கூட இல்லை. புதிய சிந்தனைப் பூ எந்தக் கொண்டைல இருந்தாலும் ரசிச்சி டிஸ்ப்ளே பண்ண நான் தயார்.

— சுமி

"விமானம் கடத்தப்படுகிறது என்பது தெரிந்தவுடன் எப்படிச் செயலாற்றுவது, கடத்தல்காரர்களை எப்படிச் சமாளிப்பது, பதற்றத்தைக் காட்டாமல், பயணிகளுக்கு தைரியம் ஊட்டுவது எப்படி, துப்பாக்கி முனையில் இருக்கும்போது எந்தவித நடுக்கமுமில்லாமல், விமானத்தைப் பல தளங்களில் ஏற்றி இறக்கும் போது கையாள வேண்டிய நடைமுறைகள் - இவை எதைப் பற்றியும் நமது விமானிகளுக்குப் பயிற்சியின் போது சொல்லிக் கொடுப்பதில்லை; சிக்கலே அதனால்தான்!" என்கிறார் கேப்டன் ஜெ. சம்பத்குமாரன். இந்தியன் ஏர்லைன்ஸ் நிறுவனத்தில் பணியாற்றியது உட்பட இருபத்தைந்து வருட விமானி அனுபவத்தை வைத்திருக்கும் சம்பத்குமாரன், தற்போதைய ஹைஜாக் சம்பவத்தில் அரசு நடந்து கொள்ளும் முறை பற்றியும் வருத்தத்துடன் சொல்கிறார்.

"பல வருடங்களுக்கு முன்னர் உகாண்டாவில் 'எண்டபி' விமான நிலையத்துக்கு இஸ்ரேல் விமானம் கடத்தப்பட்டது. இஸ்ரேலிலிருந்து கமாண்டோக்கள் விமானத்தில் எண்டபிக்கு அதிரடியாகச் சென்று விமானத்தில் நுழைந்து கடத்தல்காரர்களைக் கொன்று பயணிகளை மீட்டார்கள். அந்தக் களேபரத்தில் இறந்தவர் ஒருவர்தான். தகவல் தொடர்பு, மற்றும் பல்வேறு விஞ்ஞான முன்னேற்றங்கள் இப்போது போல இல்லாத அந்தக் காலத்திலேயே இஸ்ரேல், உலகத்தை அசத்தியது! அப்படியிருக்க, பல நவீன வழிமுறைகளை இப்போது கையாள முயற்சித்திருக்கலாம். குறைந்தபட்சம் அமிர்தசரஸ் விமான நிலையத்தில் கடத்தப்பட்ட விமானத்தின் டயர்களில் காற்றை இறக்கி விட்டிருந்தால் கூடப் போதும். விமானம் மறுபடி பறந்திருக்காது. நமது மண்ணில் விமானம் நிறுத்தப்பட்டிருந்தால் பல வழிகளில் தீர்வு காண உதவியாக இருந்திருக்கும்!



"பல தனியார் விமான அமைப்புகளில் விமானிகளுக்குக் கடத்தல் பற்றி நன்றாகவே வகுப்புகள் எடுக்கிறார்கள். கடத்தல்காரர்களின் கட்டளையின் பேரில் விமானத்தை ஒரு தளத்தில் இறக்கும்போதே, சில சங்கேதங்களால், "விமானத்தில் எத்தனை கடத்தல்காரர்கள் இருக்கிறார்கள், என்ன மாதிரியான ஆயுதங்கள் வைத்திருக்கிறார்கள்" என்பதைச் சொல்லி

# இடியாப்பச் சிக்கலுக்கு இந்தியன் ஏர்லைன்ஸே காரணம்!

— குமுறுகிறார் விமானி சம்பத்குமாரன்

## வாசகர்கள் கவனத்துக்கு...

இந்த இதழ் தலையங்கம் அச்சாகிவிட்ட பின்பு, விமானக் கடத்தல்காரர்களின் கோரிக்கைகளில் பகுதியளவு ஏற்றுக் கொண்டு, பிணைக் கைதிகளாயிருக்கும் பயணிகளை விடுவிக்கும் இறுதி முயற்சியில் மத்திய அரசு இறங்கியிருப்பதாகத் தெரிகிறது.

- ஆசிரியர்

விட முடியும். இதுபோன்ற பயிற்சிகளைத் தனியார் விமான அமைப்புகள் கொடுக்கின்றன.

"இது தவிர, உலகமெங்கும் நடந்த விமானக் கடத்தல் பற்றிய அறிக்கைகள் விமானிகள் தரைக் கட்டுப்பாட்டுத் தளத்தோடு நடத்திய உரையாடல்கள் கொண்ட கேஸட்டுகள் ஆகியவைகளையும் விமானிகளுக்குக் கொடுத்து விவரங்களைச் சொல்வார்கள். கடத்தலைச் சந்தித்த விமானியும் வகுப்புக்கு வந்து தமது அனுபவத்தைக் கூறுவார். ஆனால் நமது இந்தியன் ஏர்லைன்ஸ் நிறுவனத்தில் இதுபோன்ற பயிற்சிகள் எதுவும் கிடையாது.

"விமானம் கடத்தப்படுகிறது என்று தெரிந்ததும் பதற்றப்படாதீர்கள், கடத்தல்காரர்களிடம் வாக்குவாதம் செய்யாதீர்கள்" – இதுதான் இந்தியன் ஏர்லைன்ஸ் விமானிகளுக்குச் சொல்லப்படுபவை!

"தற்போதைய கடத்தலில் விமானி, டென்ஷன் காரணமாகவோ அல்லது கடத்தல்காரர்கள் மிரட்டிச் சொல்லச் சொன்னதாலோ, நான்கு பேரைக் கொன்று விட்டார்கள் என்று சொல்லியிருக்கிறார். 'அது உண்மையல்ல' என்று இப்போது தெரிந்திருக்கிறது. துப்பாக்கி முனையில் இருந்தாலும், பலவித சங்கேத மொழிகளைப் பயன்படுத்தி, சில விஷயங்களைப் பரிமாறிக் கொள்ள முடியும். இதற்குத் தரைக் கட்டுப்பாடு அலுவலர்களுக்கும் பயிற்சி கொடுக்க வேண்டும். கடத்தலின்போது இங்கு என்ன நடக்கிறது? நிறுவனத்தின் தலைவரும், அதிகாரிகளும் தொலைக்காட்சியில் தோன்றி அரைவேக்காட்டுத் தகவல்களைக் கொடுக்கிறார்கள்; அவ்வளவுதான்! வெறும் அதிகாரிகளை மட்டும் நம்பியிராமல் பொறியாளர்கள், விமானிகள், சம்பந்தப்பட்ட இடத்திலுள்ள போலீஸ் மற்றும் ராணுவ அதிகாரிகளையும் Crisis Management groupல் உறுப்பினர்களாக நியமித்துச் செயல்பட வேண்டும். இதுபோன்ற சம்பவங்களின் போது மட்டும் அந்தக் குழுவை ஏற்படுத்தாமல் நிரந்தரமாகச் செயல்படுவது போன்று நிறுவப்பட வேண்டும். முடிவுகள் எடுக்கும் அதிகாரமும் அந்தக் குழுவுக்குக் கொடுக்க வேண்டும்."

சந்திப்பு : ஸ்ரீநிவாசன்



"தலைவருக்கு இசைஞானமே கிடையாதுன்னா பேசாம இருக்க வேண்டியதுதானே. மேடையில ஏன் உளறிக் கொட்டணும்?"

"என்ன ஆச்சு?"

"'இந்த கலைஞர் 'மோர்-சிங்'கை அருமையாக வாசித்தார். இவர் விரைவில் 'தயிர்-சிங்' வாசிக்குமளவு முன்னேறுவார் என்பதில் எனக்கு ஐயமில்லை'ன்னு பேசினார்!"

– ஆர்.ஆர். தமன்

"இன்னிக்கு பள்ளிக் கூடத்திலே பசங்ககிட்டே ஆசிரியர்களையும் உங்கள் நண்பர்களாக பாவிக்க வேண்டும்னு சொன்னது தப்பா போச்சு!"

"ஏன்? என்னாச்சு?"

"கட் அடிச்சுட்டு சினிமாவுக்கு போகலாம் வரியா மச்சின்னு ஒருத்தன் கேட்டுட்டான்!"

– சரோஜா கிருஷ்ணமூர்த்தி





# நான் எப்போது பாட வேண்டும்?

தஞ்சை பல்கலைக்கழகத்தில் ஒரு விழா. தலைமை விருந்தினராக அழைக்கப்பட்டிருந்தவர் சங்கர் தயாள் சர்மா. விழாவுக்கு தமிழக முதலமைச்சராக இருந்த கலைஞர் கருணாநிதியும் வந்திருந்தார். அப்போது, ஒரு பேனாவை தமிழக முதலமைச்சருக்குப் பரிசளித்த சர்மா, சொன்னார்: "மற்ற முதல்வர்கள் எல்லாம் வெறும் எழுத்தர் முதலமைச்சர்கள்; நீங்கள்தான் எழுத்தாளர் முதல்வர். எழுத்தாளருக்குப் பரிசாகப் பேனா கொடுப்பது பொருத்தம் தானே!'' -அண்மையில் மறைந்த நம் முன்னாள் ஜனாதிபதி சங்கர் தயாள் சர்மாவைப் பற்றி நினைவு கூர்ந்தார் பாண்டிச்சேரி மத்திய பல்கலைக்கழக துணைவேந்தரும், தற்போதைய மத்திய திட்டக்குழு உறுப்பினருமான டாக்டர். கே. வேங்கட சுப்ரமணியம்.

போபால்தான் சர்மாவின் பிறந்த மண். ராஜ வைத்தியர் பரம்பரையில் வந்தவர். அப்பா பண்டிட் குஷிலால் சர்மா மிகப் பிரபலமான ஆயுர்வேத வைத்தியர். சங்கர் தயாள் சர்மா, சிறுபிள்ளையாக இருந்தபோது அப்பா, அவரை நீச்சலுக்கு அழைத்துச் செல்வாராம். உடல் ஆரோக்கியத்துக்கு நீச்சல் என்றால், ஞாபக சக்திக்குத் தானே பிரத்யேகமாக 'பிரமி' என்ற ஞாபகசக்தி மூலிகையிலிருந்து மருந்து தயாரித்துக் கொடுப்பாராம். சர்மா, சாஸ்திரங்கள் கற்று பண்டிதரானதும், ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் போய் மேல் படிப்பு படித்ததும் வாழ்க்கையில் பல சிகரங்களைத் தொட்டதும், சின்ன வயதில் சாப்பிட்ட பிரமி மூலிகையின் பலன்தான் என்று இன்னமும் சொந்த ஊர்க்காரர்கள் சொல்கிறார்கள்!

ஆக்ரா மற்றும் லக்னோ பல்கலைக்கழகத்தில் சர்மாவின் சக மாணவர் அப்துல் அலிம்கான். அவரும் சர்மாவும் ஹாஸ்டலில் ஒன்றாகத் தங்கிப் படித்தபோது, பிரிட்டிஷ்காரரான வார்டன், அசைவ உணவைக் கொடுத்து உண்ணச் சொன்னபோது, சுத்த சைவமான சர்மா, அழத் தொடங்கி விட்டாராம்! அலிம்கான் வார்டனிடம், சர்மாவின் குடும்பப் பாரம்பரியம், சைவ உணவுப் பழக்கம் இவை பற்றி விளக்கினபின், வார்டன் சிரித்தபடியே 'சாரி' சொன்னாராம். சர்மாவைப் பற்றிய இந்தச் சம்பவத்தை அடிக்கடி தம் சகாக்களிடம் நினைவுகூறுவார் அலிம்கான்.

பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்தில் பட்டமளிப்பு விழா. பல்கலைக் கழகத்தின் வேந்தர் என்ற முறையில் சங்கர் தயாள் சர்மாவும் வந்திருந்தார். விழா முடியும் தருவாயில், சர்மா, துணைவேந்தர் வேங்கட சுப்ரமணியத்திடம், 'நான் எப்போது பாட வேண்டும்? என்ன பாட வேண்டும்?' என்று கேட்க, இவருக்கு ஒன்றும் புரியவில்லை. சர்மாவே விளக்கிய பின், இருவருமே சிரித்து விட்டனர்.

விஷயம் இதுதான். பட்டமளிப்பு விழா நிகழ்ச்சி நிரலில், 'Chancellor Signs' என்று ஒன்று உண்டு. அதன்படி பட்டமளிப்பு விழா முடிவுற்றது என்று பல்கலைக்கழக வேந்தர் கையெழுத்திடுவது மரபு. ஆனால், நிகழ்ச்சி நிரலில் 'Chanceller Sings' என்று தவறுதலாக டைப் செய்யப்பட்டிருந்தது. அந்தத் தவறைத்தான் சர்மா, நகைச்சுவையுடன் சுட்டிக் காட்டினார்!

மிகவும் எளிமையான மனிதரான சர்மா, பழைய நாட்களை மறக்காதவர். சென்னையில் செஞ்சூரியன் டிரஸ்ட் சார்பில் அவருக்கு மாமனிதர் விருது தரப்பட்டது. சி. சுப்ரமணியம் கையால் விருது வழங்கப்பட்டபோது, சர்மா, "என் தலைவர் கையால் நான் விருது வாங்குகிறேன்" என்றார்.

சி.எஸ். எப்படி சர்மாவுக்குத் தலைவர் ஆவார்?

சர்மாவே விளக்கினார்: "சி.எஸ். காங்கிரஸ் கட்சியின் தலைவராக இருந்த போது, செயலாளராக நான் இருந்தேன்."

— கௌதம்ராம்




எப்போதும் விடாமல் என் கையுடன் உன் கையை பிணைத்துக் கொண்டேயிரு. விடாதே. எந்த நிமிஷமும் தனித்து இருக்காதே" என்று எழுதிக் காட்டினான்.

"எஸ்... எஸ்... நல்ல யோசனை."

சூர்யாவின் பழைய பயம் அசுர வேகத்தில் தலை தூக்கியது. ஹாலிவால் நட்சத்திரத்தின் பாதை பற்றிய வரைபடத்தை கோபக்ஸிடம் பார்த்தவுடன் புரிந்து போய்விட்டது! கோபக்ஸ் என்னை வெளியே வீசி விட தீர்மானித்தது தீர்மானித்ததுதான். கோரமான மரணம்!

எப்படியும் அதற்கு எதிர் வியூகம் வகுக்க வேண்டும் என்று வெறி வந்தது சூர்யாவுக்கு. ஒரு வினாடி அது அசட்டையாக எதையாவது செய்து கொண்டிருக்கும் நேரத்தில் நம் லேசர் கன்னை இயக்கி அதை உருக்கி விடலாமா என்று யோசித்தாள். ஊஹூம். பயணத்தின் இடையில் அப்படிச் செய்வது தற்கொலைக்கு ஒப்பானது. அவகாசம் கிடையாது. பாஸ் வேர்டை அவ்வளவு சீக்கிரத்தில் தேடிக் கண்டுபிடித்துவிட முடியாது. அப்புறம் பாதை தெரியாமல் சாக வேண்டியது தான். அன்றைக்கும் மறுநாளும் இதையே சிந்தித்துக் கொண்டிருந்தாள். ஒரு சந்தர்ப்பத்தில் கோபக்ஸ் எதற்காகவோ கீழ் சேம்பருக்குப் போயிருந்த போது ரஷ்ஷூவிடம் ஆலோசனைக்காக எழுதிக் கேட்டாள்.

"பயப்படாதே அக்கா! நான் யோசித்து வைத்திருக்கிறேன். ஹாலி வால்நட்சத்திரத்தின் பாதையை நாம் கடக்கும் வரை

மீண்டும் மீண்டும் வெளியில் மிதந்து சந்தோஷித்தார்கள். எல்லா நேரங்களிலும் ஒருவர் கையை ஒருவர் விடாமல் பிணைத்தபடியே இருந்தார்கள். உள்ளே உட்கார்ந்திருந்த போது அடிக்கடி அப்பாவை நினைத்துக் கொண்டார்கள். அவர் புத்திக்கூர்மையை எண்ணிப் பெருமிதம் கொண்டார்கள். பயணம் எதிர்பார்த்ததை

விடப் பெரும் வெற்றி பெற்றதால் தலைவர் சூர்யாவை மன்னித்து விடுவார். தண்டனை ஏதுமிராது, மாறாக பதவியும் பாராட்டுகளும் கிடைக்கலாம் என்று ரஷ்ஷு சொன்னதைக் கேட்டு சந்தோஷப்பட்டான். கோபக்ஸ் 'நோ கமெண்ட்' என்றது.

"கோபக்ஸ்! டெலஸ்கோப் இருந்தால் நம் பூமியை ஆசை தீரப் பார்க்கலாம். நம் மனிதக் கூட்டங்களைப் பார்த்து எவ்வளவு நாட்களாயிற்று. உஸ்... ஸ்ஸ் என்ற காற்றின் ஒலியைத் தவிர வேறு சப்தங்களையே கேட்காமல் சூன்ய வாழ்க்கை வாழ்ந்து விட்டோம்."

"நெருங்கிக் கொண்டிருக்கிறோம் சூர்யா! இன்னும் முப்பத்தி எட்டு நாட்கள் பயண தூரம். தரையிறங்கி விடுவோம்."

அன்றைக்கு முழுவதுமே ரஷ்ஷு தூங்கிக் கொண்டிருந்தான். சூர்யாவுக்கு தூக்கம் வரவில்லை. ஒரே பரபரப்பிலிருந்தான். இரண்டு நாட்களாகத் தூக்கம் வரவில்லை.

# தேடித் தேடி

என் நாட்டின் கோடானு கோடி மக்களின் இதயங்களில் எல்லாம் சூர்யா...

**செய்யாறு தி. தா. நாராயணன்**

சூர்யா... ரஷ்ஷு. இறங்கியவுடன் எத்தனை பாராட்டு விழாக்கள்? பேட்டிகள், மீட்டிங்குகள். உண்மையில் என்னுடையது பெரிய சாதனைதான். கோபக்ஸ் கூட உலக உருண்டை மேதாவிகளுக்கு மரண அடி கொடுத்து விட்டாய் என்று சொன்னதே!

நடந்ததையெல்லாம் எண்ணிப் பார்த்தான். யுரேனியத்தைத் தேடி அவர்கள் பயணப்பட்டது. எல்லோரையும் ஏமாற்றி விட்டு அதிரடியாய்த் தான் உள்ளே நுழைந்து விட்டது. இன்றைக்கு பூமியில் யாரும் நினைத்துக் கூடப் பார்க்காத ஒன்றை, இருக்காது, இருக்கவே இருக்காது என்று நம்பிக் கொண்டிருந்ததை உடைத்து செவ்வாயில் உயிரினங்கள் வாழ முடியும் என்று உலகத்திற்குக் கண்டுபிடித்துக் காட்டிய இந்த சூர்யா தி கிரேட்! தனக்குள் சுயபெருமையில் திளைத்துக் கொண்டிருந்தான்.

கோபக்ஸுக்கு பாவம் ஓய்வின்றி ராக்கெட்டைச் செலுத்தும் பணி. ரஷ்ஷுவுக்கு இன்னமும் ரேடியேஷன் பாதிப்பு அவ்வப்போது தெரிந்தது. நிறைய தூங்கினான். அதிக சோர்வாயிருந்தான். அடிக்கடி ஜுரம் வந்து கொண்டிருந்தது. அவன் உடலில் இரத்தத்தில் வெள்ளையணுக்கள் எண்ணிக்கையில் குறைந்து போய் நோய் எதிர்ப்பு சக்தி பாதிக்கப்பட்டிருக்கிறதென்று கோபக்ஸ் சொல்லிற்று. கோபக்ஸ் அவனை இடைவிடாது கண்காணித்து சிகிச்சையளித்துக் கொண்டிருந்தது.

"கோபக்ஸ்! கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்துக் கொள். எதையாவது ஒரு வேலையை நான் பார்த்துக் கொள்கிறேன்."

"சூர்யா! இது கடைசி முறையாக இருக்கட்டும். போய் விடுங்கள். என் வேலைகளில் யாரும் குறுக்கிடுவதை என்னால் பொறுத்துக் கொள்ள முடியாது."

"ஏன் இப்படிப் பண்றே? நாம் நண்பர்கள்தானே?"

"எஸ்! உங்கள் எல்லையில் நீங்கள் நிற்கும் வரையிலும் உங்களை உருப்படியாய் கொண்டு சேர்க்கும் கடமையும், கவலையும் எனக்குண்டு. புரிந்து கொள்ளுங்கள். ஒரு நாளைக்கு எவ்வளவு யோசிக்க வேண்டியிருக்கிறது தெரியுமா? தலையைத் தொட்டுப் பாருங்கள் கொதிக்கிறது. வெப்பத்தில் உருகி செயலற்றுப் போய் விடுவேனோ என்று கூட பயப்படுகிறேன். வேறு வழியில்லை. இந்த கோபக்ஸின் உபகரணங்களின்றி, கீழிருந்து வரும் வழிகாட்டுதலின்றி வழி கண்டுபிடிப்பது அத்தனை சுலபமல்ல. சென்ற வாரம் பாதை மாறி பூமிக்கு வடதிசையில் நாற்பத்தெட்டாயிரம் கிலோ மீட்டர்கள்



## அன்புள்ள வாசகர்களே,

- இப்படி ஆரம்பித்து எழுதும் சமயங்களில் வழக்கமாகக் கோரும் ஆதரவைத்தான் இப்போதும் கோருகிறோம்!

பத்திரிகை தயாரிப்புச் செலவுகள் அதிகரித்து விட்டன என்பதால் உங்கள் கல்கியின் விலையை அடுத்த இதழிலிருந்து ஐந்து ரூபாயாக உயர்த்த வேண்டியிருக்கிறது. வாரத்துக்கு ஐம்பது காசு வீதம் மாதத்துக்கு இரண்டு (சில மாதங்களில் இரண்டரை) ரூபாய் தான் உங்கள் பட்ஜெட்டில் கூடுதலாக ஒதுக்க வேண்டும். மறுக்க மாட்டீர்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

நாங்களும் கூடுதலான வண்ணப் பக்கங்கள் தந்து உங்களை மகிழ்விக்க முயற்சிகள் மேற்கொண்டிருக்கிறோம். அடுத்த இதழ் சுவையும் மணமும் குணமும் நிறைந்த இரட்டைச் சிறப்பிதழாக வெளிவரவிருக்கிறது. இது போன்ற போனஸ்கள் அவ்வப்போது தொடரும். ஒவ்வொரு இதழையும் உங்கள் எதிர்பார்ப்புக்கேற்ப சத்தும் சுவையும் நிரம்பியதாகத் தயாரிக்கும் முயற்சி எப்போதும் தொடரும்.



மனங்கனிந்த புத்தாண்டு, பொங்கல் வாழ்த்துகள்.

— கல்கி நிர்வாகம்

போய் விட்டோம். அப்புறம் தவறைக் கண்டு பிடித்து திருத்தினேன். என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்."

சூர்யாவுக்கு இப்போது அதைப் பார்க்கப் பாவமாயிருந்தது.

"கோபக்ஸ்! ஹாலிஸ் காமெட்டின் பாதையைத் தாண்டி விட்டோமல்லவா?"

"கூக்... கூக்... கூக்.... தப்பி விட்டீர்கள். நீங்கள் இருவருமே ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்ளவில்லை. நீங்கள் இருவருமே என் மூளைப் பதிவின்படி நண்பர்கள். நண்பர்களை துவம்சம் செய்ய ஆணையில்லை என்று ஏற்கெனவே உங்களிடம் சொல்லியிருக்கிறேன். சந்தர்ப்பங்களில் துப்பாக்கியை உங்களுக்கெதிராகத் தூக்கியிருப்பேனேயொழிய பயன்படுத்தியிருக்க மாட்டேன். இலேசாய் உன் கையை தீய்த்தது கூட உன்னை எங்கள் விஷயத்தில் தலையிடாமல் இருக்கச் செய்யவே. எல்லாமே ஒரு பயமுறுத்தல் நாடகம். இப்போது கூடச் சொல்கிறேன். உன்னைப் பொறுத்தவரை ரகசியங்கள் எதுவும் தெரியாது. தெரிந்ததாக எங்காவது உளறிக் கொட்டினால் அடுத்த நொடி தலைவரின் உளவுப் படை உனக்குச் சமாதி கட்டி, அரசு மரியாதையுடன் அடக்கம் செய்து விடும். ஜாக்கிரதை."

"கோபக்ஸ்! இது ரீல். எல்லாமே ஒரு நாடகம் என்றால் எஸ்.ஃ.ரெனோ 2200க்கு என்ன அர்த்தம்?"

"அது கூட நாடகம்தான். உன் அப்பா சொன்ன யோசனை அது. நீ எப்படியும் சும்மாயிருக்க மாட்டாய். நிச்சயம் கம்ப்யூட்டரில் எங்கள் ரகசியங்களைப் பற்றித் தேடுவாய் என்று அங்கே உன்னை அழித்து விடுவது போல ஒரு விஷயத்தைப் பதிந்து வைக்கச் சொன்னார். சார் நினைத்தபடியே நடந்தது. உங்களை எவ்வளவு துல்லியமாய்க் கணித்து வைத்திருக்கிறார்!"

**சி**ல நாட்களில் ரஷ்ஷுவின் உடல் தேறி விட்டது. எழுந்து நடக்க ஆரம்பித்தான். முகத்தில் அசதி தெரிந்தது.

"ரொம்ப நன்றி கோபக்ஸ்! உன் உதவியும் அனுசரணையும் புத்திசாலித்தனமும் இல்லையென்றால் என்றைக்கோ செத்துப் போயிருப்பேன். ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறேன்" - சிநேகமாய் அதன் கையைப் பற்றினான். ஆனால் அது அவன் நன்றியை ஏற்கவில்லை.

(தொடரும்)

**50**

ஹிரண்ய கர்ப்ப சாளக் கிராமத்தின் விசேஷத்தை எடுத்துச் சொன்னேன்.

ஹிரண்ய கர்ப்பன் என்பது பிரும்மாவுக்குப் பெயர். அந்த சாளக்கிராமத்திலே பகவான் பிரும்ம ரூபியாக இருக்கிறான்–நான்முகனாக இருக்கிறான். அந்த நான்முகனுக்கு அந்தர் யாமி விஷ்ணு தான்.

'நான்முகனை நாராயணன் படைத்தான்' என்று வேதத்தைத் தமிழ்ப்படுத்தினார் ஆழ்வார்.

ஆகவே, பிரும்மாவுக்கு அந்தர்யாமி எவனோ, எவன் பிரும்மாவுக்கு முன் தோன்றினானோ, எவன் பிரும்மாவுக்கும் சமஸ்த வேதத்துக்கும் பதியாக இருக்கிறானோ அவனே விஷ்ணு என்கிறது வேதம். அந்த விஷ்ணுவேதான் யக்ஞ ஸ்வரூபியும் ஆகிறான்.

இந்த வேத வாக்யத்தை நரசிம்ஹ புராணமும் சொல்கிறது. அதிலே ஒரு அழகான ச்லோகம்– 'அம்ருதம் சாதனம் சாத்யம்' என்று ஆரம்பிக்கும் ச்லோகம் அது.

அதன் அர்த்தம் என்னவென்றால், நல்ல ஞானம் உடையவர்கள் விஷ்ணுவை இவ்விதமாகப் பார்க்கிறார்கள்–

எவ்விதமாக?....

அவன் 'அம்ருதம் சாதனம் சாத்யம்' என்று அறிந்து அணுகுகிறார்கள்.

அம்ருதம்– அவனது குணம். அவனை நினைத்தால் நாமும் அம்ருதப்பிராயர்கள் ஆகிவிடுவோம். தோஷங்கள் இல்லாமல், ம்ருத்யு பயங்கள் இல்லாமல், கெட்ட குணங்கள் இல்லாமல் பிரகாசிக்கிறவன் அம்ருதன்.

அவனை ஆச்ரயிக்கிற நாம் எப்படி இருக்கிறோம் என்றால், துருப்பிடித்த இரும்பு போல் இருக்கிறோம்.

உலகத்திலே இப்படித் துருப்பிடித்த இரும்பாக இருப்பவர்களையெல்லாம் ஸ்வர்ணாபரணமாக மாற்றி, தன் திருவடியிலே சேர்த்துக் கொள்கிறான் பரமாத்மா.

கெட்ட குணங்களையெல்லாம் போக்கி நம்மையும் அமிர்த துல்யர்களாகச் சேர்த்துக் கொள்கிறான்.

திருப்பாணாழ்வார் என்று பிரசித்தமாக எழுந்தருளி, பத்தே பாசுரம் பாடியவர் இருந்தார். மிகவும் குறைவான பாசுரங்கள் பாடியவர் இவர்தான்.

அந்தப் பாசுரங்களை கவனித்துப் பார்த்தோமானால் நாலாயிர திவ்ய பிரபந்தங்களின் மொத்த அர்த்தத்தையும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்கிற ரீதியிலே ரொம்பவும் சூத்திரப் பிராயமாக இருக்கும்.

அப்படியே ரங்கநாதர் கோயிலுக்குப் போனவர், எம்பெருமானின் வடிவழகைத் திருமுடியிலிருந்து திருவடி வரை சேவித்தார். சேவித்து, அந்த அனுபவ பரீவாஹம் – அனுபவ மேலீட்டினாலே– பாடினார். பாடி நேரே கர்ப்ப கிருஹத்துக்குள்ளே போனார். அவன் திருமேனியிலேயே கலந்து விட்டார். ரங்கநாதருக்குள்ளேயே புறப்பட்டுப் போய் விட்டார்!

எல்லோருக்குமே ஒரு சந்தேகம் வரும். பரமாத்மா சுத்த சாத்விகமான மூர்த்தி என்று சொன்னால், அவன் கோவிலில் அர்ச்சை கொண்டு, பள்ளி கொண்ட தோற்றமிருக்கிறதே. அதுவும் சுத்த சாத்விகமானதுதானே?

ஆழ்வார் நம்மைப் போன்ற

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



மனிதரல்லவா..? அவருக்கும் அல்பமான சரீரம்தானே இருந்திருக்கும். அவர் போய் ரங்கநாதர் திருமேனியிலே கலந்து நின்றார் என்றால் எப்படிப் பொருந்தும்?- இந்த மாதிரி நியாயமான சந்தேகம் வரவே செய்யும்.

கலந்து நின்றது வாஸ்தவம்தான் என்று ஏற்கும்போது என்ன தெரிகிறது நமக்கு...?

ஆழ்வாருடைய திருமேனியும் பகவானுடைய திருமேனி போன்றதே. இல்லையென்றால் கலப்பது அசாத்யம். அது நடந்திருக்காது.

ஆகவே பகவான் நம்மை தனக்குள்ளே தானே விரும்பி சேர்த்துக் கொள்ளும் பரம காருண்யன். எப்படிச் சேர்த்துக் கொள்கிறான் என்று கேட்டால், தன்னைப் போல் ஆக்கி, தன்னுள்ளே சேர்த்துக் கொள்கிறான்.

'தனக்கேயாக எனைக் கொள்ளு' என்கிறார் ஆழ்வார்.

அவனுக்காக நம்மை ஏற்கிறான் பரமாத்மா. அப்படி ஏற்கும்போதே அவனுக்குத் துல்யமாக நம்மை ஆக்கி சுவீகரிக்கிறான்.

பாசுரம் மூலம் உணர்த்தப்படும் இந்த உண்மை, பிரும்ம சூத்ரத்திலேயும் வெளியிடப்படுகிறது:

பகவான் நம்மை எல்லா விதத்திலேயும் அவனுக்குச் சமானமாக்கி, விசேஷமான போக-யோக்யங்களைக் கொடுக்கிறான்.

அதனால்தான் நரசிம்ஹ புராணத்திலே அப்படியொரு சுலோகம் வருகிறது-

## அருள்வாக்கு

ஸ்ருஷ்டியிலே ஈச்வரன் சாச்வத ஆனந்தம் தருவதாக எதொன்றையுமே படைக்கவில்லை. அவனே தர்சனம் தந்தால்கூட அது ஸர்வ கால ஆனந்தமாக இருப்பதில்லை. நாமதேவரைப் போல, ஸுந்தரமூர்த்தி ஸ்வாமிகளைப் போல தினந்தினம் அவனைப் பார்த்துக் கொட்டமடித்தவர்களைகூட அவ்வப்போது விட்டுப் பிரிந்து அழ அழவுந்தான் வைத்திருக்கிறான். க்ருஷ்ணனுக்கு ராதை உயிர் என்கிறார்கள். அவளையும் விரஹத்தில் அப்படியே தேஹமே சிதறிப் போய் விடுகிறாற் போலத் துடிக்கத்தான் விட்டிருக்கிறான். ஆசைப்பட்டால் அழுதுதான் ஆகணும் என்றே இப்படியெல்லாம் வைத்திருக்கிறான். அவனை வெளியிலே வேறாக வைத்து ஆனந்தப்படுகிறவரை எதுவும் சாச்வத ஸுகமில்லை. அத்வைதம் தவிர எல்லாம் துக்கம்தான் என்று காட்டவே இப்படிப் பண்ணுகிறான் போலிருக்கிறது.

— ஜகத்குரு
காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சார்ய
ஸ்வாமிகள்



என்ன பண்ணுகிறானாம் பரமாத்மா ரங்கநாதன்? நம்மையெல்லாம் கைப்பிடித்துத் தூக்கி தான் படுத்துக் கொண்டிருக்கிற படுக்கையிலே உட்கார வைக்கிறானாம். அதோடு மட்டுமில்லை. அவன் மடியிலே நம்மை உட்கார வைத்துக் கொள்கிறானாம். உச்சி மோந்து ஆனந்தப்படுகிறானாம்! தான் படுத்துக் கொண்டிருக்கும் படுக்கையிலேயே ஆனந்தத்தைக் கொடுக்கிறான்.

இந்த மாதிரி யார் கொடுப்பார்கள்...? நம் வீட்டுக்கு யாராவது வந்தால் 'இங்கே படுத்துக் கொள்ளுங்கள்' என்று வேறொரு இடத்தைக் காண்பித்து, 'நன்றாகக் காற்று வரும்' என்று சமாதானம் சொல்லி, வேறு பாய்–தலையணை கொடுத்துவிடுவோம்! மறுநாள், 'நன்றாகத் தூங்கினீர்களா? சௌகரியமாக இருந்ததா?' என்று விசாரித்துக் கொள்வதோடு சரி.

தான் படுத்துக் கொள்ளும் படுக்கையிலேயே தன் அருகிலேயே படுத்துக் கொள்ளும்படி சொல்பவர்கள் எத்தனை பேர் இந்த உலகத்திலே?

பகவான் பாருங்கள்... உயர்ந்த போகம் உடையவன்– அந்த போகத்தில் தனக்கு சமானமாக நம்மை ஏற்றி ஆனந்திக்கிறான் என்று சொன்னால், அதுதான் அவனுடைய அம்ருதத்வம் என்கிற உயர்ந்த குணம்.

'அம்ருதம் சாதனம் சாத்யம்' என்று.

அம்ருதம் என்றால் இந்த இடத்திலே, தேவர்கள் பருகின அம்ருதம் அல்ல. நரசிம்ஹ புராணத்திலே சொல்லக்கூடிய அம்ருதம் என்பது, அம்ருத பிராயனான பகவான், நம்மையெல்லாம் அம்ருத பிராயர்களாக மாற்றித் தன்னிடத்திலே சேர்த்துக் கொள்ளும்படியான தன்மை. அப்படிச் சேர்த்துக் கொள்ளும் சிறந்த காருணிகன் அவன்.

ஸ்வாமி தேசிகன், 'ந்யாஸ திலகம்– சரணாகதிக்கே ஒரு திலகம்' என்று குறிப்பிடுகிறார் ரங்கநாதரைக் குறித்து. நியாஸ திலகம் என்கிற ஸ்தோத்திரத்திலே வருகிற விஷயம் இது:

அதைத்தான் நாசிம்ஹ புராணம் அம்ருதம் சாதனம் சாத்யம் என்று சொல்கிறது.

சாதனமும் அவனே, சாத்யமும் அவனே, அம்ருதமான சாதனமும் அவனே. அம்ருதமான சாத்யமும் அவனே.

சாதனம்–அவனை அடைவதற்கான வழி. உபாயம் என்று ஆசார்யர்கள் அதைச் சொல்வார்கள்.

சாத்யம் என்றால் உபேயம். அடைந்த பிற்பாடு அவனிடத்திலே நமக்குக் கிடைக்கும்படியான போக்யங்கள். உபாயம்– வழி. உபேயம்–பலன்.

'சாதனமும் நற்பலனும் அவனே' என்றார் ஸ்வாமி தேசிகன்.

ஆகையினாலேதான் அவனை அன்றி நமக்கு வேறு வழி இல்லை. அவன்தான் மார்க்கம். அவன்தான் பலன்.

'ஓம் மார்க்காய நம:' என்று கூட பின்னால் சஹஸ்ரநாமத்திலே அவனுக்கொரு திருநாமம்-'மார்க்கம்' என்றே திருநாமம்!

மார்க்கம் எப்படிப்பட்டது...? நரக லோகத்துக்குப் போகக் கூடிய வழிக்கு நேர் எதிர்த்தட்டான மார்க்கம் இது. அந்த நல்ல வழியிலே நம்மை அழைத்துச் செல்லக் கூடியவனாக இருக்கிறான்.

மார்க்க என்றால் அதுதான் பொருள்-உபாயமாக இருப்பவன்; வழியாக இருப்பவன்.

அவனை அடைவதற்கு என்னென்ன வழிகள்...?

பக்தி என்கிற உயர்ந்த உபாயத்தினாலே அவனை அடையலாம்;

சரணாகதி என்கிற உபாயத்தினாலே அடையலாம்.

இந்த உபாயங்களினாலேதான் அவனை அடைய முடியுமே தவிர வேறொன்றினால் அல்ல.

கலியுகத்தில் வாசம் செய்கிற நமக்கு பக்தி யோகமானது அவ்வளவு சிறந்தது கிடையாது. நம்மால் பண்ண முடியாது அதை. அதனால்தான் பகவானே கீதையிலே சொன்னான்- 'மற்ற தர்மங்களையெல்லாம் விட்டு என்னைப் பற்று' என்று.

இப்படிச் சொன்னதனால் நம் கடமைகளைச் செய்யாது போனால் பாதகமில்லை; பகவான் நாமா சொன்னால் போதும் என்று அர்த்தமாகிவிடாது.

விதிக்கப்பட்ட கடமைகளைப் பண்ணித்தான் ஆக வேண்டும். அப்படிச் செய்வதற்குத் தனியே புண்ணியம் கிடையாது; ஆனால் செய்யாது போனால் பாவம்.

கீதார்த்த சஹஸ்ரம் என்கிற உயர்ந்த ரகசியத்திலே, 'உனக்கு விதிக்கப்பட்ட சுவதர்மத்தில் நீ ஞான வைராக்யத்தோடு இருக்க வேண்டும்; வீணான காரியத்தில் போய் முனையாதே' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

பக்தி யோகம் பண்ணுகிறேன் என்று ஆரம்பித்து, அதைப் பண்ணி முடியாமல் பாதியிலேயே விட்டுவிட்டால் அதனாலேயே இன்னும் பல பிறவிகள் வந்து போகும்.

ஆதலால், தெரியாத காரியங்களில் இறங்காதே. அப்படி இறங்கினால், தர்மங்களை நாம் விடுவதற்குப் பதில் அவையே நம்மை விட்டுப் போய்விடும்.

பிரும்ம வித்யைகள் ஏகப்பட்டது இருக்கின்றன. அவை நம்மால் பண்ணக் கூடியவையா என்றால் இல்லை! இப்போது வாழும் காலத்தில் அந்த யோகங்களெல்லாம் பண்ணுவது ரொம்பக் கஷ்டம். அவற்றின் கிட்டேயே போக முடியாது.

எதைப் பண்ண முடியும் சுலபமாக என்றால்- பிரபத்தி- அதாவது சரணாகதி! நீதான் எனக்கு உபாயம் என்று நினைத்து ஆத்ம சமர்ப்பணம் பண்ணுதல்.

(தொடரும்)

## நம்புங்கள், நிஜம்!



இந்தப் புகைப்படத்தில் என்ன விசேஷம் தெரிகிறதா? நின்று கொண்டிருப்பவர் இங்கிலாந்து நாட்டின் பிரதம மந்திரி. அவரைச் சுற்றி ஆயுதம் தாங்கிய காவல் படை இல்லை. அவருடைய பயணத்திற்காக மற்றப் பயணிகளை இறக்கி விடவும் இல்லை. அவர் 'மக்களின் சேவகன்' என அந்தச் சிறுவனுக்குக் கூடத் தெரிந்திருக்கிறது. எழுந்து இடம் கொடுக்கவில்லை பாருங்கள்!

— ராஜலக்ஷ்மி முரளீதர்

ஆதாரம்: டைம்ஸ் ஆப் இந்தியா

செங்கேணி, விடிவதற்கு முன்னரே வாசலில் வந்து நின்றாள். பாரதி, தெரு தெளிக்க, வாளியுடன் கதவைத் திறந்த போது, அவள் நின்றதை இவள் பார்த்தாள்.

இருட்டு, சுவராய் நின்றது.

"யாரு?"

"நான்தாங்கா, செங்கேணி."

"என்னடி இத்தனைக் காலமே?"

"கூடமாட ஒத்தாசையா இருக்கலாம்னு வந்தங்கா..." என்றபடி, வாளியைப் பாரதியின் கையிலிருந்து சுவாதீனமாக வாங்கிக் கொண்டு, வாசலைக் கூட்டி நீர் தெளித்தாள். பாரதியிடம் கேட்டு, பிறையில் இருந்த கோலமாவை எடுத்து வந்து, சின்னதாய்க் கோலம் போட்டு முடித்தாள். உள்ளே வந்தவளிடம், 'இதையெல்லாம் நீ செய்யணும்னு கட்டாயம் இல்லேடி' என்றாள், பாரதி.

"வீட்டுல சும்மாதானேக்கா இருக்கேன். இங்க செஞ்சா குறைஞ்சா போயிடுவேன்?"

"உன் அப்பா அம்மா தப்பா நினைச்சுடக் கூடாதுடி..."

"அவங்கதான், இங்க போகச் சொன்னாங்கக்கா. புத்தி வரும்னு சொன்னாங்க..."

பாரதி சிரித்தாள்.

"ஆமாண்டி. புத்தியைப் பாயசம் பண்ணி வச்சிருக்கு, இங்க. தம்ளர் தம்ளரா கொடுக்கிறேன், போடி..."

செங்கேணி, காலையில் குளித்து, இருப்பதிலே நல்லது என்று தோன்றும் சட்டை பாவாடை அணிந்து வந்திருப்பதைக் கவனித்தாள், பாரதி. காப்பி போட்டு, அவளுக்கு ஒரு தம்ளர் கொடுத்தாள். அவள் அதைத் தூக்கிக் குடிப்பதைப் பார்த்து, "சும்மா சாதாரணமாவே சாப்பிடு. காப்பியைத் தூக்கிக் குடிச்சியானா, தொண்டை கட்டிடும்..." என்றாள் பாரதி.

"எச்சில் ஆயிடுங்கா."

"எச்சிலைத் தண்ணீரைக் கொண்டு கழுவிக் கொள்ளலாமே."

பாரதிக்கு அந்தச் சித்தர் பாட்டு நினைவுக்கு வந்தது. தேன், ஈக்களின் எச்சில். பூ வண்டுகளின் எச்சில். புனிதமான கங்கையின் தண்ணீர் கூட, மீன்களின் எச்சில்... அப்பா, செங்கேணியை இரண்டு நாள் கவனித்தார். அதற்குப் பிறகு சொன்னார்.

"இவ நல்ல பாத்திரம்மா. நல்ல விஷயங்களை இவள் காதுக்குப் போடலாம்..."

தம்பூராவை எடுத்து வந்து வைப்பது, சமயங்களில் அதைச் சுத்தம் செய்வது, அப்பாவுக்குப் பாய் விரித்து, அவர் அமர்ந்து பாடுகையில் கண்ணே காதாக, காதுகளே மனமாக, மனமே அவளாக நின்று கேட்பதைப் பாரதி கவனித்தாள்.

முதல் நாள், அவளை அழைத்துக் கொண்டு கோவிலுக்குப் போனாள் பாரதி. சந்தியாவும் உடன் வந்தாள். குழந்தை

# முதல் மழைத் துளி

பள்ளி வீட்டுப் பாடங்களை எழுதிக் கொடுப்பாள்.

பாரதி, செங்கேணியைக் கோவிலுக்கு அழைத்துப் போனவள், ஒரு இருநூறு பக்க நோட்டுப் புத்தகம், ஒரு பால் பாய்ண்ட் பேனா வாங்கிக் கொடுத்தாள். அன்று மாலை, வகுப்பைத் தொடங்கினாள். முதல் நாள் சரளி வரிசை என்று பாடம் தொடங்கியது. செங்கேணியின் குரல், ஸ்ருதியுடன் பசை போட்டு ஒட்டிக் கொண்டிருந்தது. ஸ - ஸ்ருதியில் இழைந்தது. பஞ்சமமும் மேல் ஸட்ஜமமும் திக்காக நரம்பில் ஒட்டிக் கொண்டன. சிறு பிசிறு இல்லை. சிறு



சட்டென்று, செங்கேணியிடம் ஒட்டிக் கொண்டது.

காலையில் சந்தியா கண்ணைப் பிட்டுக் கொண்டதும், காப்பி கொடுத்து, அவளை நல்ல வார்த்தை பேசிக் குளிக்கச் செய்யும் பொறுப்பை எடுத்துக் கொண்டாள் செங்கேணி. சோப் தேய்த்துக் கிச்சு கிச்சு மூட்டி, அவளைச் சந்தோஷம் பொங்கச் செய்தாள். திசைக்கு ஒன்றாகப் பரவிக் கிடக்கும் புத்தகங்கள், நோட்டுகள் ஆகியவற்றை அடுக்கிக் கொடுப்பாள் செங்கேணி.

நழுவல் இல்லை.

பாரதிக்குத் திருப்தியாக இருந்தது.

"சரளி வரிசை அப்புறம் பாட்டுன்னு பழைய முறை வேணாம். உனக்கு வித்தியாசமாச் சொல்லித் தரப் போறேன். ஒரு பக்கம் அடிப்படை. அதோடு பாட்டு. பாட்டு மூலமாத்தான், அதன் 'எக்ஸ்ரேயை'ப் புரிஞ்சுக்க முடியும்."

சரிகமபதநியைச் சொன்ன கையோடு, சுருட்டியில், கோபாலகிருஷ்ண பாரதியின் பாட்டு ஒன்றைச் சொல்லிக் கொடுத்தாள்.

**பிரபஞ்சன்** **10**

''செங்கேணி... எதைச் செய்தாலும் குருவை நினைச்சுக்கிட்டு செய். என்னை இல்லை. யாரெல்லாம், உனக்கு எதைக் கற்றுக் கொடுத்தாலும், அவர்கள் உனக்குக் குரு. சங்கீத வித்தை மட்டும் இல்லை, எந்த வித்தை யானாலும் குருவை நினைச்சுட்டுச் செய்ய ணும். அப்போதான் வித்தை விருத்தியாகும். அகந்தை, கர்வம் படியாது. சரியா?"

"சரிக்கா'' என்று செங்கேணி, பாரதி சொல்லிக் கொடுத்த பாட்டை, நோட்டில் எழுதிக் கொண்டாள். இரண்டே நாளில் மனப்பாடம் செய்து பாடிக் காட்டினாள். ஒரு நல்ல சிஷ்யை தனக்குக் கிடைத்தமைக் காக அவள் மகிழ்ந்தாள்.

**பா**ட்டைச் சொல்லிக் கொடுத்த பிறகு, சுருட்டியில் அமைந்திருக்கும் பல்வேறு கீர்த்தனங்களையும் பாடி, அந்த ராகத்தின் பரிமாணங்களைச் சொல்லிக் கொண்டு வந்த பாரதி, வாசலில் அரவிந்தன் வருவதைக் கவனித்தாள்.

'வாங்க' என்று சைகையால் உணர்த்தி, அவன் உட்கார ஜாடை செய்தாள். பாடம் தொடர்ந்தது.

பாடம் முடிந்ததும், 'ஐயாவுக்கு காப்பி போட்டுக் கொண்டு வா. உனக்கும், எனக் கும், அவருக்கும்' என்றாள் பாரதி.

"ரொம்ப சூட்டிகையான பெண்" என்று செங்கேணி பற்றிய அபிப்ராயத்தைச் சொன் னாள், பாரதி.

"நீங்கள் ஒரு நல்ல ஆசிரியர் மேடம்" என் றான் அரவிந்தன்.

''ஆசிரியர் ஒன்றும் கற்றுக் கொடுப் பதில்லை, அரவிந்தன். ஒரு சிற்பியிடம் சிலையை எப்படி உருவாக்கிறீங்கன்னு கேட் டாங்களாம். நான் அதை உருவாக்கிற தில்லை. கல்லில் இருந்து தேவைப்படாத பகுதிகளை எடுத்திடறேன். சிலை உருவா யிடறது என்றானாம் சிற்பி. அது மாதிரிதான். வாத்தியார்கள் கற்றுக் கொடுக்கிறார்கள் என் பதைக் காட்டிலும், தப்பை அகற்றுகிறார்கள் என்பதுதான் சரி."

பேச்சு, கனகராஜ் பக்கம் திரும்பியது.

"கனகராஜ் சொல்றதை என்னால் சுலப மாகச் செய்து கொடுக்க முடியும், மேடம். என்னத்துக்கு, இந்தச் சின்ன காரியத்துக்காக நீங்கள் பிரிந்து இருக்கிறீர்கள்? நானே தயா ராக இருந்தும், அதைச் செய்யக் கூடாது என்று பிடிவாதமாக ஏன் பேசுகிறீர்கள்?"

பாரதி, வாசல் வழி வந்து கவிந்த இருளைப் பார்த்தாள். எழுந்து விளக்கைப் போட்டாள். படிக்கப் படிக்க அறியாமை அகன்று ஓடுவது போல, இருள், ஒளியைக் கண்டு ஓடியது. மீண்டும் அவன் முன் வந்து அமர்ந்தாள். அதே நேரம், சந்தியா வந்து, அவளிடம், அவள் மடியில் உட்கார்ந்து கொண்டு கேட்டாள்.

"நம்ம நாணா வீட்டு நாயும், காண்டா மிருகமும் சண்டை போட்டா யார் ஜெயிப்பா?"

''நாயும் காண்டாமிருகமும் சண்டை போட்டா, காண்டாமிருகம்தான் ஜெயிக்கும். பெரிசு அதுதானே?"

சந்தியா யோசித்தாள், யோசித்தல் என்பது கன்னத்தில் கை வைத்துக் கொள்ளுதல். தீவிர மாக யோசித்து விட்டு சந்தியா மீண்டும் கேட் டாள்.

"அப்பசுன்னா, சிங்கம் முயல் கதையில, சிங்கம்தானே ஜெயிக்கணும்."

"ஆமா... ஆனா..."

"சிங்கம் பெரிசு. முயல் சின்னது. ஆனா, முயல்தானே ஜெயிச்சது."

"புத்தி இருக்கிறதுதான் ஜெயிக்கும். புத்தி மான் பலவான்."

''அப்பசுன்னா, சிங்கத்துக்கு மூளை இல்லியா?"

"இருக்கு. கோபம் வந்தா, பெரியவங்க, சின்னவங்க ஆயிடறாங்க. சிங்கம், கோபம், ஆத்திரத்தால அழிஞ்சது."

"நாணா வீட்டு நாய்க்குப் புத்தி இருக்கா இல்லியா?"

"இருக்கு."

"அப்போ அது காண்டாமிருகத்தை ஏன் ஜெயிக்கக் கூடாது?"

"ஜெயிக்கலாமே."

"அப்போ, நானும் நாணாவும் சண்டை போட்டா யார் ஜெயிப்பா?"

அரவிந்தன் இப்போது தலையிட்டான்.

"எதுக்கு நீயும் நாணாவும் சண்டை போட ணுமாம்."

"போட்டா"

"எதுக்குப் போடணும்? மனுசர்கள் மனு சர்கள் கூட சண்டையே போடக் கூடா தும்மா. அது தப்பு. சினேகமா, ஃபிரண்ட்ஷிப்பா இருக்கணும்."

''என்னப்பா லீவு லெட்டரா, மறுபடி பாட்டி செத் துட்டாங்களா...?''

''அப்படி காரணம் எழுதினா நீங்க கோப்படுவீங் கன்னு தெரியும் சார்; அதனால, பாட்டி பிறந்திருக் கான்னு சொல்லி லீவு கேட்டிருக்கேன்!''

– மெலட்டூர் விசுவநாதன்



"யார் முதல் மார்க் வாங்கறதுன்னு சண்டை போடணும்னு டீச்சர் சொல்றாங்க."

"மார்க் நிறைய வாங்கணும். அதுக்காக என்னத்துக்குச் சண்டை? மார்க் நிறைய வாங்கறதுக்கும், குறைவா வாங்கறதுக்கும், நல்ல தன்மைக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை."

"நல்லதுன்னா என்ன?"

அரவிந்தன், பேச முடியாமல், யோசித்துக் கொண்டிருந்தான்.

பாரதி சிரித்தாள்.

"நல்லா படிக்கறது. சந்தோஷமா இருக்கிறது. விளையாடறது, யார்கிட்டயும் சண்டை போட்டுக்காமே இருக்கிறது. இதெல்லாம் நல்லது."

அவள் சில நிமிஷங்கள், தன் ரிப்பனை விரலில் வைத்துச் சுற்றிக் கொண்டிருந்தாள். பிறகு கேட்டாள்.

"அப்பா நல்லவரா, கெட்டவரா?"

பாரதி, அரவிந்தன் கண்களைப் பார்த்தாள். திகைப்பாக இருந்தது.

"நல்லவர். ரொம்ப நல்லவர்."

"இந்த மாமாவை விடவுமா?"

"ஆமா. அப்படித்தான்."

அவள், அம்மாவிடம் இருந்து தன்னை விடுவித்துக் கொண்டு நின்றாள்.

"அப்படீன்னா, ஏன் அப்பா சிரிக்கவே கிடையாது?"

"சில பேர், கொஞ்சமா சிரிப்பாங்க."

"இந்த மாமா, நிறைய சிரிக்கிறாங்களே."

"இது இவங்க இயல்பு. அதாவது நேச்சர். சுபாவம்."

"நீயும் கூட, நிறையச் சிரிக்கறே."

அவள் விளையாடப் போய்விட்டாள்.

**பா**ரதி சொன்னாள்.

"மனசுக்குப் பிடிச்ச விஷயம் பேசினா, முகம் மலர்ச்சியா இருக்கு. குழந்தை அதைச் சிரிப்புன்னு நினைச்சுக்கறா..."

சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டு பாரதி தொடர்ந்தாள்.

"அவர் இருந்த, இந்த சில வருஷங்கள்ளே நான் சிரிச்சுப் பேசினதே கிடையாது அரவிந்தன்."

மிகுந்த மன அழுத்தமுடன் அவன் இருந்தான்.

"சரி, நான் புறப்படறேன். மேடம்."

"என்னவோ, சொல்ல வந்தேன்னு சொன்னீங்களே."

"உம்... அடுத்த மாசம் நாலாம் தேதி, கேசட் வெளியீட்டு விழா வச்சிருக்கு..." குபுக்கென்று சந்தோஷம் பொத்துக் கொண்டது. அவளுக்கு கண்கள் கலங்கின.

"எல்லாம், நீங்கதான் காரணம். உங்களுக்கு நான் கடமைப்பட்டிருக்கேன்."

"அப்படி இல்லை, மேடம். திறமையும், ஞானமும் இப்ப இப்படி வெளிப்படணும்னு இருக்கு. நான் காரணம் இல்லை."

"எனக்கு ஒரு யோசனை, மேடம்."

"என்ன சொல்லுங்க."

"நீங்களே ஒரு மியூசிக் ஸ்கூல் தொடங்கலாமே. சொல்லிக் கொடுக்கிறதுல உங்களுக்கு ஆர்வம் இருக்கு. ஏழைகளுக்கு இலவசமாவும், வசதியான குழந்தைகள்கிட்ட, கொஞ்சமாவும் சம்பளம் வசூலிக்கலாம். உங்களுக்கு பொழுதும் போகும். ஒரு கௌரவமான வாழ்க்கை முறையையும் அமைச்சுக்கலாம்."

அவள் மவுனமாக இருந்தாள்.

"எப்படி இருந்தாலும், உங்களுக்குன்னு ஒரு வருவாய் வேணும்தானுங்களே... கனகராஜ் கோபம் மாறுவதுக்கும் வழி இல்லை."

"நீங்க கேட்டதுக்குப் பதில் சொல்லலையே, அரவிந்தன். கணவனுக்கு மனைவி, உதவணும். ஆனா, அது தர்மம் மீறின விதத்துல இல்லை. அறம்னு ஒன்று இருக்கு. அதை மீறின வாழ்க்கை யாரையும் இணைக்காது. இணைக்கக் கூடாது."

"சரி... பள்ளிக்கூடம் பற்றி யோசியுங்களேன்."

"கட்டாயம். எனக்குன்னு அப்பா, லலிதான்னு ஒரு சினேகிதி, அரவிந்தன்னு ஒரு சினேகிதர் இவங்க மூணு பேரும் என்ன சொல்றாங்களோ, அதுதான் நான். ஆகட்டும்..."

அவர்கள் வெளியே வந்தார்கள்.

"நான் உங்களைப் பற்றி, உங்ககிட்ட பேசணும்."

"எதைப் பற்றி மேடம்?"

"எனக்காக இத்தனைச் சிந்திக்கிறீங்களே.... ஏன் உங்களைப் பற்றி யோசிக்கிறதில்லைன்னு கேட்டதும்..."

அவன் சிரித்தபடி நின்றான்.

"என்கிட்டயும் ஒரு கதை இருக்கு. சொல்றேன்" என்றான் அரவிந்தன்.

(தொடரும்)

- வார்த்தையில் மட்டுமல்லாமல் நிஜமாகவே 'தூக்கி' விட்டார்கள் டி.எம்.எஸ்ஸை



# "கன்னத்தில் ரெண்டு போட வேண்டியதுதானே?"

"**நா**ன் இசை மேதை எஸ்.எம். சுப்பையா நாயுடுவிடம், இருபத்தி ஐந்து ரூபாய் சம்பளத்துக்கு, ஹார்மோனியம் துடைத்து வைப்பது போன்ற வேலைகளைச் செய்து கொண்டிருந்த காலம் தொட்டே டி.எம். சௌந்தரராஜனை அறிவேன். 'உன்னிடம் திறமை இருக்கு. உழைப்பு இருக்கு. ஒருநாள் பெரிய ஆளா வருவே' என்று என்னிடம் அடிக்கடி சொல்லுவார் டி.எம்.எஸ். நானும் ஓர் இசையமைப்பாளராகி, இன்று டி.எம்.எஸ். அவர்களைப் பாராட்டும் விழாவில் பேசும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறேன்" என்று எம்.எஸ். விஸ்வநாதன் சொன்னபோது, ரொம்ப எமோஷனலாகி விட்டார்.

டி.எம். சௌந்தரராஜனுக்கு ப்ரியாவிஷன் நடத்திய அந்தப் பாராட்டு விழாவில், வாலியின் பேச்சுதான் ஹைலைட்!

"நல்ல பாடல் எழுதுவது என்பது இன்று கவிஞர்கள் கையில் இல்லை. ஒரு டைரக்டர் கேட்டுக் கொண்டதன் பேரில் ஒரு பாடல் எழுதிக் கொடுத்தேன். அவர் ஒரு குறிப்பிட்ட வார்த்தையை மாற்றி விட்டு, எளிமையாக ஒரு வார்த்தையைப் போடச் சொன்னார். அவர் மாற்றச் சொன்ன வார்த்தை 'கன்னம்'. ஆயிழையே என்று எழுதியிருந்தால், பெண்ணே என்று மாற்றலாம். அதரம் என்று எழுதியிருந்தால், உதடு என்று மாற்றலாம். நுதலை, புருவம் என்று எளிமையாக்கலாம். மேனி என்று இருந்தாலாவது, உடம்பு என்று எழுதலாம். கன்னத்தை, இன்னும் எப்படி எளிமையாக்குவது?

"இந்தச் சம்பவத்தை நான் கவிக்கோ அப்துல் ரகுமானிடம் கூறிய போது, அவர் சொன்னார். 'கன்னத்தை மாற்றிப் போடச் சொன்னவன் கன்னத்தில் நீங்கள் ரெண்டு போட வேண்டியதுதானே!'

"1956-ல், சுமார் நாற்பத்து மூன்று வருடங்களுக்கு முன், திருச்சி ஆல் இந்தியா ரேடியோவில் நான் வேலை பார்த்துக் கொண்டிருந்தபோது, அங்கே ஒரு பாடல் பதிவுக்காக டி.எம்.எஸ். வந்திருந்தார். அவர் அன்று பாட வேண்டிய பாடலைப் படித்துப் பார்த்து விட்டு, 'இதை எழுதினது யார்?' என்றார். என்னை அறிமுகம் செய்து வைத்தார்கள். 'பாட்டு நல்லா இருக்கே! சென்னைக்கு வந்து சினிமாவில் முயற்சி செய்யலாமே!' என்றார். ஆக, இன்று நான் சினிமாவுக்கு பாட்டெழுதிக் கொண்டிருக்கிறேன் என்றால் அது டி.எம்.எஸ். போட்ட பிச்சை!

"டி.எம்.எஸ். பாராட்டிய பத்து நாட்கள் கழித்து நான் போஸ்ட்கார்டில் ஒரு பாடலை எழுதி, டி.எம்.எஸ். அவர்களுக்கு அனுப்பி வைத்தேன். வெகு சீக்கிரத்தில், டி.எம்.எஸ். பாடி, அந்தப் பாடல், ஒலித்தட்டாக வெளிவந்து, இன்றும் கூடப் பிரபலமாக விளங்குகிறது. அந்தப் பாடல்: 'கற்பனை என்றாலும்; கற்சிலை என்றாலும் கந்தனே உனை மறவேன்.'

நிகழ்ச்சியில், டி.எம்.எஸ். பாடிய பல பாடல்களை எஸ்.பி.பி., மனோ, தேவா உட்படப் பலரும் பாடினார்கள். பாவாடை தாவணியில் பாடலை எஸ்.பி.பி. பாடி முடித்தவுடன், நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கிக் கொண்டிருந்த கங்கை அமரன், எம்.எஸ்.வி.யிடம், "இது மெட்டுக்கு பாட்டா? இல்லை பாட்டுக்கு மெட்டா?" என்று கேட்க, எம்.எஸ்.வி. சொன்னார்: "நிச்சயமாக துட்டுக்கு இல்லை!"

— கௌதம்ராம்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

